# காலந்தோறும் நந்தன் கதை

## இருபதாம் நூற்றாண்டுப் படைப்பிலக்கியத்தில் நந்தன் கதை

மா. உத்திராபதி, எம்.ஏ., பி.எட்., எம்.ஃபில்.
தமிழ் விரிவுரையாளர்
திரு.வி.க. அரசினர் கலைக் கல்லூரி
திருவாரூர்

விற்பனை உரிமை
நேத்ரா வெளியீடு
சென்னை-600 035

KALANTHORUM NANDAN KATHAI, M. UTHIRAPATHI (C), First Edition: JUNE 1989, Printed at Rasakili Printers, Madras-20, Cover Design By V. Santhanam, Sales Right: Nethra Veliyeedu, 18 North Road, West C. I. T. Nagar, Madras-35.

*காலந்தோறும் நந்தன் கதை, மா. உத்திராபதி (C), முதற்பதிப்பு: ஜூன் 1989, அச்சு: இராசகிளி பிரிண்டர்ஸ், சென்னை-20, அட்டை ஓவியம்: வீர. சந்தானம், விற்பனை உரிமை: நேத்ரா வெளியீடு, 18 வடக்குச் சாலை, மேற்கு சி. ஐ. டி. நகர், சென்னை-35.*

*விலை: ரூ. 15-00*

தமிழ் வளர்ச்சிக்கான சிறந்த நூல்களை வெளியிட நிதியுதவி வழங்கும் தமிழ்நாடு அரசின் திட்டத்தின்கீழ் நிதியுதவி பெற்று வெளிவரும் நூல்.

# காணிக்கை

இளங்கலை வகுப்பில் நுழைந்ததிலிருந்து ஆய்வு நிறைஞர் பட்டப் படிப்பு முடியும்வரை, எனக்கும் என் போன்றோர்க்கும் பாடங்கள் படித்துக் காட்டியும் எழுதுநர் ளாகப் பணியாற்றியும் தங்கள் நேரத்தை எங்கள் கல்விக்காக அர்ப்பணித்து வரும் நல்ல உள்ளம் படைத்தோர் யாவருக்கும்.

குறிப்பாக என்னைத் தங்கள் குடும்பத்தில் ஒருவனைப்போல் கருதி, கல்வி கற்க ஊக்குவித்தும், என் முன்னேற்றத்திற்காக அறிவுரைகள் ஆலோசனைகள் வழங்கியதோடு குறிப்பறிந்து பல உதவிகள் புரிந்தும் வாழ்க்கையைப் பொருளுடையதாக ஆக்கிய திரு. ச. சீ. கண்ணன் மைதிலி கண்ணன் தம்பதியினருக்கும்.

*மா. உத்திராபதி*

□

# நூலாசிரியர் பற்றி

தஞ்சை மாவட்டம் சீர்காழிக்கு அருகில் உள்ள திருமயிலாடி எனும் சிற்றூரில் 1.7.1957 அன்று திரு. மாசிலாமணிக்கும் திருமதி. தையல் நாயகியம்மாளுக்கும் பிறந்த திரு. உத்திராபதி கடலூரிலும் பூவிருந்த வல்லியிலும் உள்ள பார்வையற்றோர்க்கான சிறப்புப் பள்ளிகளில் மேல் நிலை வகுப்புவரை கல்வி கற்றார். பின்னர் சென்னை மாநிலக் கல்லூரியில் தமிழ் இலக்கியத்தைப் பாடமாகக் கொண்டு இளங்கலை, முதுகலைப் பட்டங்களையும் சைதை அரசினர் கல்வியியல் கல்லூரியில் கல்வியியல் பட்டத்தையும், சென்னைப் பல்கலைக்கழகத்தின் தமிழ் இலக்கியத்துறையில் டாக்டர் வீ. அரசு மேற்பார்வையில் ஆய்வு மேற் கொண்டு ஆய்வியல் நிறைஞர் பட்டத்தையும் பெற்றார்.

சமூகப் பிரக்ஞை மிக்க சிறந்த தமிழ்ப் பேச்சாளர். சிறுகதை, நாடகம் எழுதுவதில் நாட்டமுள்ளவர். சென்னை வானொலி நிலைய இளையபாரதம் நிகழ்ச்சியில் இவரது படைப்புகள் பல ஒலிபரப்பாகி யுள்ளன. தற்பொழுது திருவாரூர் திரு.வி.க. அரசினர் கலைக் கல்லூரியில் தமிழ் விரிவுரையாளராகப் பணியாற்றி வருகிறார். மணமானவர். துணைவியார் பெயர் சரசுவதி. இவர்களுக்கு ஒரு மகள் இருக்கிறாள்.

# அறிமுகம்

பத்தாண்டுகளுக்கு முன் பார்வையற்ற கல்லூரி மாணவர்களுக்குப் பாடங்கள் படித்துக் காட்டும் பணியை ஒரு பொழுது போக்காகவே மேற்கொண்டேன். அன்று ஏற்பட்ட தொடர்பு இன்றுள்ள அளவிற்கு ஒரு பிணைப்பை ஏற்படுத்தும் என்று கனவிலும் நினைக்கவில்லை. இந்த அளவிற்கு ஒரு பிணைப்பை ஏற்படுத்தியதற்குக் காரணமான சிலரில் திரு. மா. உத்திரபாதி முக்கியமானவர். சற்று வித்தியாச மானவருங்கூட. மற்ற பார்வையற்ற மாணவர்கள் தங்கள் தேர்வு களுக்குத் தேவையான பாடங்களை மட்டும் படிக்கச் சொல்லுவர்; தங்களுக்கு மட்டும் பயன்படவல்ல குறிப்புகள் எடுத்துக் கொள்வர். திரு. உத்திராபதி மட்டும் தனக்கு மட்டுமல்லாது தமிழ் இலக்கியம் பயிலும் எல்லாப் பார்வையற்ற மாணவருக்கும் பயன்படுமாறு தொல் காப்பியம், தமிழக சமூகப் பண்பாட்டு வரலாறு, பிற இலக்கண உரை நூல்கள் முதலிய பல அடிப்படை நூல்களை பிரெயில் ஆக்கம் செய்வதில் ஈடுபட்டார். அதிகாலையில் ஐந்தரை மணிக்கு என் வீடு தேடி வந்து தினம் இரண்டுமணியென நாலைந்து ஆண்டுகள் தொடர்ந்தாற் போல் இப்பணியைத் தொடர்ந்தாரென்றால் அவருடைய ஈடுபாடு எத் தன்மையது என ஊகிக்கலாம். இன்னும் அந்தப் பணியை மற்ற வாசிப்பாளரைக் கொண்டு தொடர்ந்து செய்து வருகிறார். பார்வை யற்ற கல்லூரி மாணவர் பட்டதாரிகள் சங்கத்தின் பிரெயில் நூலகத்தில் பெரும் பகுதி இவருடைய பங்களிப்பாகும்.

இத்தகையச் சமூகப் பிரக்ஞை நிறைந்தவர் தன் ஆய்வியல் நிறைஞர் பட்டத்திற்குச் சமூகக் கண்ணோட்டத்தில் ஆய்வு செய்யும் வாய்ப்பை அளிக்கவல்ல ஆய்வுப்பொருளை நாடியதில் வியப்பேது மில்லை; நான் நந்தன் கதையைப் பரிந்துரை செய்த பொழுது அது இவரால் இவ்வளவு விரிவான ஆய்வுக்கு எடுத்துச் செல்லப்படும் என்று எண்ணவில்லை, விரிவுரையாளர் டாக்டர் வீ. அரசு தான் இதைச் சாத்தியமாக்கினார் என்றால் மிகையாகாது. அதேசமயம் இன்னொரு பார்வைற்ற ஆய்வாளரின் பங்கையும் குறிப்பிட வேண்டும். அவர் தான் இன்று தமிழகத்தின் முதல் பார்வையற்ற பி. எச்டி பட்டதாரி யென விளங்கும் டாக்டர் தே. வீரராகவன். அவ்வமயம் வரலாற்றிய

லில் பி.எச்டிக்கான ஆய்வில் ஈடுபட்டிருந்த இவர் தமிழகச் சமூக அரசியல் வரலாறு பற்றிய தகவல்களையும் மேனிலையாக்க இயக்கங்கள் பற்றி வெளிவந்துள்ள நூல்கள் கட்டுரைகள் பற்றிய விவரங்களையும் அளித்து திரு. உத்திராபதியின் ஆய்வு செவ்வனே அமைய உதவினார். பெரும்பான்மையான நூல்களும் சஞ்சிகைகளும் என் நூலகத்திலேயே இருந்ததும் திரு. உத்திராபதியின் முயற்சியை எளிமையாக்கியது.

பார்வையற்ற ஆய்வாளர் மற்ற ஆய்வாளர்களைவிட அதிக அளவில் பிரச்சனைகளை எதிர்கொள்ள வேண்டியுள்ளது. நூல்கள் பிரெயிலில் இல்லாததாலும், பிரெயிலாக்கம் செய்தல் காலமும் செலவும் கருதின் இயலாததாலும் பிறர் படிக்கக் கேட்டு நினைவில் தேக்கி வைத்துக் கொள்ள வேண்டும். மேற்கோள்களாகப் பயன்படுத்த விரும்பும் பகுதிகளை மட்டும் எழுதுநர்களின் துணை கொண்டு அட்டைகளில் பதிவு செய்து கொள்ளலாம். கட்டுரை முழுவதையும் சிந்தித்து வைத்துக் கொண்டு எழுதுநர்களுக்குச் சொல்லவேண்டும். எழுத எழுத முன்னர் எழுதியதை மேல் நோக்காகப் பார்த்து தொடர்ச்சி கெடாமல் எழுதிச் செல்லும் வாய்ப்பு பார்வையுள்ளோர்க்கு உண்டு, பார்வையற்றோர்க்கு இல்லை. எழுதியதை ஒரு தடவைக்கு இரு தடவையாகப் படிக்கச் சொல்வது உதவியாளரின் பொறுமையைச் சோதிப்பதாகும். ஒரே, உதவியாளரைக் (எழுதுநரை) கொண்டும் எழுதி முடிக்க முடிவதில்லை. பல எழுதுநர்களின் உதவியை நாட வேண்டியுள்ளது. இதனால் எழுத்துவடிவங்கள் வேறுபடவும், எழுத்துப் பிழைகள் நேரவும் அதிக வாய்ப்பு உண்டு. இவற்றை ஒழுங்குபடுத்தி திருத்தி அமைக்க நல்ல பதிப்பாளரின் உதவி தேவை. இத்தனை இன்னல்களையும் சமாளித்து, கோவையாக முன்பின் முரணின்றிக் கட்டுரையை முடித்தல் ஒரு சாதனையென்றால் மிகையில்லை. நினைவாற்றல் திறன், தருக்க ரீதியாகச் சிந்திக்கும் திறன் ஆகியவற்றைப் பார்வையற்ற ஆய்வாளர் மற்றவரைவிட அதிக அளவில் வளர்த்துக் கொண்டால் மட்டுமே அவரிடமிருந்து நல்ல ஆய்வேடு உருவாக முடியும். திரு. உத்திராபதி இத்திறன்களை நன்கு வளர்த்துக் கொண்டுள்ளார் என்பதற்கு இந்நூல் சான்று பகரும். குறைகளிருப்பின், அவை பதிப்பாளரின் குறைபாடால் நேர்ந்தவையாகவே இருக்கும்.

திரு. உத்திராபதியின் இந்நூலை வெளியிட உதவ முடிந்ததை என் நற்பேறாகக் கருதுகிறேன், பார்வையற்ற ஆய்வாளர்கள் இலக்கியவாதிகள் ஆகியோரின் திறமான படைப்புக்களைத் தமிழ் மக்களுக்கு அறிமுகப்படுத்தி, அவர்களுக்கும் வாசகர்களுக்குமிடையே ஓர் உரையாடலுக்கு வழிவகுத்து, அவர்களுடைய படைப்பாற்றல் மேலும்

செழுமையடையச் செய்ய வேண்டும் என்ற அவாவில் 'நேத்ரா வெளியீடு' நிறுவனத்தை நிறுவியுள்ளேன். ''சென்னை நகரத்தில் தொழிலாளர் இயக்கத்தின் தோற்றமும் வளர்ச்சியும்'' என்ற ஆங்கில ஆய்வேட்டின் தமிழாக்கத்தைப் பாகம் பாகமாக வெளியிட முனைந்துள்ளேன். ''பார்வையற்ற ஆய்வாளர்கள்'' எனும் தலைப்பில்இதுவரை பார்வையற்ற ஆய்வாளர்களால் மேற்கொள்ளப்பட்ட ஆய்வுகள்பற்றிய நூலும் 1990-இல் வெளியிடப்படும். இம்முயற்சிகளுக்குத் தமிழ் மக்கள் ஆதரவு நல்குவார்கள் என நம்புகிறேன்.

*சென்னை-35* *ச. சீ. கண்ணன்*

# அணிந்துரை

***டாக்டர் சிலம்பொலி சு. செல்லப்பன்,***
எம்.ஏ., பி.டி., பி.எல்., பிஎச். டி.,
*தமிழ் வளர்ச்சி இயக்குநர்.*

குறளகம்,
சென்னை 600105.
6-6-89

தாழ்த்தப்பட்ட-தீண்டப்படாதவர் குலத்தில் உதித்த ஒருவர் தன் உண்மையான பக்தியால் இறைவன் திருவடிப் பேற்றினை அடைந்தார் என்பது நந்தன் கதை.

~~சேக்கிழார்~~ சுந்தரர் தாம் பாடிய திருத்தொண்டர் தொகையில் ''திருநாளைப் போவார்க்கும் அடியேன்'' என நந்தன் (நாளைப் போவான்) பற்றிக் குறிப்பிடுகிறார். பின்னர் நம்பி ஆண்டார் நம்பி அந்த நாளைப் போவான் (நந்தன்) கதையை ஒரே பாடலில் சுருக்கமாகக் கூறியுள்ளார். பின்னர் சேக்கிழார் தன்னுடைய திருத்தொண்டர் புராணத்தில் நந்தன் கதையை விரிவாகத் 'திருநாளைப் போவார் நாயனார் புராணம்' எனப் பாடியிருக்கிறார்.

19ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த கோபாலகிருஷ்ண பாரதியார் நந்தன் சரித்திரக் கீர்த்தனை பாடினார். அவர் காலத்திய ஆண்டான் அடிமை முறை, தாழ்த்தப்பட்டவர்கள் நிலக்கிழார்களிடம் அடிமைகளாக வாழ வேண்டிய நிலை ஆகியவற்றைச் சுட்டிக்காட்டும் வகையில் அவர் நந்தன் கதையில் சேக்கிழாரின் பெரியபுராணத்தில் இல்லாத வேதியர் பாத்திரத்தைப் படைத்துக் கொண்டுள்ளார். நந்தன் கதையில் புதுக் கதை மாந்தர்களைப் புகுத்தி தான் வாழ்ந்த காலக் கருத்துகளை முதலில் நுழையச் செய்தவர் கோபாலகிருஷ்ண பாரதியாரே எனலாம்.

இலக்கியம் காலத்தின் கண்ணாடி. இலக்கியப் படைப்புகளில் அவை தோன்றிய அந்தந்தக் காலத்திய சமூக அமைப்புகள், சிந்தனைகள் மற்றும் படைப்பாளர்களின் சமூக, பொருளாதார, அரசியல் கண்ணோட்டங்கள் இடம் பெறுதல் இயற்கையே. அந்த முறையில் காலந்தோறும் நந்தன் கதை எத்தகைய மாற்றங்களைப் பெற்றுள்ளது, குறிப்பாக 20ஆம் நூற்றாண்டில் இந்தக் கதை யார்

யாரால் எவ்வெவ்வாறு எடுத்தாளப்பட்டுள்ளது என்பதையும் இம் மாற்றங்கள் புலப்படுத்தும் கருத்துக்கள் எவை என்பதையும் திரு. உத்திராபதி அவர்கள் இந்த நூலில் திறம்பட விளக்கியிருக் கிறார்.

20ஆம் நூற்றாண்டில் தோன்றிய புதினம், சிறுகதை, கதாகாலட்சேபம், மேடை நாடகம், கவிதை நாடகம், வில்லுப்பாட்டு என ஆறு இலக்கிய வடிவங்களிலும் ஒவ்வொன்றுக்கும் ஒரு நூலாக நந்தன் கதை இங்கு எடுத்து ஆயப்பட்டுள்ளது.

தீண்டாமை ஒழிப்பு, சாதி சமத்துவம் என்பன போன்ற சமூக சீர்திருத்தக் கருத்துக்களை பல புதிய கதை மாந்தர்களைப் புகுத்தி திரு. ஆ. கோபாலசாமி அய்யங்கார், திரு க. ஆராவமுத அய்யங்கார் ஆகிய இருவரும் சேர்ந்து எழுதிய நந்தன் புதினம் வெளிப்படுத்து கிறது.

தாழ்த்தப்பட்டோரின் விடுதலையை அடிப்படையாகக் கொண்டு எழுதப்பட்டது புதுமைப்பித்தனின் புதிய நந்தன் சிறுகதை.

கல்வியால் சாதி பேதம் மறைய முடியும் என்பது நகைச்சுவை அரசர் திரு என். எஸ். கிருஷ்ணன் கிந்தனார் கதாகலாட்சேபம் வழி உணர்த்தப்படுகிறது.

கீழவெண்மணியில் 1968 டிசம்பர் 25ஆம் நாள் இரவு, விவசாயத் தொழிலாளர்களின் குடிசைகள் நிலவுடைமையாளர்களால் நெருப்பு வைத்துக் கொளுத்தப்பட்டன. 44 உயிர்கள் எரிந்து சாம்பலாயின. இந்நிகழ்ச்சியின் அடிப்படையில் எழுந்தது இந்திரா பார்த்தசாரதியின் நந்தன் நாடகம்.

திரு. முருகையனின் கோபுர வாசல் எனும் கவிதை நாடகம் பழைய நந்தன் கதையைக் கூறுவதோடு சம கால ஆலயப் பிரவேசப் போராட்டத்தை அடிப்படையாகக் கொண்ட காட்சியையும் கொண்டுள்ளது.

தீண்டாமை சைவ சமயத்தில் இடம் பெறவில்லை. அது இடைக் காலத்தில் புகுந்த பெரும் கேடு என்பதை விளக்க நந்தனார் ஆராய்ச்சிக் கதை வில்லுப்பாட்டு எழுந்தது.

இவ்வாறாக 20ஆம் நூற்றாண்டில் நந்தன் கதை எவ்வாறு காலச்சூழலின் மாற்றங்களுக்கேற்ப கையாளப்பட்டுள்ளது என்பதை நூல் திறம்பட விளக்குகிறது. செய்திகளைத் திரட்டி, தொகுத்து, வகைப்படுத்தி, தக்க ஆராய்ச்சி முடிவுகளைக் கூறும் ஆசிரியரின் திறன் பாராட்டத்தக்க வகையினது.

இத்துணை எழுதினாலும் இன்னும் தீண்டாமைக் கொடுமை, மக்களில் உயர்வு தாழ்வு கற்பிக்கும் மடமை முற்றிலும் ஒழிந்து விட்டது என்று கூற முடியாது.

*உறுதி! உறுதி! உறுதி!*
ஒன்றே சமூகம் என்றெண்ணார்க்கே-இறுதி! (உறுதி)
பிறவியில் உயர்வும் தாழ்வும் சொல்லல் மடமை-இந்தப்
பிழை நீங்குவதே உயிருள்ளாரின் கடமை...
தேசத்தினர்கள் ஓர்தாய் தந்திடுசேய்கள்-இதனைத்
தெளியா மக்கள் பிறரை நத்தும் நாய்கள்...

எனும் பாவேந்தர் பாரதிதாசனின் பாடற் கருத்து நாட்டில் நடை முறைக்கு வரும் நாளே நந்தர்கள் நந்நிலை பெறுகின்ற நாளாகும். இத்திருநாளைக் காண முயல்வோமாக!

*சு. செல்லப்பன்*

# நந்தன் மனிதனாகிட

பல்கலைக் கழக அளவில், தமிழில் மேற்கொள்ளப்படும் ஆய்வுகள் பெரும்பாலும் சடங்குகளாகி வருகின்றன, பதவி உயர்வுகளுக்கு ஆய்வுப் பட்டங்கள் இன்றியமையாத் தகுதிகளாக வற்புறுத்தப்பட்ட பின்பு, ஆய்வாளர்களின் எண்ணிக்கை கூடியது. வருமானத்துக்காக மட்டுமே பதவிகளையும் படிப்பையும் ஏற்றவர்கள், ஆய்வுகளையும் செய்து தொலைக்க வேண்டிய கடனாகக் கருதினார்கள், இதனால் புறநானூற்றில் பூச்சிகள், சிலப்பதிகாரத்தில் பூண்டுகள் என்ற போக்கிலேயே ஆய்வுகள் தொடர்கின்றன. தமிழ் ஆய்வுகளைப் பொறுத்தமட்டிலும் தரமான ஆய்வுகளைச் செய்தவர்களை விரல்விட்டு எண்ணிவிடலாம்.

தரமான ஆய்வு நூல்களைத் தேடிப்பிடிக்க வேண்டிய ஒரு சூழலில் மா. உத்திராபதியின் எம்.பில். பட்டத்துக்கான ஆய்வு, 'காலந் தோறும் நந்தன் கதை' என்ற தலைப்பில் நூலாக வருகிறது.

எம்.பில். பட்டத்துக்கான ஆய்வு என்ற எல்லைக்குள் நின்று இந்த நூலைப் படிக்கும் பொழுது, இது பத்தோடு பதினொன்று என்று எண்ணிச் செல்ல வேண்டிய ஒரு நூலாகப் படவில்லை. ஆய்வாளரின் ஈடுபாடும், முயற்சியும் நமது கவனத்தை ஈர்க்கின்றன. இது பார்வை யிழந்த மாணவர் ஒருவரின் நூல் என்று யாராலும் பரிந்துரைக்கப்பட வேண்டிய தேவையைத் தவிர்த்து நிற்கின்றது.

'அடியும் முடியும்' என்ற நூலில், 'புலைப்பாடியும் கோபுர வாசலும்' என்ற கட்டுரையில், க. கைலாசபதி நந்தன் கதையை ஆராய்ந்துள் ளார். இது அந்த ஆய்வின் தொடர்ச்சியாக நீள்கிறது. நந்தனைப் பற் றிய ஒரு புதினம், ஒருசிறுகதை, ஒரு கதா காலட்சேபம், ஒரு நாடகம், ஒருகவிதை, ஒருவில்லுப்பாட்டு ஆகியவை ஆய்வுக்குரியவையாகின்றன. இவை 1917-இல் இருந்து, 1982வரை படைக்கப்பட்டவை. இந்தக் கால கட்டங்களில், நந்தன் என்ற கதாபாத்திரம் தமிழ்ச்சமுதாய மாற்றத்தின் தவிர்க்க முடியாத குறியீடாக இருக்கிறான்.

தீண்டாமைக்கும், சமூக ஒடுக்கு முறைக்கும் எதிரான குரல் நந்தன் என்ற கதாபாத்திரத்தின் மூலமாகத் தான் உரக்கக் கேட்கிறது.

விவேகானந்தரிலிருந்து ஜெயகாந்தன் வரை நந்தன்களை மேல் நிலையாக்கம் செய்யும் நோக்கங்களை வலியுறுத்துகின்றனர். இந்த நோக்கங்கள் இன்றளவும் ஈடேறவில்லை; அதுமட்டுமன்று நந்தனுக்குப் பூணூல் போட்டுப் பார்ப்பது எந்த அளவில் அவனை விடுதலை பெற்ற மனிதனாக்கும் என்பதும் நாம் ஆழ்ந்து சிந்திக்க வேண்டிய ஒன்றாகும்.

தாம் எழுதிய 'நந்தன் கதை' நாடகத்தின் முன்னுரையில் இந்திரா பார்த்தசாரதி இதைத் தெளிவாகக் குறிப்பிடுகிறார்.

''இது நந்தன் கதைதான், நந்தனார் கதை அல்ல, 'ஆர்' என்பது சிறப்பு விகுதியன்று; சிலுவை. சமூக ஏற்றத்தாழ்வுகளைக் கண்டு சீறிய நந்தன், இந்த 'ஆர்' விகுதிக்காக, 'பார்ப்பானுடைய கைத்தட்டல் பெறுவதற்காக நெருப்பில் எரிந்து போன சோகக் கதையைச் சொல்லு கிறது இந்த நாடகம்'' என்கிறார்.

மேனிலையாக்கம் என்ற கோட்பாடு மனிதனை விடுதலை செய்ய உதவாது. ஒடுக்கப் பட்டவனை ஒடுக்குபவனாக்கும் மனோபாவத்தை வளர்க்கும்.

பாலோ பிரைரே குறிப்பிட்டதை இங்கு நினைவு கூர்வது பொருத்தமாயிக்கும்.

''அவர்களுக்கு மனிதனாக இருப்பது என்றால், அவர்களது எஜமானர்களா, ஒடுக்குபவர்களாக இருப்பதே ஆகும்... ஒடுக்குபவ னுடைய வாழ்க்கை முறையே மானுடத்துக்கான முன்மாதிரி ஆகிறது... ஒருநாள் அவர்கள், பணம், அதிகாரம், பெருமை முதலியவற்றால், தங்களது எஜமானர்களைப் போலவே உருவாக விரும்புகிறார்கள். சான்றாக விவசாயச் சீர்திருத்தங்கள் மூலமாக விவசாயிகள் விடுதலை பெற விரும்புவதில்லை, மாறாக நிலத்தை விலை கொடுத்து வாங்கி மற்றவர்களை அதிகாரம் செய்யவே விரும்புகிறார்கள்.''

மேலும் பாலோ பிரைரே தொடகிறார்:

''ஒடுக்கு முறையின் பருண்மையான சூழ் நிலையை விடுதலைக் கான வழி முறையின் மூலம் மாற்றும் புரட்சி கூட இந்தப் போக்கை எதிர்த்துப் போராட வேண்டியிருக்கும். புரட்சியில் நேரடியாகவோ, அல்லாமலோ பங்கேற்ற ஒடுக்கப்பட்டவர்களில் பலர், இதைத் தங்களது தனிப்பட்ட புரட்சியாகவே மாற்றவிரும்புகிறார்கள். முந்திய ஒடுக்குமுறையாளனின் நிழல் அவர்கள் மீது இன்னும் படிந்திருக் கிறது.''

பூணூலும் வேத பாராயணமும், விடுதலைக்கான சின்னங்கள் அல்ல. அவை மரபுவழிப்பட்ட ஒடுக்குமுறைச் சின்னங்கள்,

இன்று கல்விகற்று அதிகாரத்தில் அமரும் ஒரு சில தாழ்த்தப்பட்டவர்கள் பூணூல் அணியாதிருக்கலாம். வேதம் ஓதாதிருக்கலாம்-ஆனால் அவர்கள் பெற்ற கல்வி விடுதலைக்கான கல்வி அன்று. வளர்த்துக் கொண்ட சிந்தனை விடுதலைக்கான சிந்தனையன்று. இதனால் அவர்கள் இந்த வாழ்க்கை முறையை உடைப்பதற்கு மாறாக உறவுகளை உடைத்துக் கொள்கிறார்கள், மனோபாவத்தால் ஒடுக்குமுறையாளர்களுடனேயே தங்களை அடையாளப்படுத்த விரும்புகிறார்கள். இங்கு மேனிலையாக்கம் என்பது இந்த வகையில் நடைபெறுகிறது என்று சொல்லலாம். அதாவது ஒடுக்கப்பட்டவர்களே ஒடுக்குமுறையாளர்களாகிப் பெரும்பான்மையினரான ஒடுக்கப்பட்டவர்களை மேலும் ஒடுக்குவதாக...

'காலந்தோறும் நந்தன் கதை' ஆய்வு நூலைப் படித்து முடித்தால் இன்னும் நந்தன் கதைகளும், அவை தொடர்பான ஆய்வுகளும் வளரும் என்றே தோன்றுகிறது. நந்தனுடய விடுதலை நந்தன் தன்னை அந்தணனாகக் காண்பதில் இல்லை, புலையனாகக் காண்பதில் இல்லை, மனிதனாகக் காண்பதிலேயே என்றும் கூறத் தோன்றுகிறது. இதை யாரேனும் ஒருபடைப்பாளி நந்தனுக்கு உணர்த்தலாம்; அல்லது நந்தனே தனது கதையை நமக்குச் சொல்ல முன்வரலாம் அத்தகையதொரு சிந்தனைக்கு இந்த ஆய்வேடும் உதவும் என்று நம்புகிறேன்.

சென்னை-14
ஜூன் 11, 1989

இன்குலாப்

# நந்தன் தத்துவம்-ஒரு கண்ணோட்டம்

சுமார் நான்கு ஆண்டுகளுக்கு முன்பு பார்வையற்ற கல்லூரி மாணவர்கள் பட்டதாரிகள் சங்கம் நடத்திய பேச்சுப் போட்டியின் போதுதான் திரு. உத்திராபதி அவர்களைச் சந்திக்கும் வாய்ப்பு கிடைத்தது. அவர்கள் பொறுப்பேற்று நடத்திய அப்போட்டி பார்வையுள்ளோருக்கு. ஒரு முழு நாள் நிகழ்ந்த அப்போட்டியில் நான் ஒரு நடுவராகத்தான் பங்குபெறப் போனேன். ஆனால் ஒரு புது உலகத்தையே நெருங்கிக் கவனிக்க வாய்ப்புப் பெற்ற மாணாக்கனாகத் திரும்பிவந்தேன். மனித சிந்தனைக்கு மனித அமைப்பில் படைக்கப் பட்டிருக்கும் முதல் சாளரம்/பார்வை. ஆனால் அதுவே மறுக்கப்பட்ட சிலர், எப்பேர்ப்பட்ட மனோதிடத்துடனும் முயற்சியாலும் எவ்வளவு அரிய சாதனைகளை நிகழ்த்திவிடுகிறார்கள்! என் பிரமிப்பும் மதிப்பும் தோற்றுவித்தவை முற்றிலும் முழுதும் அருகதையுள்ளவையே என்று இன்னோர் நிரூபனமாக 'காலந்தோறும் நந்தன் கதை' என்ற இந்த ஆராய்ச்சி நூல் எனக்குப் படிக்கக் கிடைத்திருக்கிறது.

நந்தன் கதை பற்றிய சிந்தனையின் பின்னணிக்குக் குறைந்தது 1300 ஆண்டு வரலாறு இருக்கிறது. ஆனால் இக்கதை கூறப்படுவதற் குள் சமூகச் சூழ்நிலையும் சமூக சாத்தியமும் அதற்கு எவ்வளவு ஆண்டுகளுக்கு முன்பு நேரிட்டிருக்கும்? சாதியமைப்பு என்பது ஆரியர் கொணர்ந்ததொரு சமூக ஏற்பாடு என்றுதான் பரவலாக அறியப் படுகிறது. சாதிகளுக்கு முதற்படியான வருணப் பாகுபாடு பகவத் கீதை தொடங்கிப் பல வடமொழிப் படைப்புகளில் நுணுக்க மாகவும் திட்டவட்டமாகவும் கூறப்பட்டிருக்கிறது. ஆரியர்களே இவ்விலக்கியங்கள் தோன்றுவதற்குப் பல நூறு ஆண்டுகள் முன்பு காகஸஸ் பகுதியிலிருந்து சிதறி உலகின் பல்வேறு இடங்களில் குடி பெயர்ந்தவர் என்றும் வரலாறு கூறுகிறது. இந்த ஆரியர்கள் எங்கெங்கோ சென்றிருக்கிறார்கள், அங்கெல்லாம் ஏற்படாத சாதியமைப்பு இந்தியத் துணைக்கண்டத்தில் மட்டும் விரிந்து காணப் படுவதற்கு என்ன காரணம்? தத்துவ தளத்தில் மனிதன் மட்டுமல்லாது அனைத்து உயிரினங்களும் சடப் பொருள்களும் கூட ஒரு ஆன்மாவின்

வெவ்வேறு விகசிப்புகள் என்று குறிக்கப்பட்டாலும் சமூக வாழ்க்கையில் உயர்ந்தது, தாழ்ந்தது, உயர்ந்தோன், தாழ்ந்தோன் என்னும் எண்ணம் எப்படி அந்நாளில் எவ்வித எதிர்ப்பும் இல்லாமல் ஏற்கப்பட்டதோடு பல நூற்றாண்டுகள் இந்தியச் சமூகத்தின் அடி மனத்தில் ஊறிப் போனது?

சாதி அமைப்பின் ஒரு குரூர எல்லையாகத் தீண்டாமை அமைந்து விட்டது. உலக சமூகத்தின் அனைவரிடமும் உயர்ந்தவன் தாழ்ந்தவன் என்ற பாகுபாடு இருந்து அதன் காரணமாக உயர்ந்தோர் எளிதில் அணுக முடியாதவராக இருந்தது வரலாற்றில் நிறைய உள்ளது. சென்ற நூற்றாண்டில் தாய்லாந்து நாட்டின் அரச குடும்பத்துக்கு இதே காரணத்தால் பெரும் துக்கம் விளைந்தது. மூன்றாவது ராமா எனப்படும் அரசர் மிகுந்த உற்சாகத்தோடும் கவனத்தோடும் ஊருக்கு வெளியில் மிக அழகான கோடைவாச அரண்மனை கட்டினார். அரசர் தன் மனைவி, குழந்தைகளுடன் அங்கு வசிக்கப்போன சில நாட்களுக்குள் அவருடைய மிகப்பிரியமான ராணி தன் குழந்தையுடன் ஏரியில் குளிக்கச் சென்றிருக்கிறாள். அவளறியாது ஆழமான இடத்துக்குச் சென்றுவிட்டாள். அவள் தண்ணீரில் தத்தளித்துக் கொண்டிருந்தபோது பணியாட்கள் இருந்திருக்கிறார்கள். ராணியும் உதவிக்குக் கத்தியிருக்கிறாள். ஆனால் அரசகுலப் பெண்ணைத் தீண்டலாகாது என்னும் மரபு மிகச் சாதாரணமாகத் தோன்றும் தயையுணர்ச்சியையும் அமுக்கி விட்டது. ராணியும் ராஜகுமாரனும் இப்படி அபத்தமாக உயிரிழக்க அரசன் அந்த அரண்மனையையே துறந்தான்.

இந்தியத் தீண்டாமை, பக்தி அல்லது மரியாதை காரணமல்லாது பாவ புண்ணியங்களோடும் இணைக்கப்பட்டுவிட்டது. இது அறிவு பூர்வமானதல்ல, உண்மையான ஆன்மிகத்தில் இதற்கு ஒப்புதல் கிடையாது என்ற போதிலும் இது தொடர்ந்து இருந்திருக்கிறது. தீண்டாமைக்கு நேரிடையாக இல்லாது போனாலும் மறைமுகமாக எதிர்ப்பு தெரிவித்தவர்கள் உண்டு. முக்தியடைந்த பக்தர்கள் வரலாறுகளில் பல பக்தர்களை சமூகத்தால் ஈனமாகக் கருதப்பட்ட தொழில்களில் தம் பிறப்பு காரணமாக ஈடுபட்டிருந்ததாக அமைத்ததே தீண்டாமைக்கு எதிர்ப்புக் குரலாக கருதவேண்டும். சைவ சமயத்தில் நந்தன் வரலாறும் மனசாட்சிக் குமுறலாலும் சாதி எதிர்ப்பு உந்துதலாலும் ஏற்பட்டிருக்க வேண்டும். அந்தந்தக் காலத்தில் சமூகச் சூழ்நிலை அனுமதித்த வரம்புக்கிணங்க இது திரும்பத் திரும்ப உருப் பெற்றிருக்கிறது. பத்தொன்பதாம் நூற்றாண்டில் கோபாலகிருஷ்ண பாரதியார் 'நந்தனார் சரித்திரக் கீர்த்தனை' இயற்றியபோது இந்திய சமூகத்தில் ஒருபுறம் மேலை நாட்டாரின் முன்னேற்றமும்

திறனும் இந்தியர்களை அவர்களுக்கு அடிவருடிகளாகும் அளவுக்கு போற்றப்பட்டது; இன்னொரு திக்கில் காலம் காலமாக நீடித்து வந்த மரபைக் குலைக்க வந்த தீயசக்தியாக மேலைய மக்களும் அவர்கள் மொழிகளும் பழக்க வழக்கங்களும் கருதப்பட்டன. கோபாலகிருஷ்ண பாரதியார் ஓர் இறையடியார் பற்றிய நூலாகவே தம்முடைய படைப்பைக் கருதியிருக்க வேண்டும். ஆனால் மறைமுகமாக அது சமூகச் சீர்திருத்த இயக்கத்துக்குத் துணை போகும் உந்துதலாக அமைந்துவிட்டது.

நந்தன் பற்றிய நாவல் அதிகம் அறியப்படாததொன்று. ஆ. கோபால அய்யங்கார், கா. ஆராவமுத அய்யங்கார் என இரு ஆசிரியர்கள் 1917-ம் ஆண்டிலேயே இந்த நூலை எழுதி வெளி யிட்டிருக்கிறார்கள் என்று அறியும்போது வியப்பாகவே உள்ளது. இசைத் தமிழ் மிகவும் ரசிக்கத்தக்கதாயினும் அதன் வடிவத்தின் காரணமாக அதன் செய்தி நேரடியாகப் பாதிப்பு விளைவிக்க இயலாது. அறிவு பூர்வமாக ஒரு செய்தியைத் தெரிவித்து, விவாதிப் பதற்கு அனைத்துக் கலாச்சாரங்களிலும் உரைநடைதான் வலுவான சாதனமாக இருந்திருக்கிறது. உண்மையில் தமிழ் மொழியில் நந்தன் வரலாற்றின் செய்தியை ஓரளவு விரிவாகவும் நேரிடையாகவும் எடுத்துரைக்க முயற்சி செய்தது இந்த நாவல்தான். இதைத் தேடிக் கண்டுபிடித்துத் தமிழ் மக்களுக்குத் தெரியப்படுத்தியது இந்த ஆய்வு களின் மிகப் பெரிய பயன்களில் ஒன்று.

புதுமைப்பித்தனின் 'புதிய நந்தன்' சிறுகதை பிரதானமாக மதமாற்றத்தைச் சாடும் எண்ணத்தால் எழுதப்பட்டதோ என்று நினைக்க இடமிருக்கிறது. நந்தன் வரலாற்றின் இன்னொரு விரிவாக, இக்காலத்துப் பரிமாணாமமாகவே இது விளங்குகிறது. இந்திரா பார்த்தசாரதியின் 'நந்தன் கதை' நாட்டிய நாடகம், என். எஸ். கிருஷ்ணனின் 'கிந்தன் சரித்திரம்', இ. முருகையன் எழுதிய 'கோபுர வாசல்' கவிதை நாடகம், எம். சி. செயப்பிரகாசத் தின் வில்லுப்பாட்டு இவையனைத்தும் சிறு சிறு வேறுபாடுகளுடன் நந்தன் போன்றதொரு உன்னத மனிதனையும் மேல் வர்க்கத்தினர் சாமர்த்தியமாக தம் நிலையை வலுப்படுத்திக் கொள்ளப் பயன் படுத்திக் கொள்வதைச் செய்தியாகக் கொண்டிருக்கின்றன.

உத்திராபதி அவர்களின் இந்த ஆராய்ச்சி நூலின் சிறப்பு தான் கூறவந்த பொருளை ஓரளவு பூரணமாக எடுத்துரைத்து அதன்பின் விவாதித்திருப்பது. இந்த விவாதத்திலும் உணர்ச்சிவசப்படாமல் அவருடைய வாதங்களையும் கண்டுபிடிப்புகளையும் அனுமானங் களையும் தெரிவிக்கும் அவருடைய பாங்கு அவருடைய நூலின்

நம்பகத் தன்மையை மிகவும் உயர்த்திவிடுகிறது. சமீபகாலத்தில் தமிழகத்தின் அரசியல் போக்குகளை அக்கறையோடு கவனித்து வருபவர்களுக்குச் சாதியின் பேரால் வேற்றுமை பாராட்டி அரசியல் மற்றும் பொருளாதார ஆதாயங்கள் பெறுவது மேன்மேலும் அதிகரித்து வருவது தெரியும். நந்தன் வரலாற்றில் அவனை வாட்டி வதைப்போன் இனத்தின் கொத்தளம் இன்று அரசியல் கோட்டை களிலிருந்து அநேகமாகப் பூரணமாக விலக்கப்பட்டாயிற்று. அந்த விதத்தில் நந்தன் வரலாற்றின் இலக்குப் பூர்த்தியாகிவிட்டது. ஆனால் தமிழ் சமுதாயத்தில் பிறப்பின் காரணமாக வேற்றுமை பாராட்டுவது அகன்று விட்டதா?

அகலவில்லை, நிலைமை தீவிரமாகிவிட்டது, வேறு உருப்பெற்று வாட்டுகிறது என்று பதில் கிடைத்தாலும் சமூக ஞானமும் சமூக அக்கறையும் கொண்டவர்கள் உண்மையான சமத்துவத்தை மக்களிடையே கொணர முயன்ற வண்ணமே இருப்பார்கள். அவர்கள் பணி மகத்தானது. அதற்கு மகத்தான பாரம்பரியம் உள்ளது. திரு. உத்திராபதியின் இந்த முயற்சி அந்த வரிசையில் வைத்துப் போற்றுதற்குரியது. இதிலுள்ள தகவல்கள் புத்தம் புதியன என்பது மட்டுமல்லாமல் அவருடைய விவாதங்களும், கணிப்புகளும் தர்க்க ரீதியாகப் பொருத்தமாயிருப்பதுடன் முறையான இலக்கியத் திறனாய் வாகவும் உள்ளன. இந்த ஆய்வு முதலில் அவர் எம்.ஃபில். பட்டத்துக் காக மேற்கொண்டு எழுதப்பட்டது. ஒரு கல்வித் தகுதிக்காக மேற் கொள்ளப்படும் பல ஆய்வுகள் அந்த ஓர் இலக்கோடு முடிந்து விடுகின்றன. அவை பரவலாக மக்களுக்கு அளிக்கவும் தேவை யில்லாமல் போய்விடுகிறது. ஆனால் திரு உத்திராபதியின் ஆய்வு அனைத்துத் தமிழர்களும் அறிந்து பயன் பெறக்கூடியது; பலமன நெருடல்களையும் குழப்பங்களையும் அகற்றித் தெளிவு தரக் கூடியது. திரு. உத்திராபதி அவர்களுக்கு என் மனமார்ந்த பாராட்டுக்கள். அவர் தமிழ் மக்களுக்கும் உலக மக்களுக்கும் பல பணிகள் புரிய என் மனமார்ந்த வாழ்த்துக்கள்.

சென்னை, அசோகமித்திரன்.
ஜூன் 8, 1989.

# நன்றியுரை

''இருபதாம் நூற்றாண்டுப் படைப்பிலக்கியத்தில் நந்தன் கதை ஓர் ஆய்வு'' என்னும் தலைப்பில், ஆய்வு நிறைஞர் (M. Phil) பட்டத் திற்காக நான் சென்னைப் பல்கலைக்கழகத்திற்கு அளித்த ஆய்வே இப்பொழுது இந்நூலாக உருவாகியுள்ளது.

இந்த ஆய்வுப் பொருளைத் தேர்ந்தெடுக்கும்படி யோசனை கூறியவர் பார்வையற்ற கல்லூரி மாணவர்களுக்கெல்லாம் உறுதுணை யாக இருக்கும் திரு. ச. சீ. கண்ணன் அவர்களே. அவ்வமயம் 'புதிய நந்தன்' என்னும் புதுமைப்பித்தனின் சிறுகதை தொலைக்காட்சி நாடகமாக ஒளிபரப்பப்பட்டிருந்தது. சென்னையில் 'பரீக்ஷா' நாடகக் குழுவினர் இந்திரா பார்த்தசாரதியின் 'நந்தன் கதை' நாடகத்தை மேடையேற்ற முயற்சிகள் செய்து வந்தனர். இந் நிகழ்ச்சிகளைப் பற்றிக் கூறி நந்தன் கதை அடையும் மாற்றங்கள் ஆராயப்படத் தக்கவையெனக் கருத்து தெரிவித்தார்.

சென்னைப் பல்கலைக் கழகத் தமிழ் இலக்கியத்துறை விரிவுரையாளரும் என் ஆய்வு மேற்பார்வையாளருமான டாக்டர் வீ. அரசு அவர்கள் இந்த யோசனையை உற்சாகத்துடன் ஏற்றுக் கொண்டதோடு நின்றுவிடாது ஆய்வு தொடர்பான பல நூல்களைத் தேடித் தந்தார். குறிப்பாக கிட்டத்தட்ட எழுபது ஆண்டுகளாக எங்கோ ஒளிந்து கிடந்த 'நந்தன்' என்னும் புதினத்தைத் தேடித் தந்தது என் ஆய்வுக்குச் செய்த உதவி என்பதைவிட தமிழ் இலக்கிய வரலாற்றுக்கே அளித்த மாபெரும் பங்களிப்பு எனலாம். இப் புதினம் இந்நூலில்தான் முதன் முதலாகத் திறனாய்வு செய்யப்படுகிறது. இன்னும் பல வகையில் ஆய்வை நல்ல முறையில் நெறிப்படுத்தி உதவிய டாக்டர் வீ. அரசு அவர்களுக்கு என் முதல் நன்றி உரியது.

அரசியல் சமூகப் பொருளாதார மாற்றங்களுடன் நந்தன் கதை அடையும் மாற்றங்களை இணைத்துப் பார்ப்பதே ஆய்வின் நோக்க மாக அமைந்தது. இதற்காகத் தமிழகத்து அரசியல் சமூகப் பண் பாட்டு வரலாறு பற்றிய நூல்களும் கட்டுரைகளும் பல தேவைப் பட்டன. தான் நடத்தும் கார்ல்மார்க்ஸ் நூலகத்திலிருந்த பல நூல்களையும் சஞ்சிகைகளையும் நல்கிய தோடல்லாமல் மற்ற நூலகங்

களிலிருந்தும் நூல்களை எடுத்துத்தந்தும், மிகக் கடினமான ஆங்கிலக் கட்டுரைகளைத் தமிழில் விளக்கியும் உதவிய திரு ச. சீ. கண்ணன் அவர்களுக்கு நன்றி சொல்லித் தாளாது. ஆய்வு வெற்றிகரமாக முடிந்த பின்னர் ஆய்வேட்டை நூலாக வெளியிட வேண்டுமென்று என்னை வற்புறுத்தியதுடன் நிதியுதவியும் செய்துள்ளார்.

மேலும் வரலாற்றுச் செய்திகள் பலவற்றை எடுத்துக் கூறி ஆய்வுக்கு உதவி செய்த டாக்டர் வீரராகவன் பி.எச்டி. அவர்களுக்கு என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

ஆய்வுக்குத் தேவைப்பட்ட நூல்களைப் படித்துக் காட்டியும், குறிப்புகள் எடுத்துத் தொகுத்தும் எழுதுநர்களாகப் பணியாற்றியும் உதவிய வித்யா வெங்கடேசன், பத்மா இராமசுவாமி ஆகியோருக்கும், 'கிந்தன் சரித்திரம்' ஒலிப்பதிவு நாடாவை அளித்துதவிய திரு. பசுமைக்குமார் அவர்களுக்கும் நன்றி கூறக் கடமைப் பட்டுள்ளேன்.

ஆய்வேட்டைப் பரிசீலனை செய்து, தமிழ் வளர்ச்சிக்கான சிறந்த நூல்களை வெளியிட நிதி வழங்கும் தமிழ் நாடு அரசின் திட்டத்தின் கீழ் நிதியுதவி பெறத் தகுதி உடையது என்று பரிந்துரை செய்த வல்லுநர்குழுவுக்கும், தமிழ் வளர்ச்சி இயக்குநர் டாக்டர் சிலம்பொலி சு. செல்லப்பன் அவர்களுக்கும், தமிழ் வளர்ச்சி பண்பாட்டுத்துறைச் செயலர் டாக்டர் அவ்வை நடராசன் அவர் களுக்கும் என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

இந்நூலை அழகுற அச்சேற்றி அளித்துள்ள இராசகிளி அச்சகத்து நண்பர்களுக்கும், முகப்பு ஓவியம் வரைந்து உதவியுள்ள ஓவியர் வீர. சந்தானம் அவர்களுக்கும் என் நன்றி உரியது.

நூலுக்கு அணிந்துரையளித்துள்ள டாக்டர் சிலம்பொலி செல்லப்பன் அவர்களுக்கும், வாழ்த்துரை வழங்கியுள்ள கவிஞர் இன்குலாப், எழுத்தாளர் அசோகமித்திரன் அவர்களுக்கும் என் உளங்கனிந்த நன்றியைக் கூற விழைகிறேன்.

தமிழ் கூறும் நல்லுலகம் இந்நூலை வரவேற்று ஆக்கரீதியான நிறைகுறை ஆய்வு செய்து என்னை ஊக்குவிக்கும் என்று நம்பு கிறேன்.

6-6-89

மா. உத்திராபதி

## பொருளடக்கம்

## சுருக்கக் குறியீடுகள்

| | | |
|---|---|---|
| ப. | — | பக்கம் |
| பக். | — | பக்கங்கள் |
| மு.கூ.நூ. | — | முன்னர் கூறப்பட்ட நூல் (op.cit) |
| மே.நூ. | — | மேற்கண்ட நூல் (ibid) |
| ப-ர் | — | பதிப்பாசிரியர் |
| தொ-ர் | — | தொகுப்பாசிரியர் |
| க. | — | கட்டுரை |

### நூல்கள்

| | | |
|---|---|---|
| ஆ | — | ஆண்மை (சிறுகதைத் தொகுப்பு) |
| கி.ச. | — | கிந்தன் சரித்திரம் |
| கோ.வா. | — | கோபுரவாசல் |
| ந.ஆ.க. | — | நந்தன் ஆராய்ச்சிக் கதை (வில்லுப்பாட்டு) |
| ந.க. | — | நந்தன் கதை (நாடகம்) |
| ந.ச.கீ. | — | நந்தனார் சரித்திரக் கீர்த்தனை (கோபாலகிருஷ்ண பாரதியார்) |

# முன்னுரை

வேதங்கள், பிராமணங்கள், உபநிடதங்கள் ஆரண்யங்கள் போன்ற மிகப்பழமையான நூல்களில் எண்ணற்ற கதைக்குறிப்புகள் காணக் கிடக்கின்றன. இவை பின்னர் இதிகாசங்களாகவும் புராணங் களாகவும் காப்பியங்களாகவும் உருப்பெற்றன. இவ்வாறு உரு வாகிய கதைகளில் வரும் கதை மாந்தர்களின் பெயர்கள் மக்களின் அன்றாடப் பேச்சு வழக்கிலும் அடிப்படுவதைக் காணலாம். அந்த அளவிற்கு இவை மக்களின் அடிமனத்தில் இடம் பெற்றுள்ளன.

பிற்கால இலக்கியங்களிலும், இப் பழங்கதைகள் சிற்சில மாற்றங் களுடன் வெவ்வேறு வடிவங்களில் புத்துயிர் பெற்று வருவதைக் காணலாம். சமுதாய மாற்றங்களின் விளைவாக, இலக்கியம் படைக்கப்படும் காலத்துச் சமூக நிகழ்ச்சிகளையும் எண்ணங்களையும் விளக்கும் வகையில் இக்கதைகளில் மாற்றங்கள் செய்யப்படுவது ஓர் இலக்கிய மரபாக இருந்து வருகிறது எனலாம்.

தமிழ் இலக்கியத்திலும் இம்மரபைக் காணலாம். கண்ணகியைப் பற்றிய கதைகள் பலவும் இம்மரபில் தோன்றியவை. பெரிய புராணத்தில் கூறப்பட்டிருக்கும் அறுபத்திமூன்று நாயன்மார்களின் கதைகளில் பல இம்மரபில் பிற்காலத்தில் பல்வேறு வடிவங்களில் இலக்கியப் படைப்புகளாக உருப்பெற்றிருக்கின்றன. இங்ஙனம் இம்மரபிற்கு உட்படுத்தப்பட்ட கதைகளில் திருநாளைப்போவார் எனும் நந்தனார் கதையும் ஒன்று.

தமிழ்நாட்டில் சாதி அடிப்படையில் உயர்வு தாழ்வு கருதுவதும் தாழ்த்தப்பட்ட சாதியினருக்கு மனித உரிமைகள் மறுக்கபபடுவதும் பன்னெடுங்காலமாக இருந்து வருகின்றன. கீழ்ச்சாதியினருக்கும் மேற்சாதியினருக்குமிடையேயுள்ள முரண்பாடுகளின் தன்மை காலத் திற்குக் காலம் வேறுபட்டு வந்துள்ளது. கீழ்ச்சாதியினர் தம் நிலையை உயர்த்திக் கொள்ள பலவாறு முயற்சிகள் மேற்கொண்டு வந்துள்ளனர். இம்முயற்சிகள் இன்றும் முரண்பாடுகளுக்குத் தீர்வு காணுமளவிற்கு வெற்றிபெறவில்லை. தொடர்ந்து நிலவும் முரண் பாடுகள் படைப்பிலக்கியத்தின் கவனத்தை ஈர்ப்பது இயல்பே

கீழ்ச்சாதியைச் சேர்ந்த நந்தனின் கதை இலக்கியப் படைப்பாளி களால் மீண்டும் மீண்டும் மறுபரிசீலனை செய்யப்பட்டு, புதிய கருத்துகளுடன் மறுவார்ப்பு செய்யப்படுவதைக் காணலாம்.

பத்தொன்பதாம் நூற்றாண்டில் வாழ்ந்த கோபால கிருஷ்ண பாரதியார் 'நந்தனார் சரித்திரம்' எனும் தன் கலைப்படைப்பில் தன் காலத்துச் சிந்தனைகளையும் சமுதாய அமைப்பையும் கருத்திற் கொண்டு நந்தன் கதையில் மாற்றங்கள் புகுத்தியிருப்பதைப் பேராசிரியர் க. கைலாசபதி 'புலைபாடியும் கோபுரவாசலும்' எனும் கட்டுரையில் சுட்டிக் காட்டியுள்ளார். சமகாலத்தவரான ஈழக்கவிஞர் முருகையனின் 'கோபுரவாசல்' எனும் கவிதை நாடகத்தையும் இதே அணுகுமுறையில் பேராசிரியர் கைலாசபதி இக்கட்டுரையில் திறனாய்வு செய்துள்ளார். அவருடைய ஆய்வின் தொடர்ச்சியாக இவ்வாய்வாள ரின் இந்நூல் அமைகிறது. இருபதாம் நூற்றாண்டுத் தமிழ் படைப் பிலக்கியத்தில் நந்தன் கதை எவ்வாறு காலச் சூழல் மாற்றங்களுக்கு ஏற்ப வெவ்வேறு முறையில் கையாளப்பட்டுள்ளது என்பதை ஆய்வதே இந்த ஆய்வின் நோக்கமாகும்.

இந்த ஆய்விற்கு இருபதாம் நூற்றாண்டில் படைக்கப் பெற்ற ஆறு படைப்புகள் மட்டுமே எடுத்துக்கொள்ளப்பட்டன. அவை யாவன: கோபாலசாமி அய்யங்காரும் ஆராவமுத அய்யங்காரும் 1917-ல் எழுதி வெளியிட்ட '**நந்தன்**' என்ற புதினம்; 1930களில் வெளிவந்த புதுமைப்பித்தனின் சிறுகதை, '**புதியநந்தன்**'; இந்தியா சுதந்திரம் பெற்றவுடன் ஏற்பட்ட நம்பிக்கையின் வெளிப்பாடாக 1947-இல் நகைச்சுவை நடிகர் கலைஞர் என். எஸ். கிருஷ்ணன் நடத்திவந்த '**கிந்தன் சரித்திரம்**' கதாகாலட்சேபம்; 1968 டிசம்பரில் நடந்த கீழவெண்மணி நிகழ்ச்சியின் தாக்கத்தில் தோன்றிய இந்திரா பார்த்தசாரதியின் மேடைநாடகம், '**நந்தன் கதை**'; ஈழத்துக்கவிஞர் முருகையனின் '**கோபுர வாசல்**'; கீழவெண்மணி நிகழ்ச்சியின் தாக்கத்தால் உருவானதுதான் என்றாலும் 1982-இல் மீனாட்சிபுர மதமாற்றக் கலவரத்திற்குப்பின் நூல் வடிவம் பெற்ற "**நந்தனார் ஆராய்ச்சிக் கதை**" எனும் வில்லுப்பாட்டு.

ஒவ்வோர் இலக்கிய வடிவத்திற்கும் ஒருநூல் மட்டுமே ஆய் விற்கு எடுத்துக் கொள்ளப்பட்டுள்ளது. யமுனா முத்தையா எழுதிய 'நந்தனார் புரட்சி' என்னும் கதாகாலட்சேபம், டி. செல்வராசு எழுதிய 'நந்தன்' என்கிற நாடகம், தமிழன்பன் படைத்துள்ள 'அந்த நந்தனை எரித்த நெருப்பின் மிச்சம்' என்னும் புதுக்கவிதை ஆகியவையும் இன்னும் பிறவும் ஆய்வு விரிவு கருதி எடுத்துக் கொள்ளப்படவில்லை. படைப்பிலக்கியங்களின் உள்ளடக்கம் மட்டுமே ஆய்விற்கு உட்படுத்தப்பட்டுள்ளது. இந்நூல், முன்னுரை முடிவுரை

நீங்கலாக, ஏழு இயல்கள் கொண்டது. முதல் இயலில், புராணக் கதைகள் பழங்கதைகள் ஆகியவை இலக்கியங்களில் ஏன் இடம் பெறுகின்றன என்பது பற்றி யுங், பிரை, கைலாசபதி ஆகியோர் கருத்துகள் விவாதிக்கப்படுகின்றன; இவ்வாறு இலக்கியங்களாக மறு உரு எடுக்கும்பொழுது எவ்வெவ்வகையில் காலத்தேவைக்கு ஏற்ப மாற்றத்திற்குள்ளாகின்றன என்பது விவரிக்கப்படுகிறது; இருபதாம் நூற்றாண்டில் விடுதலைக்கு முன்னரும் பின்னரும், வெவ்வேறு கால கட்டங்களில் தாழ்த்தப்பட்ட வகுப்பினர் நிலையை மேம்படுத்தத் தோன்றிய இயக்கங்கள் விவரிக்கப்படுகின்றன. இறுதி யாக, நந்தன் கதை திருத்தொண்டத்தொகையில் முதன் முதலாகக் குறிப்பிடப்பட்டதிலிருந்து கோபால கிருஷ்ண பாரதியாரின் நந்தனார் சரித்திரக் கீர்த்தனை வரை எவ்வாறு விரிவடைந்தும் திரிந்தும் வந்துள்ளது என்பது கூறப்படுகிறது.

அடுத்த ஆறு இயல்களில், முறையே நந்தன் கதையின் தாக்கத்தில் படைக்கப்பட்ட ஆறு நூல்களும் ஒவ்வொன்றாக ஆய் விற்கு உட்படுத்தப்படுகின்றன. ஒவ்வோர் இயலிலும், அந்நூல் தோன்றிய காலத்து சமூக அரசியல் சூழல் விவரிக்கப்பட்டு அவ்வக் காலக் கருத்துகள் எவ்வாறு இலக்கியப் படைப்பைப் பாதித்திருக் கின்றன என்பது எடுத்துக்காட்டப்பட்டுள்ளது. காலத் தேவையைப் பூர்த்தி செய்வதில் ஒவ்வொரு நூலும் எந்த அளவிற்கு வெற்றி கண்டுள்ளது, எவ்வகையில் குறைபாடுடையது என்பனவும் விவா திக்கப்படுகின்றன.

முடிவுரையில், முந்தைய ஏழு இயல்களில் கூறப்பட்டவற்றைச் சுருங்கக்கூறி, அவற்றின் அடிப்படையில் ஆய்வுமுடிவுகள் கூறப் பட்டுள்ளன.

# படைப்பிலக்கியமும் புராணக் கதைகளும்

"பழைய கதைகளையும் அடிக்கருத்துக்களையும் ஐதிகங்களையும் கையாண்டு தத்தம் காலத் தேவைக்கு ஏற்ப இலக்கியம் படைப்பது எல்லாக் காலங்களிலும் புலவர்களின் முயற்சிகளில் ஒன்றாக இருந்திருக்கிறது" என்பார் பேராசிரியர் கைலாசபதி.[1] வேத கீதங்களிலும் பிராம்மணங்களிலும் சொல்லப்பட்ட அகலிகை கதை வான்மீகி இராமாயணத்தில் இலக்கிய வடிவம் பெற்றது. பரிபாடல், கம்ப ராமாயணம் ஆகியவற்றில் இக்கதை பல மாற்றங்களைப் பெற்று இடம் பெற்றுள்ளது. பல நூற்றாண்டுகட்குப் பின்னர் "அகலிகை வெண்பா" எனும் பெயரில் மேனாட்டு மகாகவியின் "லுக்கிர்சின் மானபங்கம்" என்ற நூலின் தழுவலாக வெ. ப. சுப்பிரமணிய முதலியார் அவர்களால் எழுதப்பட்டுள்ளது.[2] எம். வி. வெங்கட்ராம், புதுமைப்பித்தன் ஆகியோரால் புதுமைக் கருத்துக்கள் அடிப்படையில் மாற்றம் பெற்று இறுதியாக விந்தனிடம் முழுவதும் ஒரு புதுவகைப் பாத்திரமாக உருப்பெற்றுள்ளது.[3] இதே மாதிரி பல இதிகாச புராணக் கதைகள் தற்காலத்து ஆசிரியர்களால் புதுக்கருத்துக்கள் புகுத்தப்பட்டுப் புது வடிவங்களில் உருமாற்றம் பெற்றும் தமிழிலக்கியப் படைப்புகளாக வந்துள்ளன. மேலைநாட்டு இலக்கியங்களிலும் இத்தகைய போக்கைக் காணலாம். மகாகவி ஷேக்ஸ்பியரின் நாடகங்கள் பலவும் கிரேக்கக் கதைகளை அடிப்படையாகக் கொண்டவை. ஆனால், அவற்றில் அவருடைய காலத்து அரசியலும் சமூகப் பின்னணியும் ஊடுருவி நிற்பதை உணரலாம். இதே போல் 'பாஸ்ட் (Faust) என்ற பழங்கதை லெஸ்ஸிங், மார்லோ, கதே, பால் வலேரி போன்ற பல செர்மானிய, பிரஞ்சு எழுத்தாளர்களால் வெவ்வேறு கோணங்களில் ஆராயப்பட்டு புதிய புதிய வடிவங்களில் நவீன இலக்கியப் படைப்புகளாக உருப்பெற்றது பற்றி ஹன்ஸ் ராபட்ர்டு யவ்சு எனும் செர்மானியத் திறனாய்வாளர் ஓர் ஆராய்ச்சியே மேற்கொண்டுள்ளார்.[4] வடமொழி இலக்கியத்திலும் ஊர்வசி என்னும் ரிக்வேத பாத்திரம் காளிதாசன் கையில் பெரும் காப்பியமாக உருப்பெற்றுள்ளது. இவ்வகையில் பல்வேறு இலக்கிய உருவாக்கங்கள் உண்டு. விரிவு கருதி அது தொடர்பான விளக்கங்கள் இங்கு கொடுக்கப்படவில்லை.

பழங்கதைகள் அடிக்கடி இலக்கியத்தில் இடம் பெறுவதற்கான காரணங்கள் பற்றி பல கருத்துக்கள் நிலவுகின்றன. கார்ல் குஸ்தவ் யுங் (Carl Custav Jung) என்னும் செர்மானிய உளவியலாளர் ''கூட்டு அடிமன உணர்வு'' (Collective Unconscious) பற்றி கூறும் போது ''மனித இனத்தவர்கள் ஆதிகாலத்தில் பெற்ற அனுபவங்கள் அழியா நினைவுகளாகப் பரம்பரை பரம்பரையாகக் காப்பாற்றப்பட்டு அவர்களுடைய அடிமனத்தில் இடம் பெற்று விடுகின்றன. இந் நினைவுகளே தற்கால மனிதனை அவனுடைய ஆதிகாலத்துடன் இணைத்து விடுகின்றன. சில கருத்துப் படிமங்களாக, பழங்கதை களாக தொன்மப் படிமங்கள் எனப்படும் உருவக மாந்தராக (Archetypes) திரும்பத் திரும்ப மக்களின் பேச்சிலும் கலையிலும் எழுத்திலும் தோன்றுவது இவ்வடிமன நினைவுகளின் வெளிப்பாடே யாம். சில குறிப்பிட்ட தொன்மப் படிமங்கள், கருத்துப் படிமங்கள், பழங்கதைகள் ஆகியவற்றுடன் இணைத்துப் பார்த்து தற்கால இலக்கியப் படைப்புகளின் சக்தியையும், முக்கியத்துவத்தையும் விளக்க முடியும்'' என்று கூறியுள்ளார். இதுவே யுங் அவர்களின் உளவியற் கோட்பாட்டின் அடிப்படையில் தோன்றிய இலக்கியத் திறனாய்வுக் கொள்கை ஆகும். ''கலைத் தன்மையான படைப்பு மற்றும் கலையின் செயல் திறம் ஆகியவற்றின் இரகசியம் ஒரு பரம மோன கதியான நிலைக்குத் திரும்பிச் செல்வதில் அடங்கி யிருக்கிறது. இந்நிலையில் ஏற்படும் மனித அனுபவம் அலாதி யானது. தான், தனி நபராக அல்லாது மனித இனத்தவனாக வாழ்வதாக உணர்கிறான். தனியொரு மனிதரின் இன்ப துன்பம் பெரிதில்லை. மனித இன இருத்தலே முக்கியம்'' என்கிறார் யுங்.[5]

யுங் அவர்களின் சிந்தனையை அடித்தளமாக வைத்து பிரை (Northrop Frye) தன் திறனாய்வுக் கோட்பாட்டுக் கட்டடத்தை எழுப்பினார். ''இயற்கையில் மாறி மாறி வரும் பருவங்கள் புராணக் கதைகளில் உருவகப்படுத்தப்படுகின்றன. எனவே புராணக் கதை களில் இருவிதக் கட்டமைப்புகளைக் காண்கிறோம். ஒன்று ஏறுமுக மானது; விடியல், வசந்தம், பிறப்பு, திருமணம், மீண்டெழுதல் ஆகியவற்றை உருவகப்படுத்துவன. மற்றது இறங்கு முகமானது; இரவு, பனிக்காலம், இறப்பு, உருமாற்றம், பலி ஆகியவற்றை உருவகப்படுத்துவன. இலக்கியத்திலும் இன்பியல் துன்பியல் ஆகிய வற்றின் அமைப்புகளும் இவற்றின் அடிப்படையிலேயே அமை கின்றன'' என்றும் ''இலக்கிய வரலாறு முழுவதையும் நோக்கினால் அது ஆதிகாலத்திய மிக இயற்கையான எளிய வடிவங்களிலிருந்து நவீன காலத்திய மிகச் செயற்கையான சிக்கல் மிகுந்த வடிவங்களுக்கு மாறியிருக்கிறதைக் காணலாம். எனவே ஆதிகாலப் பண்பாட்டில்

காணக்கூடிய எளிய மிகக் குறுகிய தன்மையுடைய சூத்திரங்களின் சிக்கல் படுத்தப்பட்ட வடிவமாக இலக்கியத்தைக் காண முடியும். சடங்கு, புராணக்கதை, நாட்டார் கதை போன்ற இலக்கிய வரலாற்றிற்கு முன்னர் நிலவிய கூறுகள் இலக்கியத்தில் இடம் பெற்றிருக்கும் பாங்கை ஆராய்ந்திடும் தொன்மப் படிமங்களைத் தேடல் ஒருவிதமான இலக்கியத்தின் மானுடவியல் எனலாம்" என்றும் அவர் கூறுகிறார்.[6] பிரை நம்மை ஒரு பிரமையில் ஆழ்த்துகிறார். புராண காலத்து அம்சங்கள் இன்னும் இன்றையச் சமுதாயத்தில் இயங்கி வருகின்றன என்பதே அவர் கோட்பாட்டின் உட்பொருள். தற்கால இலக்கியத்தில் இன்று நிலவும் தன்மைகளைக் காணாமல் ஆதிகாலத்திற்கு இட்டுச் சென்று ஆதிகால மனித சிந்தனையுடன் நம்மை இணைக்க முயல்கிறார். ஆதிகால மனித சிந்தனைக்கும், இன்றைய மனித சிந்தனைக்குமுள்ள தொடர்பை வலியுறுத்துகிறார். வரலாற்று ரீதியாகவும் சமூகக் கண்ணோட்டத்துடனும் இலக்கியத்தையும் இலக்கிய வரலாற்றையும் மதிப்பீடு செய்யத் தவறுகிறார்.

புராணக்கதை அடிப்படையில் செய்யப்படும் இலக்கியத் திறனாய்வை வேறுவிதமாகவும் அணுகலாம். பழங்கதைகள் இன்று நமக்கு மதிப்புள்ளனவாக இருப்பதற்குக் காரணம் நம்முடைய இன்றைய சமூக வாழ்க்கையின் இழிவை அவை வெளிப்படுத்தப் பயன்படுவதேயாம். பழங்கதை இன்றைய வாழ்க்கையின் அவலங்களையும் சீர்கேடுகளையும் நேரடியாக எடுத்துக் கூறுகிறது. மேலும், நம் விருப்பு வெறுப்புகள் அடிப்படையில் அவற்றை எடை போடாமல், நம் விருப்பு வெறுப்பிற்கு அப்பாற்பட்ட ஒரு காலத்திற்கும், நாட்டிற்கும் இட்டுச் சென்று அப்பின்னணியில் இன்றைய நடப்புகளை வெளிப்படுத்துகிறது. எனவே நம்மால் உணர்ச்சி வசப்படாத நிலையில் மதிப்பீடு செய்ய வாய்ப்பு ஏற்படுகிறது. பழங்கதைகளைப் புதிய முறையில் திருப்பிக் கூறும்பொழுது நம்மை நாமே மதிப்பீடு செய்து கொள்ள வாய்ப்புண்டு. பெர்த்தோல்ட் பிரெஷ்ட் என்னும் செர்மானிய நாடக மேதை ''தொலைவு படுத்தல்'' அல்லது 'அந்நியப் படுத்தல் (Alienation) என்ற இந்த உத்தியைக் கையாண்டு தற்கால சமுதாயத் தன்மைகளை மதிப்பீடு செய்துள்ளார்.[7]

பழங்கதைகளைத் தற்கால இலக்கியத்தில் பயன்படுத்துவதற்கு இன்னொரு காரணமும் கூறப்படுகிறது. இன்று உலகம் வெகு வேகமாக மாறிக் கொண்டு வருகிறது. மக்களின் சிந்தனைகளும் மதிப்புகளும் ஒரு நிலையில் நிற்காது மாறிய வண்ணம் உள்ளன. இதனால் என்றும் நிலைத்து நிற்கும் மதிப்புகளைத் தேடிக் காண விழைவது இயல்பே. நன்மைக்கும் தீமைக்கும் நடக்கும்

போராட்டத்தின் தன்மையையும் முடிவையும் ஆராய்ந்து மனிதனின் ஆன்மீக வாழ்க்கையைத் தீர்மானிக்கும் விதிகளைக் கண்டுபிடிப்பது ஒரு சமூகத் தேவையாகிறது. பழங்கதைகளின் படிமங்களில் இவற்றிற் கான விடை கிடைக்கலாம் என்று நம்புவது இயல்பே.[8]

பழங்கதைகளை புதிய இலக்கியத்தில் பலவிதமாகப் பயன்படுத்து கின்றனர். முதலாவதாக அவை தொன்றுதொட்டுச் செவிவழியாக, பரம்பரை பரம்பரையாகப் பரவி வந்த வழியிலேயே எவ்வித மாற்றமு மின்றி குறிப்பாக உள்ளடக்கத்திலும் கூட அப்படியே எழுதப்படுவது ஒரு முறை. உள்ளடக்கத்தில் மாறுதலில்லாமல், வடிவத்தைப் பொருத்தமட்டில் செய்யுள் வடிவத்தில் இருந்ததை உரைநடையில் புதினம் அல்லது நாடக வடிவத்தில் அளிப்பது பிறிதொன்று. இன்றும் செய்யுள் வடிவிலேயே, ஆனால் கவிதை நாடகமாக எழுதுவதும் உண்டு. இவையன்றி உள்ளடக்கத்தில் கதைக்கருவில் மாற்றம் இல்லாது புதிய கதை மாந்தர்களைச் சேர்த்தும் புதிய நிகழ்ச்சிகளைப் புகுத்தியும் பழங்கதையை நவீனப்படுத்தலாம். உரையாடல்களில் நவீன காலத்திய கருத்துக்களை நுழைக்கலாம். கதைக்கருவிலேயே ஒரு மாற்றம் அல்லது திருப்பம் ஏற்படுத்தி பழங்கதையை ஒரு புதிய நோக்கில் பார்க்குமாறு செய்யலாம். இது பழங்கதையைத் தற்காலத்தியச் சிந்தனை அடிப்படையில் வெளிப்படுத்துவதாகும்.

இவை யாவும் பழங்கதையைச் சற்று திரித்தும் கூட்டியும் பழங் காலத்துப் பின்னணியிலேயே புதிய இலக்கிய வடிவங்களில் மறுபடைப்புகளாக உருப்பெறுவன. இவ்வாறன்றி, தற்காலத்துப் பின்னணியில் இன்றைய மனிதரைக் கதைமாந்தராகக் கொண்டு புதிய இலக்கிய வடிவங்களில் முற்றிலும் புதிய கதையாக உருவாக்குவதும் உண்டு. இத்தகைய கதைகளில் சிலவற்றில் கதை மாந்தர்களின் பெயர்கள் பல பழங்கதையின் கதை மாந்தர்களின் பெயர்களாகவே அமையலாம். சிலவற்றில் பெயர்கள் முற்றிலும் நவீன காலத்துப் பெயர்களாகவும் அமையலாம். எப்படியிருப்பினும் இந்தப் புதிய கதையைப் படிப்பவர்களுக்குப் பழங்கதையை நினைவூட்டும்படியாக கதையின் போக்கு, கதையின் முடிவு, கதை தெரிவிக்கும் நீதி, கதை மாந்தரின் செயல்கள் உரையாடல்கள் ஆகியவை அமையலாம். பழங்கதையை நினைவுபடுத்தி அதனுடன் ஒப்பு நோக்கிப் பார்க்கத் தூண்டும் வகையில் புதிய கதை எழுதப்பட்டிருக்கும். புதிய கதை யாயினும் தொன்மப் படிமங்கள் அடங்கிக் கிடக்கும். இந்தத் தொன்மப் படிமங்கள் கதைக் கருவிற்கு வலுவூட்டுவனவாகவும் படிப்பவரின் உள்ளத்தில் உயரிய சிந்தனையைத் தூண்டுவனவாகவும், தற்காலத்திய சமூகச் சிக்கல்களைக் காட்டி அவற்றின் தன்மைகளை உணர்த்தி, அதனால் மனக்கிளர்ச்சி தருவனவாகவும் அமையலாம்.

தொன்மப் படிமங்கள் எனப்படும் ஆதிகாலத்திய கதைமாந்தர்களை மட்டுமே தற்கால இலக்கியத்தில் மேற்கூறிய நோக்கங்களுக்காகப் பயன்படுத்தப்பட முடியும் என்பதில்லை. இடைக்காலத்தில், ஏன், அண்மைக் காலத்திய வரலாற்று மாந்தர்களும் தொன்மப் படிமங்கள் போல் பயன்படுத்தப்படுவதுண்டு. 'மாட் பாட்கின்' என்னும் திறனாய்வாளர் 'மாதிரிப் படிமங்கள்' (Type images) என்ற சொல் தொன்மப் படிமங்கள் (Archetypes) என்ற சொல்லை விட அதிகப் பொருத்தமானது எனக் கருதுகிறார்.[9] எடுத்துக்காட்டாக சிவாஜி என்னும் வரலாற்று வீரர் ஒரு இதிகாச மாந்தனாக ஆகி, பிற்கால இலக்கியங்களில் அக்காலத் தேவைக்கு ஏற்றபடி கதைமாந்தனாகப் படைக்கப்படுவதைக் காணலாம். தேசிய இயக்க காலத்தில் ஆங்கிலேயர் ஆதிக்கத்தை எதிர்த்துப் போராடிய வீரனின் கதையாக ''வீர சிவாஜி'' என்ற நாடகம் மேடையேற்றப்பட்டது. திராவிட இயக்க காலத்தில் இதே சிவாஜி அறிஞர் அண்ணாவால் பிராமண ரல்லாதவரின் எடுத்துக்காட்டு மாந்தராக ''சந்திரோதயம்'' என்னும் நாடகத்தில் படைக்கப்பட்டார். தேசிங்குராசன் என்னும் வீர வரலாறு படைத்த சிற்றரசன் நாட்டுப் பாடல்களில் போற்றப்பட்டு தேசிய இயக்க காலத்தில் நாடகப் பாத்திரமாக அரங்கேற்றப் பட்டான். சிலப்பதிகாரம் தேசிய இயக்க காலத்தில் ''தேசீய கோவலன்'' என்று நாடகமாக்கப்பட்டது.[10] திராவிட இயக்க காலத்தில் தமிழினப்பற்று வளர்க்க பாரதிதாசனால் 'கண்ணகி புரட்சிக் காவியம்' படைக்கப் பெற்றது. பழங்கதையான பிரகலாதன் கதை தலைகீழாக மாற்றப்பட்டு பாரதிதாசனின் 'இரணியன் ஓர் இணையற்ற வீரன்' என மாறுகிறது. இராமாயணக் கதையே 'இராவண காவிய'மாக மாற்றப்பட்டதையும் காணலாம்.[11] ஆங்கில இலக்கியத்தின் இதிகாச மாந்தரான ராபர்ட் புரூஸ், சாமிநாத சர்மாவால் ''பாணபுரத்து வீரன்'' ஆக ஆக்கப்பட்டு பகத்சிங்கின் தோற்றத்தில் நாடக மேடையேறினார். முற்றிலும் நாட்டார் கதையாக இருந்த ''அலு பாதுஷா'' கூட தேசிய இயக்க காலத்தில் 'கதர் கப்பல் கொடி' தோன்ற மேடை நாடகமாக்கப்பட்டது.[12] இவை யாவற்றிற்கும் முன்னோடியாகத் திகழ்ந்தது பாரதியாரின் ''பாஞ்சாலி சபதம்''. மகாபாரதத்தில் பாண்டவரின் மனைவியாக வரும் திரௌபதி பாரதியாரால் பாரத மாதாவாகவும் வீரப் பெண்மணி யாகவும் உருவாக்கப்பட்டாள்.

காலத் தேவைக்கு ஏற்ப பழங்கதைகளும் நாட்டார் கதைகளும், வரலாற்று நிகழ்ச்சிகளும் புதிய வடிவங்களில் இலக்கியமாக்கப் படுகின்றன என்பது இதுவரை விளக்கப்பட்டது. எனவே வெவ்வேறு காலத் தேவைகள் பற்றியும், ஓரளவு மேலே குறிப்பிட்டுக் காட்டப்

பட்டது. இனி இருபதாம் நூற்றாண்டில் 'காலத் தேவை' எவ்வாறு இருந்தது, இருந்து வருகிறது என்பது குறித்து அறிவதும் ஒரு தேவையாகும்.

இந்தியா நூற்றைம்பது ஆண்டுகட்கு மேலாக ஆங்கிலேயரின் ஆட்சிக்குட்பட்டு அடிமைப்பட்டுக் கிடந்தது. ஆங்கிலேயரின் ஆட்சி நாட்டில் பல பொருளாதார, சமூக, அரசியல் பண்பாட்டு முரண்பாடு களைத் தோற்றுவித்தது. இந்தியப் பொருளாதாரம் இங்கிலாந்து நாட்டின் பொருளாதாரத்துடன் இணைக்கப்பட்டது. இங்கிலாந்தின் நலன்களுக்கும், அதன் தொழில் வளர்ச்சிக்கும், பொருளாதார முன்னேற்றத்திற்கும் உகந்தாற்போல் இந்தியப் பொருளாதாரம் செயற்படுத்தப்பட்டது. நாட்டின் செல்வம் இந்நாட்டு மக்களை வாழ வைக்கப் பயன்படாமல் கொள்ளை போயிற்று. நாட்டு மக்கள் வறுமையில் உழன்றனர். ஆங்காங்கே எழுந்த கொந்தளிப்புகள் படை பலத்தால் ஒடுக்கப்பட்டன.

ஆங்கிலேயர் தம் படைபலத்தால் மட்டும் ஆட்சி புரியவில்லை. இந்திய சமூகத்திலுள்ள பலவீனங்களையும் பயன்படுத்திக் கொண்டனர். சாதி, சமய அடிப்படையில் மக்களிடையே நிலவிய வேறுபாடுகளைப் பகைமையாக மாற்றி மக்களிடையே பிளவை உண்டு பண்ணினர். இந்து, முஸ்லீம், மேற்சாதி — கீழ்ச்சாதிப் பூசல்கள் பெருகலாயின. உடன்பிறப்பாய் வாழ வேண்டியவர்கள் தம்முள் சண்டையிட்டு அந்நிய ஆட்சியாளர்களை நடுவர்களாகக் கருதும் சூழ்நிலை உருவாகியது.

மற்றும், ஆங்கிலேயர்கள் இந்திய மக்களிடையே தாழ்வுணர்ச்சி ஏற்படும்படி பல உத்திகளைக் கையாண்டனர். அப்பாவி இந்திய மக்கள் அடிமைத்தனத்திலிருந்து மீளத் தகுதியற்றவர்கள் என்ற உணர்வு மேலோங்கச் செய்தனர். இந்நாட்டு மக்களின் சமயம், பண்பாடு, அறிவியல் எல்லாம் மேனாட்டவரின் சமயம், பண்பாடு, அறிவியல் ஆகியவற்றைவிட மிகவும் தாழ்ந்தவை என்று இழிவு படுத்தப்பட்டன. கிறித்துவ சமயம் வெகு வேகமாக பரப்பப்பட்டது. மேனாட்டு நடையுடை பாவனைகள் உயர்த்திப் பேசப்பட்டன. அவற்றைப் பின்பற்றுமாறு ஊக்குவிக்கப்பட்டனர். நாட்டு மருத்துவம், நாட்டுப் பயிர்முறை, நாட்டு அறிவியல் யாவும் இழித்துரைக்கப்பட்டன. நாட்டை ஆளும் அறிவும் திறனும் இந்நாட்டு மக்களுக்கு இல்லை என நாட்டு மக்களே நம்பும்படி பரப்பப்பட்டது.

இத்தகைய சூழ்நிலையில் பத்தொன்பதாம் நூற்றாண்டில் நாட்டு மக்களிடையே விழிப்புணர்வு ஏற்படுத்தி அவர்களை ஒற்றுமைப்படுத்தி

தன்னம்பிக்கையும் விடுதலையார்வமும் உடையவர்களாகச் செய்ய வேண்டுமென்ற உணர்வு, படித்தவர்கள் பலரிடை முகிழ்ந்தது. இவர்கள் ஆங்கிலக் கல்வி பயின்று ஆங்கில நாகரிகத்தின் சிறப்பம்சங்களை உட்கொண்டவர்கள். இவர்களில் சிலர் சமூகப் பண்பாட்டுத் துறையில் ஈடுபாடு கொண்டவர்கள். இந்திய சமுதாயத்தில் நிலவிய சமூகச் சீர்கேடுகளைக் களைந்தெறிந்து மறுமலர்ச்சி காண விழைந்தனர். இன்னும் சிலர் அரசியற்றுறையில் தன்னாட்சி காண்பதே முதற் பணியெனக் கொண்டனர். இந்திய தேசிய காங்கிரசு தோற்றுவிக்கப் பட்டது. தன்னாட்சி நோக்கிய அரசியல் சீர்திருத்தங்களுக்காகப் பாடுபடலாயினர்.

தேசிய இயக்கம் வளர வளர, சமூக உள் முரண்பாடுகளே அந்நியராட்சிக்கு வலுச் சேர்ப்பவனாக உள்ளன என்பது உணரப் பட்டது. இந்த உள் முரண்பாடுகளில் இந்து — முஸ்லீம் பிரிவு வட இந்தியாவிலும், சாதிப்பிரிவு தென்னிந்தியாவிலும் முக்கியமாக இருந்தன. சமயங்களுக்கிடையே ஒற்றுமை, இந்து சமயத்துக்குள் சாதி ஒற்றுமை ஆகியவற்றிற்காகப் பாடுபடல், தேசிய இயக்கத்தின் தலையாய கடமைகளாகக் கருதப்படலாயிற்று. சாதி ஒற்றுமைக்கு, மிகப் பெருந்தடையாக தீண்டாமை இருந்ததால் தீண்டாமை ஒழிப்பு முக்கியமாகக் கருதப்பட்டது.

விடுதலையுணர்வு ஏற்படக் கல்வி இன்றியமையாதது. கல்வியிலும் அந்நியர் புகட்டி வந்த கல்வி அடிமைத்தனத்தை வளர்க்கும் கல்வியாக இருந்தமையால் அதை விலக்கி, தேசிய உணர்வு ஊட்ட வல்ல தேசியக் கல்விக்கு வழிவகை செய்ய வேண்டிய அவசியம் உணரப்பட்டது. பெண்கள் அறியாமை இருளில் உழன்றால் நாடு முன்னேற இயலாது என்பதை உணர்ந்து பெண்களின் கல்விக் காகவும் பாடுபடலாயினர்.

தேசிய இயக்கத்திலும், அரசுப் பணிகளிலும் ஆங்கிலக் கல்வி பெற்றவர்களே பெரும்பங்கு பெற்றிருந்தனர். இது தமிழகத்தில் ஒரு முரண்பாட்டைத் தோற்றுவித்தது. இங்கு ஆங்கிலக் கல்வி பெற்றவர்களில் பெரும்பாலோர் மேற்சாதியைச் சேர்ந்தவர்களே ஆவர். அவர்களிலும் மிகப் பெரும்பாலோர் பிராமணராக இருந்த தால் பிராமணர்களே அரசுப் பணிகளிலும், தேசிய இயக்கத்திலும் முன்னின்றனர். இதன் விளைவாக பிராமணரல்லாதார் இயக்கம் தோன்றியது. ஆனால் இது அரசுப் பணிகளில் பிராமணர் ஆதிக் கத்தை ஒழிப்பதை மட்டுமே தன் குறிக்கோளாகக் கொண்டிருந்தது. சமூக ஏற்றத் தாழ்வுகள் நீங்க, இவ்வேற்றத்தாழ்வுகட்கு அடித் தளமாக விளங்கிய சாதி முறை நீங்க வேண்டும் என்றும் இச்சாதி

முறையைத் தூக்கிப் பிடிக்கும் இந்து சமயக் கோட்பாடுகளையும் இக்கோட்பாடுகளை ஆக்கியோர்களாகக் கருதப்பட்ட பிராமணர் களையும் எதிர்த்துப் போராட வேண்டும் என்றும் பெரியார் ஈ. வெ. இராமசாமி உணர்ந்து சுயமரியாதை இயக்கத்தைத் தொடங்கினார். இது ஒரு பண்பாட்டு இயக்கமாகவும், பகுத்தறிவுப் பரப்பல் இயக்க மாகவும் செயற்பட்டது.

சுயமரியாதை இயக்கம் பொதுவாக சமய நம்பிக்கைகளையும், குறிப்பாக இந்து சமய நம்பிக்கைகளையும் கண்டித்து சாதியத்தை எதிர்த்து வருகையில், காந்தியடிகளின் தலைமையில் தேசிய இயக்கம் தீண்டாமையை எதிர்த்துப் பிரசாரம் நடத்தி வந்தது. இரு இயக் கங்களுமே தாழ்த்தப்பட்ட சாதியினரை உயர்த்துவதற்காக மேற் சாதியாரால் நடத்தப்பட்டவை.[13]

தாழ்த்தப்பட்ட சாதியினர் தங்களைத் தாங்களே தங்கள் முயற்சி யால் உயர்த்திக் கொள்ள நடத்திய இயக்கங்களும் இருந்தன. இவற்றில் மிகவும் குறிப்பிடத்தக்கதாக இருந்தது அம்பேத்காரால் நடத்தப்பட்ட இயக்கம். பல கட்டங்களில் பல பெயர்கள் தாங்கிய இவ்வியக்கம் தாழ்த்தப்பட்ட சாதியினர் இந்து சமயத்தை விட்டு விலகி தனித்து நிற்க வேண்டும் என்ற கோட்பாட்டின் அடிப்படையில் இயங்கியது. அம்பேத்கார் வெவ்வேறு வேளைகளில் இஸ்லாம், சீக்கியம் போன்ற வேறு சமயங்களைத் தழுவுவது பற்றி சிந்தித்து இறுதியில் புத்த சமயத்தில் தன் ஆதரவாளருடன் சேர்ந்தார். இதற்கு முன்னர் கிறித்துவ சமயத்தைத் தழுவுவதால் சமூகத்தில் சமத்துவமும், மேனிலையும் அடையலாம் என்ற எண்ணம் தாழ்த்தப் பட்ட சாதியினரிடையே நிலவி வந்தது. ஆனால் சமய மாற்றம் கானல்நீர் போன்றது எனப் பின்னர் உணர்ந்தனர். அம்பேத்கார் தன் கோட்பாட்டின்படி தாழ்த்தப்பட்ட சாதியினருக்குத் தனித் தொகுதி பெறுவதால் அரசியலில் இச்சாதியினர் முன்னேற்றமடைய லாம் என்றும் எண்ணினார்.[14]

தாழ்த்தப்பட்ட சாதியினர் மேனிலையடைய கல்வி வசதி அளிப் பதே சிறந்த வழி என்ற கருத்தை 'பூலே' என்ற மராட்டியர் பத்தொன்பதாம் நூற்றாண்டிலேயே முன் வைத்து அதற்காக அரும்பாடுபட்டார். கல்வியின் மூலம் உயர்நிலை அடைந்த அம்பேத்காரும் பூலேயின் கொள்கையை ஆதரித்தார். கல்விக் கூடங் களில் இட ஒதுக்கீடு செய்யும் அரசுக் கொள்கைகளும் இக்கருத்தின் அடிப்படையில் உருவானவையே. ஆனால் கல்வி அங்குமிங்குமாக ஒரு சிலர் முன்னேற வழி வகுத்ததேயன்றி தாழ்த்தப்பட்ட சாதி முழுமையும் உயர வழி செய்யவில்லை.

பக்தி வழியும் மேனிலையாக்கப் பாதைகளில் ஒன்றாக கருதப் பட்டது. அம்பேத்கார் கபீர்தாசரிடம் பெருமதிப்பு வைத்திருந்தது குறிப்பிடத்தக்கது. பக்தி வழியிலும், தாழ்ந்த சாதியினர் தங்கள் சாதியினருக்கே உரித்தாயிருந்த பழக்க வழக்கங்களையும், சிறு தெய்வ வழிபாட்டையும் கைவிட்டு விட்டு மேல்சாதியாரின் பழக்க வழக்கங் களையும் வழிபாட்டு நெறி முறைகளையும் கைக் கொள்வதே மேனிலையாக்கத்திற்கான சிறந்த வழியாகக் கருதப்பட்டது. இத் தகைய மேனிலையாக்க இயக்கங்கள் இந்நூற்றாண்டில் நடந்துள்ளன. தென் குஜராத்தில் 1922ஆம் ஆண்டில் ''சாலாபாய் தேவி'' என்கிற பெண் தெய்வம் 'சாமியேறி' ஊர் ஊராக ''மதுவை விலக்கு'' ''இறைச்சி உண்ணாதே'' ''தினந்தோறும் குளி'' போன்ற பல கட்டளைகள் பிறப்பித்ததாகவும் இது ஆதிவாசி மக்களைச் சுரண்டி வாழ்ந்த பார்சி சமய நிலப்பிரபுக்களுக்கும், கள்ளுக்கடைக் காரருக்கும் எதிரான போராட்டத்தின் ஒரு வடிவம் ஆகும் என்றும் டேவிட் ஹார்டிமான் கூறியுள்ளார்.[15] இதே போல் பீகார் மாநிலத்தில் இடையர் சாதியைச் சேர்ந்தவர்களும் தங்களுடைய சமூக நிலையை மேற்சாதியினருக்குச் சமமாக உயர்த்திக் கொள்ளு வதற்காக பூணூல் அணிதல், கல்வி கற்றல், கொத்தடிமை செய்ய மறுத்தல், திருடாமை முதலிய பல வழக்கங்களையும், கட்டுப்பாடு களையும் மேற்கொள்ளும் இயக்கம் ஒன்றினை 1921 முதல் 1925 வரை நடத்தினர்.[16] இவர்களுடைய இயக்கம் மேற்சாதியினரின் வன்முறையைச் சந்திக்க வேண்டியிருந்தது. இங்கும் பொருளாதாரக் காரணங்களுக்காகத் தோன்றிய ஓர் எதிர்ப்பு, சாதி உயர்வுப் போராட்டமாக வடிவெடுத்தது. மேற்சாதியினரின் பழக்க வழக்கங் களைக் கடைபிடிப்பதன் மூலம் மேற்சாதியாராக ஆகிவிட முடியும் என்று கீழ்ச்சாதி மக்கள் நினைத்ததன் விளைவு இவ்வியக்கங்கள் என்று லூயி டூமோந்த் சுட்டிக் காட்டுகிறார். ''தாங்கள் வாழும் முறையைப் பண்பாட்டளவில் மட்டும் மாற்றிக் கொள்வதால் கீழ்ச் சாதியினர் தங்கள் சமூக நிலையை உயர்த்திக் கொள்ள முடியாது. அரசியல் இயக்கம் மூலம் தங்களுக்குச் சமநிலை தரும்படி மேற்சாதி யினரைக் கட்டாயப்படுத்த வேண்டும்; சாதியேணியில் ஒரு சாதி நிற்கும் படிக்கட்டு அது சமுதாயத்தில் பெற்றுள்ள அரசியல் அதிகாரத்தைச் சார்ந்துள்ளது. அரசியல் ஆதிக்கத்திற்கு எதிராக அரசியற் போராட்டம் நடத்தாமல் தங்கள் நிலையை உயர்த்திக் கொள்வதோ, சமத்துவம் பெறுவதோ நடவாது'' என்பார்.[17]

இந்தியா சுதந்திரமடைந்த பின்னர் தீண்டாமை ஒழிப்புச் சட்டம், தாழ்த்தப்பட்டோருக்குக் கல்வி வசதி போன்ற பல சீர்திருத்த நடவடிக்கைகள் மேற்கொள்ளப்பட்டன. எனினும் தாழ்த்தப்பட்ட சாதியினரின் சமூகப் பொருளாதார நிலையில் முன்னேற்றம் ஏற்பட

வில்லை. பொருளாதாரப் போராட்டங்கள் மூலம் தங்கள் நிலையை உயர்த்திக் கொள்ள முயன்றனர். கிராமப்புறத்தில் கூலி உயர்வுப் போராட்டங்கள் வெடித்தன. அங்கு பொருளாதார ஆதிக்கம் வகித்த மேற்சாதியினர் தாழ்த்தப்பட்ட சாதியினர் மீது தாக்குதல் நடத்தினர். கீழ்வெண்மணி என்னும் இடத்தில் அரிசனக் குடிசைகட்குத் தீ வைத்து 44 அரிசன மக்களைக் கொன்றனர். இது நாட்டையே அதிர்ச்சி அடையச் செய்தது. இது ஒரு தனி நிகழ்ச்சி என்று கருத முடியாத வண்ணம் தொடர்ந்து இத்தகைய கொடுமைகள் நாட்டின் பலவிடங்களில் நடந்து கொண்டிருக்கின்றன. கடந்த 8.9.86 அன்று திருச்சி மாவட்டம் நெய்க்குப்பை என்ற இடத்தில் கூலி உயர்வு கேட்ட அரிசன வேளாண்மைக் கூலித் தொழிலாளர் களின் 400 குடிசைகள் கொளுத்தப்பட்டன. இளம்பெண் ஒருவர் தீயில் கருகிச் செத்தார்.[18] எனவே பொருளாதார முரண்பாடு களால் எழும் பூசல்களும் போராட்டங்களும் சாதிகளுக்கிடையேயான பூசல்களாகவும், போராட்டங்களாகவும் வடிவெடுப்பது அன்றாட நிகழ்ச்சியாகி விட்டது. தாழ்த்தப்பட்ட சாதியினரின் பிரச்சனை இன்றும் தீர்ந்தபாடில்லை. தாழ்த்தப்பட்ட சாதியினரின் ஏற்றம் பற்றிச் சிந்திக்கும்பொழுது இலக்கிய வாதிகளுக்கும் சமூக சிந்தனை யாளருக்கும் நந்தன் கதை நினைவுக்கு வருவது ஓர் இயல்பான நிகழ்ச்சியாக உள்ளது. அடிக்கடி நந்தன் கதை பழைய புராண வடிவிலும் புதிய வடிவங்களிலும் எழுதப்பட்டும் பாடப்பட்டும் நடிக்கப்பட்டும் திரைப்படமாக ஆக்கப்பட்டும் வருவதைத் தமிழகக் கலை வரலாற்றில் காண இயலும்.

நந்தன் கதைக்குப் பெரும்புகழ் தேடித் தந்தவர் சென்ற நூற்றாண்டில் வாழ்ந்த கோபால கிருஷ்ண பாரதியாவர். அவர் ஓர் இசைக் குடும்பத்தில் பிறந்தவர். இசையில் நல்ல தேர்ச்சி பெற்றவர். ஊர்தோறும் சென்று பக்திப் பாடல்கள் பாடி உஞ்ச விருத்தி செய்து வாழ்ந்து வந்தார். அக்காலத்தில் பாடல்களுடன் இணைந்த கதை சொல்வது ஒரு முறையாக இருந்தது. புராணக் கதைகள், பக்தர்கள் வரலாற்றுக் கதைகள் ஆகியவை 'கதாகாலட் சேபம்' அல்லது 'கதை' என்று கூறப்பட்டு வந்த இவ்வடிவத்தில் சொல்லப்பட்டன. கோபாலகிருஷ்ண பாரதியாரும், பெரியபுராணத் தில் இடம் பெற்றிருந்த திருநாளைப்போவார் நாயனார் புராணத்தை விரித்து, புதியன சேர்த்து கதை சொல்லி வந்தார். அதுவே 'திருநாளைப்போவார் என்னும் நந்தனார் சரித்திரக் கீர்த்தனை' என்ற பெயரில் நூலாக வெளியிடப்பட்டது.[19]

பாரதியாரின் நூலுக்கு முதல் நூலாக விளங்கியது சேக்கிழாரின் பெரியபுராணம் என்றாலும் 'திருநாளைப் போவாரை'ப் பற்றி முதல்

முதலாக சுந்தமூர்த்தி நாயனார் திருத்தொண்டத் தொகையில் 'செம்மையே திருநாளைப் போவார்க்கும் அடியேன்' என்று குறிப் பிட்டுள்ளார். அவருக்குப் பின் நம்பியாண்டார் நம்பி தன் **'திருத் தொண்டர் திருவந்தாதி'**யில் ஒரு செய்யுளில் 'நாளைப் போவான்' கதையை மிகச் சுருக்கமாகப் பாடிச் சென்றார். இச்செய்யுளில் திருநாளைப் போவாருடைய ஊர் ஆதனூர் என்றும் கோயிலுக்குப் புறத்தொண்டு செய்யும் மரபினர் என்றும், புலைச் சாதியினர் என்றும் மூவாயிரவர் கைகூப்ப புலை நீங்கி முனியானார் என்றும் சில விவரங் கள் தரப்பட்டுள்ளன. திருநாளைப் போவார் நாயனார் புராணத்தை 37 பாடல்களில் பாடிய சேக்கிழாரே முதல் முதலாக திருநாளைப் போவாரின் இயற்பெயர் நந்தனார் என்று குறிப்பிட்டுள்ளார்.

சுந்தரமூர்த்தி நாயனார் எட்டாம் நூற்றாண்டிலும் நம்பி யாண்டார் நம்பி பத்தாம் நூற்றாண்டிலும், சேக்கிழார் பன்னிரண்டாம் நூற்றாண்டிலும் வாழ்ந்தனர் என்பர். சமண சமயத்திற்கு எதிராகத் தோன்றிய 'பக்தி இயக்கத்'தின் செல்வாக்கு தமிழ்நாட்டை மூன்று வழிகளில் ஆதிக்கம் செலுத்தியது எனலாம். முதலாவது பக்தர்களின் வாழ்க்கை நிகழ்ச்சிகள்; இரண்டாவது இகபர சாதனமாயுள்ள நெறி முறையறங்களுடன் கடவுட் பக்தி வழிபாடுகளைத் தூண்டும் வழி பாட்டு வடிவப் பக்திப் பாடல்கள். மூன்றாவது, பக்திநலங்கனிந்த பெரியபுராணம் கம்பராமாயணம் போன்ற காப்பியங்கள் உரு வாக்கல்.[20] இவற்றில் பக்தர்கள் அல்லது அடியார்கள், தொண்டர்கள் ஆகியோரின் வரலாறு, பக்தி இயக்கத்தை வளர்க்கப் பெரிதும் உதவியது. கடவுளை வணங்குவதிலும் பார்க்க அடியாரை வணங்கு வதே முக்கியம் என்ற கருத்து வலியுறுத்தப்பட்டது. அடியார்கள் வாழ்க்கையில் இறைவன் நேரே தயையிட்டு பற்பல அற்புதங்கள் அல்லது திருவிளையாடல்கள் புரிந்தான் என்று மக்களிடை வாய் மொழிக் கதைகள் பரவின. இவை தொகுக்கப்பட்டு பாடற்றொகை களாக்கப்பட்டன. இவற்றில் பல்வேறு வகுப்பினரும் இடம் பெற் றனர். பக்தியியக்கம் மக்களியக்கமாகப் பெருகி வளர்வதற்கு இவை காரணமாயின என்கிறார் ஆ. வேலுப்பிள்ளை.[21]

திருநாளைப் போர்வார் என்ற நந்தனார் சரித்திரம், சாதி அமைப்பை மீறாத ஒரு கதையாகவே பலராலும் பாடப்பட்டு வந்திருக் கிறது. நந்தனார் கதையை இலக்கிய வடிவில் தொடங்கி வைத்த சுந்தரர் 'செம்மை' என்று நாயனாரது 'மனப்பண்பை' மட்டுமே குறிப்பிடுகிறார். நம்பியாண்டார் நம்பிகள் சுந்தரரிலிருந்து பெரிதும் வேறுபட்டு, நந்தனாருக்கு ஒரு சமூக மதிப்பை உருவாக்குகிறார். புறச்சமயப் பூசல்களிலிருந்து, சைவ சமயத்தைக் காப்பாற்ற வேண்டி யது சைவப் பெரியார்களின் அக்கால இன்றியமையாத கடமையாக

இருந்தது. இதனால் 'எல்லோரும் ஓர் குலம்' என்ற எண்ணம் அப்பர் முதலியோரின் பாடல்களில் ஒலித்தது. பேராசிரியர் கைலாசபதி கருதுவது போல், அது போர்க்கால இசையாக இருந்ததே தவிர நிரந்தரத் தீர்வாகக் கருதப்படவில்லை.[22] இந்த அடிப்படையில் நம்பியாண்டார் நம்பிகள், தான் எழுதிய திருத்தொண்டர் திருவந்தாதியில், நந்தனாரை புறத்திருத் தொண்டன் என்றும், புலையர் குலத்தில் நந்தனார் தோன்றியதால் இறைவனை உள்ளே சென்று வழிபட இயலாமல் கோவிலின் புறத்தே நின்று இறைவனை நந்தனார் வழிபட்டார் என்றும் காட்டுகிறார். இதன் மூலம் நந்தனாருக்கு ஒரு சமூக மதிப்பை நம்பியாண்டார் நம்பிகள் உருவாக்கினார் எனலாம்.

சேக்கிழார், மேலும் பல பாடல்களில் நந்தனாருடைய சமூகத்தின் அமைப்பை விரிவாகக் குறிப்பிடுகிறார். காப்பியத் தேவைக்கு ஏற்ப சேக்கிழார் பல புதிய செய்திகளைத் தரவேண்டியிருந்தது. நந்தனார் ஆதனூரில் பிறந்த புறத் திருத்தொண்டன் என்று குறிப்பிட்டதைச் சேக்கிழார் மாற்றியமைக்கிறார். நந்தன் சமூகம் ஆதனூருக்குப் புறம்பாக உள்ள சேரியில் வாழ்ந்தது. இதுவே சேக்கிழார் காலச் சமூக அமைப்பாகும். வணிகச் சமூகத்தினருக்கு சமூகத்தில் செல்வாக்கு குறைந்த பின் சோழர்கள் தனிப்பெரும் தலைவர்களாக உருப்பெற்றனர். தங்கள் பேரரசைக் கட்டிக் காக்க அனைத்து சமூகத்தினரிடத்தும் ஒற்றுமை தேவைப்பட்டது. எனவே, ஒவ்வொரு சமூகத்தினருக்கும், கடமைகளும் உரிமைகளும் வகுக்கப்பட்டிருந்தன. இந்த அடிப்படையில் நந்தன் சமூகத்தினருக்கும் ஊருக்குப் புறம்பான ஓரிடத்தில் வசிக்கும் உரிமை வழங்கப்பட்டிருந்தது. இதையே சேக்கிழார்[23]

மற்றவ்வூர்ப் புறம்பணையின்
வயன் மருங்கு பெருங்குலையிற்
சுற்றம் விரும்பிய கிழமைத்
தொழிலுழவர் கிளைதுவன்றிப்...

என்று குறிப்பிடுகிறார்.

மேலும் சேக்கிழார், நந்தனாரின் சமூகக் கடமைகளை மிகத் தெளிவாகக் குறிப்பிடுகிறார். நந்தனார் தனக்கு விதிக்கப்பட்டிருந்த சமூக கடமைகளிலிருந்து மீறாத ஒழுக்க சீலராகவே இருந்தார் என்று சேக்கிழார் தம் கதையை அமைக்கிறார். சோழ மன்னரின் அமைச்சரவையில் அமைச்சராக இருந்த சேக்கிழாரால், சமூக மதிப்பை மீறிய நத்தனாரைப் படைக்க முடியாது; அப்படிப் படைப்பதும் ஏற்றுக்கொள்ளப்பட்டிருக்காது. எல்லா சமூகத்தினரையும் ஒற்றுமைப்படுத்தி ஒருமைப்படுத்த வேண்டிய தேவையால், நந்தனார் கதை பெரியபுராணத்தில் இடம் பெற்றது.

இந்திய சமூக அமைப்பில் தீண்டாமை, பல்லாண்டு காலமாக இருந்து வந்துள்ளது. கோபாலகிருஷ்ண பாரதியார் காலத்திலும் சாதிச்சிக்கல் பெருமளவில் இருந்தது. இதைச் சித்தரிக்கவே, நந்தனார் சரித்திரத்தை 'நந்தனார் சரித்திரக் கீர்த்தனையாக' உருவாக்கினார். இதில் சமூக முரண்பாடுகள், நந்தன் சமூக நிலை — இவை தெளிவாகச் சித்தரிக்கப்பட்டுள்ளன. ஐரோப்பியர்களின் வருகையால், தமிழகத்தில் நில மானிய அமைப்பில் பெரும் மாறுதல் ஏற்பட்டது. நிலக்கிழார்களின் ஆதிக்கம் அதிகரித்தது. நந்தன் சமூகத்தினர் பலர் இந்நிலக் கிழார்களிடம் அடிமைகளாக வாழ வேண்டிய கட்டாயம் ஏற்பட்டது. இந்நிலையைக் கோபாலகிருஷ்ண பாரதியார் சிறப்பாகத் தன் கதையில் சித்தரித்துள்ளார்.

பிற்காலத்தில், முற்காலக் கதைகளைப் போலவே நந்தனார் கதை, பல்வேறு காலங்களில் அந்தந்தக் கால சமூக அமைப்பு, மற்றும் படைப்பாளிகளின் சமூக, பொருளாதார, அரசியல் கண்ணோட்டங்களின் அடிப்படையில் உருப்பெற்றன. இருபதாம் நூற்றாண்டுப் படைப்பிலக்கியத்தில் — நந்தன் கதை இடம் பெறுவது தவிர்க்க இயலாத நிகழ்வாக உள்ளது. இந்த நூற்றாண்டின் சாதியப் போராட்டம், வர்க்கப் போராட்டம் போன்ற பல்வேறு பண்புகளை வெளிப்படுத்துவதற்கு நந்தன் கதையைப் பயன்படுத்தியுள்ளனர். இவை குறித்து இனிவரும் இயல்களில் ஆய்வோம்.

## அடிக்குறிப்புகள்

1. க. கைலாசபதி, அடியும் முடியும், சென்னை: பாரி நிலையம், 1970, ப. 120.
2. வெ. ப. சுப்பிரமணிய முதலியார், 'அகலிகை வெண்பா', திருநெல்வேலி: சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம், 1938.
3. பார்க்க: இது குறித்த விரிவு, பேராசிரியர் கைலாசபதியின் கட்டுரை 'அகலிகையும் கற்பு நெறியும்', அடியும் முடியும், பக். 120-199.
4. Hans Rubert Jauss, 'Goethe' s and Valery Faust : on the Hermeneutics of Question and Answer' in Jauss, *Towards an Aesthetic of Reception*, London, Herrester Press, 1982, p. 110.

5. C. G. Jung, 'Psychology and Literature' in David Lodge (Ed.), *20th Century Literary Criticism*, London; Longman, 1972, rept. 1924, p. 187.

   "The secret of artistic creation and of the affectiveness of art is to be found in a return to the state of participation mystique — to the level of experience at which it is man who lives and not the individual, and at which the weal or woe of the single human being does not count but only human existence."

6. Northrop Frye, *Fables of identity,* Princeton : Princeton University Press, 1963, pp. 33-34. quoted in N. Rudich (ed.) *Weapons of Criticism,*' California : Ramparts Press, 1976, p. 39.

   "Total literary history moves from the primitive to the sophisticated, and here we glimpse the possibility of seeing literature as a complication of a relatively restricted and simple group of formulas that can be studied in primitive culture. If so, the search for archetypes is a kind of literary anthropology..."

7. John Willett (ed.) *Brecht on Theatre: The Development of an Aesthetic* (London: Methuen, 1964, rept. New Delhi, Radhakrishna, 1979, p. 210.

8. A. Bocharov, 'Parable in contemporary Soviet Prose writings' *Aesthetics and the Development of Literature,* Moscow, USSR Academy of Sociences, 1978, p. 117. There are many reasons for the current popularity of myth. The main reason is probably a social need to find enduring values in a rapidly changing world, to investigate the nature and prospects of the struggle between good and evil and the laws of the spiritual life of man.

9. Maud Bodkin, *Studies of Type Images in Poetry Religion and Philosophy*, London: Oxford University Press, 1934.

10. S.T. Baskaran, *The Message Bearers*, Madras: Cre.A. 1981, p. 30, 31 & 42.

11. *Ibid.*, p. 42.
12. *Ibid.*, pp. 31, 36.
13. Gandhiji "The welfare work of the Sangh is a penance which the Hindus have to do for the sin of untouchability..." Quotation W.N. Kuber, *Dr. Ambedkar*, New Delhi, People's Publishing House, 1973, p. 71.
14. *Ibid.*, pp. 67, passim.
15. David Hardiman, "Adivasi", Assertion in South Gujarat, "The Devi Movement of 1922-23" *Subaltern Studies* III, R. Gupta (ed.) Delhi: Oxford University Press, 1984, pp. 196-230 passim.
16. Hetukar Jha, "Lower Caste Peasants and Upper Caste Zamindars in Bihar (1921-1925), An Analysis of Sanskritisation and contradictions between two groups", *Indian Economic & Social Historical Review,* XIV, No. 4, Oct. 1977, p. 559.
17. Louis Dumont, *Homo Hierarchicus,* London: Paladin 1972, p. 244 quoted in D. Hardiman, *Op.Cit.,* p. 214.
18. தீக்கதிர் (நாளிதழ்), 10.9.86.

## நந்தன் - புதினம் — ஆ. கோபாலசாமி அய்யங்கார் கா. ஆராவமுத அய்யுங்கார்

புதினம் என்ற புதிய இலக்கிய வடிவம் தமிழிலக்கிய உலகிற்கு ஐரோப்பியர் வருகையால் அறிமுகமானது. இதன் புதுமையைப் பற்றி, 'பிரதாப முதலியார் சரித்திரம்' என்னும் தன் புதின நூலுக்கு எழுதிய முன்னுரையில், வேதநாயகம் பிள்ளை பின்வருமாறு கூறு கிறார் : ''தமிழில் இம்மாதிரி உரைநடை நவீனம் (இதுகாறும்) பொதுமக்களுக்கு அளிக்கப்படவில்லை. ஆகையால் இந்நூல் இரச மாகவும் போதனை நிறைந்ததாகவும் இருக்கலாம் என்று பெருமை கொள்கிறேன்''[1]. வடிவத்தில் அல்லாமல் உள்ளடக்கத்திலும் புதுமை இருந்தது. இவை தேசிய எழுச்சி, சமூகச் சிக்கல்கள் போன்றவைகளை முன்வைத்து உருவாக்கப்பட்டன. இதற்கான காரணங்களை ஆய்ந்த பேராசிரியர் கைலாசபதி ஆங்கில அரசு இந்தியாவில் ஆங்கிலக் கல்வி முறையைப் புகுத்தியதை முக்கியமாகக் கருதுகிறார். ''இத்தகைய (ஆங்கிலேயரின்) இலட்சிய எண்ணங் களினாலும் அரசியற் பொருளாதாரத் தேவைகளினாலும் உந்தப் பெற்ற ஆங்கிலேயர் புகுத்திய கல்வி முறை பத்தொன்பதாம் நூற் றாண்டின் பிற்பகுதியில் வேகமாக வளரலாயிற்று. இதன் விளை பொருள்களில் ஒன்றே நாவல் எனக் கூறலாம்''[2] என்கிறார்.

தமிழ்ப் புதின இலக்கியத்தின் முன்னோடிகள் என்று குறிப்பிடப் படும் வேதநாயகம் பிள்ளை, மாதவையா, இராஜம் அய்யர், நடேச சாஸ்திரியார் ஆகியோர் நடுத்தர வர்க்கத்தைச் சேர்ந்தவர்களாகவும் அரசுப் பணி புரிந்து வந்தவர்களாகவும இருந்தனா. இவர்கள் சமூகச் சடங்குகள், நடைமுறைகள் போனறவை காலததிறகு ஒவ்வாதன என்று உணர்ந்தவர்களாவர். சமூகச் சீர்திருததம் அவசியம் என்று கருதியவர்கள். எனவே புதிய எணணங்கள், இலடசி யங்கள் ஆகியவற்றை வெளிப்படுத்த விரும்பினர். இதறகுப புதின வடிவத்தைப் பயன்படுத்திக் கொண்டனர். கெட்டில் என்னும் ஆங்கில இல்க்கியத் திறனாய்வாளர் கூறியது போல, ''நில மானியச் சமுதா யத்தினது சிதைவின் விளைவாக உருவாகிய புதிய வாழ்கையைத் தத்துவமே நாவல் இலக்கியம் தோன்றுவதற்கு வழி வகுத்தது''[3].

இவ்வாறாக, மேனாட்டுப் பண்பாட்டுத் தாக்கம், சமூகத்தில் நிலவிய சீர்கேடுகள் பற்றிய உணர்வு, நில மானிய அமைப்பினது சிதைவின் விளைவுகளால் படித்தவர்களிடம் ஏற்பட்ட புதுக் கருத் தோட்டம் ஆகியவை தமிழில் புதினம் தோன்றுவதற்கான நல்வாய்ப்பு களாக அமைந்தன. புதினம் என்ற புதிய இலக்கிய வடிவத்தைத் தமிழ் இலக்கியம் பெற்ற பின்னர் பரந்த படிப்போர் வட்டம் உருவா யிற்று. மக்களின் வாழ்க்கையுடன் தொடர்புள்ள பல சிக்கல்களைப் பற்றி எல்லோருக்கும் புரியும் நடையில் எழுதப்பட்ட புதினங்கள் வெளி வரலாயின. காப்பிய வடிவில் இருந்த பழம் பெரும் இலக்கியங்களும் உரைநடையில் புதின வடிவில் வரும்பொழுது, படிப்போரால் அவற்றின் உள்ளடக்கத்தில் தங்கள் வாழ்க்கை மதிப்பீடுகளையும் ஒப்பிட்டுக் காண முடிந்தது.

இந்தியச் சமூக அமைப்பில் சாதிப் பண்பாடு பல நூற்றாண்டு களாக நிலவி வந்துள்ளது. 18ஆம் நூற்றாண்டில் கிறித்துவ சமயப் பரப்புநர்களின் வருகை நமது சமூக அமைப்பில் தீண்டத்தகாதவர்கள் என்று கருதப்பட்ட சாதியினரில் பலரைக் கிறித்துவ சமயத்திற்கு மாற்றியது. இந்தப் போக்கு தமிழ்நாட்டிலும் பலவிடங்களில் நிலவியது. இது பல இந்து சமயத் தலைவர்களுக்குக் கவலை அளித் தது. 'தீண்டத்தகாதவரென'ப்படுவோர்க்குத் தேவையான சம உரிமையும் சம வாய்ப்பும் அளிக்கப்பட வேண்டும் என்றும் இல்லை யேல் இந்து சமூக அமைப்பு கட்டுக்குலைந்து போகும் என்றும் அவர்கள் உணரலாயினர். 1893ஆம் ஆண்டில் திருவல்லிக்கேணி இலக்கியச் சங்கத்தில் விவேகானந்தர் ஆற்றிய உரையில், ''சாதி முறை ஒரு சமூக அமைப்பாகும்; சமய அமைப்பு அன்று, ...இந்து சமயத்திற்கு இனிமேல் சாதி அமைப்பு எனும் ஆதாரக் கம்பம் தேவை யில்லை'' என்று குறிப்பிட்டார்.[4] இதன் மூலம் சாதிச் சிக்கலைப் போக்க விவேகானந்தர் எடுத்த முயற்சி புலனாகிறது. சாதி ஏற்றத் தாழ்வுகளைப் போக்கி எல்லோருக்கும் சம உரிமை அளிக்க வேண்டும் என்று இலட்சுமிநரசு, சீனுவாசப் பிள்ளை, வி. சுப்பிரமணிய அய்யர் போன்ற தலைவர்கள் விரும்பினர். மேலும் திருவல்லிக்கேணி இலக்கியச் சங்கம், இந்து முன்னேற்ற மேம்பாட்டுச் சங்கம், சென்னை இந்து சமூகச் சீர்திருத்தச் சங்கம் போன்ற பல சிறு அமைப்புகளும், 'இந்தியன் சோஷியல் ரிபார்மர்' (Indian Social Reformer) சுதேச மித்திரன் போன்ற பல ஏடுகளும் சாதிக் கொடுமையைக் களைய பாடு பட்டு வந்தன.

20-ம் நூற்றாண்டின் தொடக்கத்தில் சமூகச் சீர்திருத்த இயக்கங் களாலும் அவற்றின் தலைவர்களாலும் தீண்டாமைச் சிக்கல் பற்றி பரவலாகப் பேசப்பட்டது. சாதியில் உயர்ந்தோர் தாழ்ந்தோர்

என்ற நிலை மாறி, 'ஒரு பிராமணன் யாருடனும் கலந்து உண வருந்தலாம் பறையர் உட்பட'[5] என்று விவேகானந்தர் முழங்குமள வுக்கு விழிப்புணர்வு ஏற்பட்டது என்று கூற இயலும்.

இந்துமத சமூக அமைப்பில் மிகக் கணிசமான பகுதியினரான பறையர்கள் தாழ்த்தப்பட்டவர்களாக இருப்பது சமூக அமைப்பிற்குப் பெருந்தீங்கு பயக்கும் என்பதை உணர்ந்து சாதிப் பிரிவினைகளை ஒழித்து பிராமணர் பிராமணரல்லாதார் இவர்களிடையே ஒற்றுமை நிலவவும் சமத்துவம் தழைக்கவும் பல தலைவர்கள் பாடுபட்டனர் என்பதை ஜி. சுப்பிரமணிய அய்யர் ஆற்றிய பின்வரும் உரை யிலிருந்து அறிய இயலும் :

> இன்னல்களும் அவலங்களும் நிறைந்த இரங்கத்தக்க நிலையில் பறையர்களை வைத்திருப்பது இந்து சமூக அமைப்பின் களங்கமாகும். இந்து நாகரிகத்தின் துடைத்தெறிய முடியாத அவமானமுமாகும். காலந்தோறும் தொடரும் இக்கொடுமை, முன்னேற வேண்டும் எனும் அவர்களது பேராவலைக் கொன்று விடுகிறது. அவர்களுக்கு பரிவு காட்டவோ துணை புரியவோ எவரும் இல்லை. இந்தச் சூழ்நிலையில் அவர்கள் தங்கள் முயற்சிகளால் முன்னேற வேண்டும் எனக் கூறுவது வெந்த புண்ணிலே வேல் பாய்ச்சுவது போலாகும். பிராமணர்களுக் குள்ளவாறு அவர்களுக்கும் வினைத்திறம், உணர்ச்சிகள் வேட் கைகள் இருக்கின்றன என்று மதிக்காத வரையில், உலகத்தில் உள்ள உத்தியோகங்களும், ஊதியங்களும் பிராமணர்களின் ஏகபோகமல்ல என்பதை ஒப்புக் கொள்ளாத வரையில், சகோதரத்துவமும் நல்லிணக்கமும் வளராத வரையில் இந்தி யாவின் புதுவாழ்வு பற்றிய நம்பிக்கைக்கு வழியில்லை.[6]

மகாகவி பாரதியாரும் தம் பல கவிதைகளிலும் கட்டுரைகளிலும் சாதிப் பிரிவுகளைப் பற்றியும், அதில் உயர்வு தாழ்வு கொள்ளும் கொடுமையையும் கண்டித்துள்ளார். 'வேதியராயினும் ஒன்றே அன்றி வேறு குலத்தராயினும் ஒன்றே' என்றும், 'ஆரியர் சாதியுள் ஆயிரஞ் சாதி வகுப்பவர் வகுத்து மாய்க' என்றும், 'சாதிகள் இல்லையடி பாப்பா குலத்தாழ்ச்சி உயர்ச்சி சொல்லல் பாவம்' என்றும் 'தக ரென்று கொட்டு முரசே இந்தச் சாதி வகுப்பினையெல்லாம்' என்றும் பலவாறு சாதிப் பிரிவினையைப் பற்றித் தம் கருத்தைக் கூறியுள் ளார். 1916-ம் ஆண்டில் ஆங்கிலக் கட்டுரைகளில் சாதிக்கேட்டின் தீமையை எடுத்துரைத்துள்ளார்.[7]

இத்தகையச் சீர்திருத்தக் கருத்துக்கள் அக்காலத்தில் தோன்றிய புதின ஆசிரியர்களின் படைப்புக்களில் வெளிப்பட்டன. 1917-ம் ஆண்டில் ஆ. கோபால அய்யங்கார், கோ. ஆராவமுத அய்யங்கார் என்னும் இரு ஆசிரியர்கள் இணைந்து படைத்த 'நந்தன்' என்னும் புதினமும் இவ்வகைப்பட்டது.[8] இவ்விருவரில் ஒருவர் பச்சையப்பன் கல்லூரியில் ஆசிரியராகப் பணியாற்றி வந்தார் என்பதும், இக் கல்லூரியில்தான் 1916-ல் இந்து ஆசாரச் சீர்திருத்தச் சங்கத்தின் கூட்டங்கள் நடைபெற்றன என்பதும், அக்கூட்டங்களில் லட்சுமிநரசு, மாதவையா போன்றோர் சொற்பொழிவாற்றினர் என்பதும் குறிப் பிடத்தக்கது.[9] 'நந்தன்' எனும் புதினம் கோபாலகிருஷ்ண பாரதி யாரின் 'நந்தனார் சரித்திரக் கீர்த்தனை'யைத் தழுவி எழுதப்பட்டது என்ற போதிலும் பல புதிய கதைமாந்தர்களைப் புகுத்தி அவற்றின் மூலம் அக்காலத்தில் நிலவிய சமூகச் சீர்திருத்தக் கருத்துக்களைப் புதின ஆசிரியர்கள் வெளிப்படுத்தியுள்ளனர்; அக்கால கட்டத்தில் நடுத்தர வர்க்கத்தினரின் உள்ளத்தில் உதித்த புதிய எண்ணங்கள், இலட்சியங்கள் கருத்துக்கள் ஆகியவை இப்புதினத்தில் இடம் பெற் றுள்ளன. தீண்டாமை ஒழிப்பு, சாதி சமத்துவம், பண்ணை நில வுடைமையாளராக இருந்த பிராமணருக்கும் பண்ணையாட்களாக பணிபுரிந்த கீழ்ச்சாதியினருக்குமிடையே நிலவிய உறவுகள் முரண் பாடுகள் ஆகியவை இப்புதினத்தில் பேசப்படுகின்றன. இவை தொடர்பாக வரும் பகுதியில் விரித்துக் கூறப்படும்.

இந்நூற்றாண்டு முற்பகுதியில் 'நந்தன்' என்ற புதினம் எழுதப் பட்ட காலத்தில் பிராமணர்களிடையே முற்போக்கு எண்ணங்கள் கொண்ட பல தலைவர்கள் இருந்தனர் என்பதும் இவர்களுக்கும் சமூகச் சாதி ஏற்றத் தாழ்வைத் தூக்கிப் பிடித்த பழமைவாதிகளுக்கு மிடையே முரண்பாடுகள் நிலவின என்பதும் முன்பே குறிப்பிடப் பட்டன. இக்கருத்து வேற்றுமைகளைப் புதின ஆசிரியர்களாகிய கோபாலசாமி அய்யங்காரும் ஆராவமுதய்யங்காரும் நந்தனார் சரித்திரக் கீர்த்தனையில் இல்லாத பல புதிய பாத்திரங்கள் வாயிலாக வெளியிடமுயன்றுள்ளனர்.

முற்போக்குக் கருத்துக்களின் பிரதிநிதியாக கங்காதர சாஸ்திரிகள் என்பாரையும் பழமைவாதிகளின் பிரதிநிதிகளாக காமேச்வர சிரௌதிகள் என்பாரையும் தீட்சிதர் என்பாரையும் படைத்து அவர் களை உரையாட விட்டு தங்கள் காலத்திய கருத்துப் போராட் டத்தைப் புதின ஆசிரியர்கள் புலப்படுத்துகிறார்கள். நந்தன் சிதம்பரம் போவதற்குத் தன் ஆண்டையாகிய நீலகண்ட பட்டரிடம் அனுமதி வேண்டுகிறான். பட்டர் அவனைப் பலவாறு வைது விரட்டுகிறார். இவ்வமயம் சாஸ்திரிகளும் தீட்சிதரும் சிரௌதிகளும் அங்கு வர

நேரிட அவர்கள் செய்தி அறிந்து தமக்குள்ளே வாதாடுகின்றனர் ''ஆவுரித்துத் தின்றுழலும் புலையரேனும் கங்கைவாழ் சடைமுடிக்கு அன்பராகில் அவர் நாம் வணங்கும் கடவுளாரே''[10] என்ற அப்பர் கருத்தையும், விவேகானந்தர், சுப்பிரமணிய அய்யர், பாரதியார் ஆகியோரின் சீர்திருத்தக் கருத்துக்களையும் பிழிந்தெடுத்துத் தருவ தாக இவ்வுரையாடல் அமைந்திருக்கிறது எனலாம். சிரௌதிகள் ஏளனமாக நந்தனைப் பற்றி, 'நந்தன் சாம்பான் சங்கதியா?... அவன் சாம்பன் (சிவன்) ஆகிவிட்டானே நாம் சம்பையனாய்ப் போன அன்றைக்கே' என்கிறார் (நந்தன், ப. 76). அதற்கு சாஸ்திரிகள், ''நந்தன் பரமசிவா என்று சொல்லும் ஒவ்வொரு தடவைக்கும் சிவம் ஒவ்வொரு மணங்கு குறைந்து விடுமோ? ...வறட்டுத் தப்பளை (தவளை) போல் வேத அத்யயனம் பண்ணுபவர் புத்தி இவ்வளவுதான் என நிந்திக்கிறார் (நந்தன், ப. 76). வெறும் சடங்குகளையே மேலெனக் கருதுவோரே நந்தன் பக்தி செய்வதை நிந்திப்பர் என்றும் உண்மையான சாத்திரம் அறிந்தோர் அவ்வாறு செய்யார் என்றும் ஆசிரியர்கள், சாஸ்திரிகளின் வாதங்கள் மூலமாக நிலைநாட்டு கின்றனர். இங்கு விவேகாநந்தர், பாரதியார் ஆகியோரின் கருத் துக்கள் பிரதிபலிக்கப்படுவது குறிப்பிடத்தக்கது. தீட்சிதர் சாஸ்திரி களைப் பார்த்து, ''பறையனுக்குப் பரமசிவ சம்பந்தம் எவ்விதம் உண்டு சொல்லும்...'' என வினவுகிறார். சாஸ்திரிகள் தீட்சிதரிட மிருந்தே ஓர் உவமையை வரவழைத்து அதன் அடிப்படையிலேயே தீட்சிதரின் ஐயத்தை நீக்குகிறார். எவ்வாறு கடம் தங்கத்தாலா னாலும் மண்ணாலானாலும் அதன் உள்ளேயிருக்கும் காற்று ஒன்று தானோ அதே போல் உடல் எதுவாயிருந்தாலும் அதைச் சாதனமாகக் கொண்டிருக்கும் ஆன்மாவும் அதன் ஜீவாத்ம பரமாத்ம ஞானமும் வேறுபடா என்று கூறி, ''ஜாதியும் வர்ணமும் எதுவாக இருந்தால் என்ன, ஜீவாத்ம பரமாத்ம ஞானமன்றோ பெரிது?...பிராமணனாய்ப் பிறந்து வளர்ந்தும் பிரம்மஞானம் பெறவில்லையானால் அவனை நாம் சாதி அபிமானத்தால் மாத்திரந்தான் பிராமணன் என்று அழைக் கலாம்'' என்று சாதியின் முக்கியமின்மையை எடுத்துரைக்கிறார் (நந்தன், ப. 78). தீட்சிதரோ, விடாமல், ''வேதத்தினாற் பேசப் படாத சன்மத்திற்கு வேதத்திற்கே உரிமையான இறைவன் ஏது? என்று வாதாட, சாஸ்திரிகள் பறையர்களுக்கும் ஆன்மா உண்டு என்று கூறி பரமசிவத்தைத் தொழுவதால் பாபம் வராது என்றும் உயிர்ப்பலியையும் சிறுதெய்வ வழிபாட்டையும் நீக்கிவிட்டு நல்ல புத்தி வந்து நல்வழிப்படுவது உத்தமமே என்றும் கூறி பஞ்சமன் சிவனைத் தொழுவதால் யாருக்கும் தீங்கில்லை என்கிறார் (நந்தன், ப. 80). மேலும் நந்தன் பிராமணர் சமூகத்தில் இடம் கேட்கவில்லை என்றும் நடராசனின் அருளிற்கு உரியவனாக வேண்டும் என்று

மட்டுமே விரும்புகிறான் என்றும் விளக்கி 'நந்தனுக்கு ரட்சிப்பு இல்லையானால் நடராசனுக்கு சர்வரட்சகன் என்ற அடைமொழி பொய்யாகி விடும்' என சாஸ்திரிகள் கூறுவதாக ஆசிரியர்கள் உரையாடலை நடத்திச் சென்றுள்ளனர் (நந்தன், ப. 81). விவேகானந்தர் 'ஒரு மனிதன் எந்த வருணத்தனனாக பிறந்திருந் தாலும் அவன் கடவுளைத் தியானிப்பதிலும் அவரைக் குறித்து உரை யாடுவதிலும் காலத்தைக் கழிக்கும் பொழுது பிராமணன் ஆகிறான். இயல்பாகவே ஒருவன் ஒருசாதியினின்று தன்னை மற்றொரு சாதிக்கு மாற்றிக் கொள்ள முடியும்' என்று கூறியுள்ளார்.[11] ஆனால் புதின ஆசிரியர்கள் அவ்வளவிற்குச் செல்லவில்லை. பஞ்சமனுக்கும் சிவனை வழிபடும் உரிமையுண்டு என்கிற அளவிற்கே சென்றுள்ளனர். நந்தனார் சரித்திரக் கீர்த்தனையில் நந்தன் தீக்குளித்து இவ்வுடல் நீங்கிய பின்னரே பிராமண உடல்பெற்று வருகிறான் எனக் கூறி யிருப்பதற்கு மாறாக ஆசிரியர்கள் கதையை அமைக்க விரும்பாமை இதற்குக் காரணமாக இருக்கலாம்.

இந்தச் சிக்கல் புதினத்தின் இறுதியில் மீண்டும் எழுகிறது. அவ்வமயம் ஆசிரியர்கள் வைணவர்களுக்கும் தில்லைத் தீட்சிதர் களுக்குமிடையே ஓர் உரையாடலையும் அமைத்து அவர்கள் காலத்திய சர்ச்சைகளைப் புதினத்தில் நுழைக்கின்றனர். சாத்விகாசாரி என்னும் ஒரு வைணவர், தாழ்த்தப்பட்ட சாதியினரை ஏற்றுக் கொள்வது புதுமையல்ல என்றும், ஏற்கனவே வைணவர்கள் செய்தது தான் என்றும் கூறுவதாக முதல் உரையாடல் அமைகிறது. இவ் வைணவ பாத்திரமும் நந்தனார் சரித்திரக் கீர்த்தனையில் இடம் பெறாத புதிய பாத்திரம். சாத்விகர் அப்பண்ண தீட்சிதர் என்னும் தில்லைவாழ் அந்தணரில் ஒருவரை நோக்கி, ''ஏதையா, ஸ்மார்த்தர் களுக்கு இவ்வளவு விசால புத்தி தோன்றியது, சில மாதங்களுக்கு முன் நான் தீண்டாப் பெயர்வழி ஒருவனுக்குப் பஞ்ச ஸம்ஸ்காரம் செய் வித்தபோது ஊரார் எல்லாரும் ஒன்றாய்க்கூடி என்னை பகிஷ்காரம் செய்தீர்களே ! இது போன்றதை எங்கள் ஆசார்யர்கள் எவ்வளவோ கஷ்டம் அநுபவித்து முன்னமே செய்திருப்பதை நினைந்து நானும்... என் மட்டில் இருந்து கொண்டு உண்மை என்று நான் எண்ணியதை உள்ளபடி செய்தேன் என்று மனசுத்தியைத் துணையாகவும் ஆறுத லாகவும் கொண்டு காலம் தள்ளி வருகிறேன்'' என்கிறார் (நந்தன், பக். 105-106). இக்கூற்றிலிருந்து இரு வரலாற்று உண்மைகள் வெளியாகின்றன. ஒன்று, வைணவ ஆசார்யர் தீண்டாதாருக்குப் பஞ்ச சம்ஸ்காரம் செய்து வைத்தது; மற்றது, அவர்கள் மற்ற பிராமண களால் ஒதுக்கி வைக்கப்பட்டார்கள் என்பது. வைணவ ஆசாரியர் இராமாநுசர், உபதேச மந்திரத்தைப் பிராமணரல்லாதார்க்குச் சொல் வதால் தமக்குப் பெருந்தீங்கு வரும் என்று எச்சரிக்கப்பட்ட பின்னரும்

உலக நன்மையையே மேலாகக் கருதி திருக்கோட்டியூர் கோயில் கோபுரத்தின் மேலேறி நின்று பலரறிய அம்மந்திரத்தை உபதேசித் ததும், தீண்டத்தகாதார் என்போரையும் பஞ்ச சம்ஸ்காரம் செய் வித்துத் திருக்குலத்தாராக ஆக்கியதும், மேல் கோட்டையில் வாழ்ந்த காலத்தில் தாழ்த்தப்பட்டார்களை ஒவ்வோராண்டும் சில நாட்கள் கோயிலின் உட்செல்லவும் குளங்களில் குளிக்கவும் அனுமதித்ததும், மாறனேரி நம்பி என்னும் திருக்குலத்தானைச் சீடராகக் கொண்டதும் வைணவ சமய வரலாற்றில் கூறப்படுகின்றன.[12] புதின ஆசிரியர் களின் காலத்திலேயே பாரதியார் கனகலிங்கம் என்ற பஞ்சமனுக்குப் பூணூல் அணிவித்துக் காயத்ரி மந்திரம் உபதேசித்து பிராமணனாக ஆக்கியதையும் இங்கு நினைவுகூரல் தகும்.[13] விவேகானந்தரும், "சண்டாளர்கள் அனைவரையும் பிராமணர் நிலைக்கு உயர்த்துவதே நாம் செய்ய வேண்டிய வேலையாகும்"[14] என்று கூறியதும் அக் காலத்திய சிந்தனைக்குச் சான்று. இனி, இத்தகையப் பரந்த உள்ளம் கொண்டோர் துன்புறுத்தப்பட்டனர் என்பதற்கு நந்தனார் சரித்தர கீர்த்தனையின் ஆசிரியர் வரலாறு சான்று பகரும் என்பர். அவர் சாதியிலிருந்து ஒதுக்கப்பட்டாரென்றும் அவர் இயற்றிய கீர்த்தனை அன்றிருந்த மேல் சாதிப் பெரியோர்களால் இலக்கியமாக ஏற்கப்படவில்லையென்றும் கே. முத்தையா குறிப்பிட்டுள்ளார்.[15]

தீட்சிதர் போன்றோர் சைவ வைணவப் பிரிவினருக்கிடையே வேற்றுமைகளை வளர்க்க முற்பட்டபோது, இவ்வாறு பிராமணர் களுக்குள்ளேயே பூசலிட்டுக் கொள்வது கண்டனத்துக்குரியது என்று ஒரு நான்காம் வருணத்தினன் இடித்துரைப்பதாக ஆசிரியர்கள் இந் நிகழ்ச்சியை அமைத்துள்ளனர். "இந்தப் பார்ப்பார் கொழுத்துக்கிடக் கிறார்கள்...எங்களுக்கென்ன ? சிவன் வந்தாலும்தான் கும்பிடுகிறோம் விஷ்ணு வந்தாலும்தான் கும்பிடுகிறோம். எங்கள் அம்மா வைணவர் வீட்டுப் பெண். எங்கள் அப்பன் சைவருடைய பிள்ளை. நானும் என் மகனும் சைவர்தாம்...எங்களுக்குள்ளே ஒரு வேற்றுமையுமே காணோம் ? ஏன் பார்ப்பார்கள் இந்த மாதிரி அடித்துக் கொண்டு சாகிறீர்கள்? ...சிவன் யார் ஐயா ? விஷ்ணு யார் ஐயா ? அரியும் சிவனும் ஒண்ணு, அதை அறியாதவன் வாயில் மண்ணு" என்று அவன் தீட்சிதர் சாத்விகர் சண்டையை நிறுத்துகிறான். (நந்தன், பக். 107-108). சாத்விகரும், நடராசரும் காளியும் போட்டி போட்டு நடன மாடும் பொழுது நடுவராக கோவிந்தராசர் இருந்ததைக் குறிப்பிட்டு, கடவுள்களில் ஒருவர் மேல் மற்றவர் கீழ் என்பது தவறு என வாதாடு கிறார் (நந்தன், பக். 106-107). ஆசிரியர்கள் இவ்வாறு தற்காலத்திய கருத்துப் போரை நந்தன் காலத்து நிகழ்ச்சியாகச் சித்தரிக்கிறார்கள்.

இனி நந்தன் பற்றி தில்லைவாழ் மூவாயிரவர்களின் கனவில் ஈசன் வந்து கட்டளையிட்டதைப் பற்றிப் புதின ஆசிரியர்கள் தற்காலத்தியக்

கருத்துக்களைத் தெரிவிக்கும் வகையில் ஒரு விவாதமே நடத்து கின்றனர். ''பறையனுக்குப் பிராயச்சித்தமாம் ! ... நடராசன் கூட தென்னாலிராமன் போல் விளையாடுகிறார். கறுப்பு நாயைச் சிகப்பு நாயாக்குகிறார். நத்தை உறிஞ்சிப் பறைப் பயல் பிராமணன் ஆகி விடுவானோ ?' என்று சிலர் இறைவனின் கனவுக்கட்டளையை எதிர்க் கிறார்கள் (நந்தன், ப. 112). திருப்புன்கூரிலிருந்தும் ஆதனூரி லிருந்தும் வந்த பிராமணர்கள் முன் நடந்த அதிசயங்களைக் கூறி நந்தனை ஏற்பதில் தவறில்லை என்று ஒப்ப வைக்கிறார்கள். இப் பொழுது தீக்குளியாட்டலைச் சிலர் கண்டிக்கிறார்கள். ''இது யாகமா? இது பிராணத்தியாகம் அன்றோ ? எங்கேயாவது மனுஷ்ய யாகப் பசு உண்டோ ? நாகரிகம் மிக்க இக்காலத்திலும் நரபலி உண்டோ ?' (நந்தன், ப. 115) என்று எதிர்ப்பு தெரிவித்தவரும் அங்கு இருந்த தாக ஆசிரியர்கள் குறிப்பிட்டு, தங்கள் கருத்தாக 'நடராசன் இவர்கள் கனவில் தோன்றி கட்டளையிட்டிருந்தானேயாகில் இவர்களும் நந்தன் பக்கம் திரும்பியிருப்பாரோ அறியோம், அல்லது தாங்கள் வெகு காலமாய்ப் பஞ்சமரைப் பற்றிக் கொண்டுள்ள எண்ணங்களை எளிதில் மாற்றுவதற்கு முடியாமைதான் அவர்கள் இவ்வாறு எண்ணி யதற்குக் காரணமோ அதுவும் அறியோம்' என்கின்றனர் (நந்தன், ப. 116). மேலும் ''சாதிச் சண்டாளத்வம் நீங்காத நிலைமையில் தில்லைக்குள் அடிவையேன்' என்று நந்தன் அலறினார் என்றும் ஆகவே செந்தீயை வளர்த்தி அதில் நந்தரைக் குளியாட்டித் திருக் கோயிலுக்குள் அழைத்துச் செல்வதாக தீட்சிதர்கள் ஏற்பாடு செய் தனர்' என்றும் கதையைத் தொடர்வதிலிருந்து ஆசிரியர்கள் நந்தனார் சரித்திரக் கீர்த்தனையின் வரம்புகளை மீறத் தயங்குகின்றனர் எனப் புலப்படுகிறது. மேலும் இந்த யாகத்தைக் கங்காதர சாஸ்திரிகளைக் கொண்டே செய்விப்பதாகக் கதையைக் கொண்டு சென்றிருக் கின்றனர். இதை இரு விதமாகப் பொருள் கொள்ளலாம். ஒன்று நந்தனாரை ஏற்றதுபோல் தம்முள் மரபை மீறி நடந்துவந்த கங்காதர சாஸ்திரியாரையும் ஏற்றதாகக் கொள்ளலாம். மற்றது நந்தனை 'உய்விக்கும் பணியைப் பிராமணர்கள் இறைவன் கட்டளை யிட்டும் தாமாகவே செய்யத் தயங்கினர் என்றும் மரபு மீறிய சாஸ்திரி களுக்கே நந்தனை எரித்த பழி சேரட்டும் என நினைத்தனர் என்றும் கொள்ளலாம். நந்தன் தீயில் பொசுங்காது வெளிவந்தது நந்தனின் பக்திக்கு மட்டும் வெற்றியல்ல, கங்காதர சாஸ்திரி போன்ற சீர்திருத்தக்காரருக்கும் வெற்றியாக அமைகிறது என்று ஆசிரியர்கள் கொண்டதாகவும் எடுத்துக் கொள்ளலாம்.

பொதுவாகப் பார்க்குமிடத்து, புதிய கதை மாந்தர்களைப் படைத்து உலவ விடும்பொழுது தங்கள் காலத்தியச் சீர்திருத்தக் கருத்துக்களுக்கு வலிமை சேர்க்க முயன்றுள்ளனர் என்றும் கதையின்

கருவை மாற்றுமளவிற்குச் செல்ல அவர்களால் முடியவில்லை என்றும் கொள்ளலாம்.

இதுவரை பிராமண சமூகத்திற்குள் நிலவிய கருத்து வேற்றுமை களை புதிய பாத்திரங்கள் வாயிலாக புதின ஆசிரியர்கள் வெளிப் படுத்திய பாங்கு பேசப்பட்டது. இனி நந்தனுக்கு எதிராக அவனுடைய சமூகத்திற்குள்ளேயே தோன்றிய எதிர்ப்பைப் பற்றி புதின ஆசிரியர்கள் புதிய விதமாக ஏதாவது உரைத்துள்ளனரா என்பது ஆயப்படும்.

கோபாலகிருஷ்ண பாரதியார் போலவே இப்புதின ஆசிரியர்களும் நந்தனுக்கும் அவனுடைய சமூகத்தினருக்குமிடையே சிவ வழிபாடு பற்றி கீழ்வரும் முரண்பாடுகள் தோன்றின என்பர். முதலாவதாக, தம் குலத்திற்கே உரிய கடவுளரையும் பழக்க வழக்கங்களையும் கைவிடுதல் தகாது என்று நந்தன் குலத்தினர் கருதுவது. தமது தனித்தன்மையெனக் கருதப்படும் தமது பண்பாட்டைப் பாதுகாக்கும் இயல்பு ஒடுக்கப்பட்ட மக்களிடையே காணப்படுவதுண்டு என்பர் சமூகவியலார். இரண்டாவதாக, பொருளாதாரம் பற்றியது. சிவ வழிபாடு உழைக்காத ஆளும் வர்க்கத்தினருக்கே உரியது, உழைத்துப் பிழைக்கும் குலத்தினருக்கு ஒவ்வாது என்ற கருத்து. நந்தன் இம்முரண்பாடுகளை வெல்ல பலவிதமாக முயல்கிறான். சிறு தெய்வ வழிபாடு இம்மையிலும் ஓரளவே பயன்தர வல்லது; அன்றாட வாழ்க்கைச் சிக்கல்களுக்குத் தீர்வுகாணும் அளவிற்கே உதவக்கூடியது என்றும் சிவ வழிபாடு ஒன்றே இவ்வுலக வாழ்க்கையின் அவலங்களி லிருந்து நிரந்தரமான விடுதலை அளிக்கவல்லது, மறுமையிலும் பயன் தருவது என்றும் நல்லுரை கூறிப் பார்க்கிறான். இவ்வணுகுமுறை பயனளிக்காமையால், ''மாடு உண்டாகும்; கன்று உண்டாகும்; மற்றும் மெத்த தந்யம் வரும்; குடியும் தழைக்கும், குலமும் தழைக் கும்'' (நந்தன், ப. 25) என்று சிவ வழிபாட்டால் அவர்களுக்குப் புரியும் நன்மைகள் கிடைக்குமென ஆசை காட்டுகிறான். ''ஈசன் அருளால் உண்டாகும் இக சுக நன்மைகளில் நந்தனார் ஒரு பெரும் அட்டவணையை ஒப்பித்ததால் வெகு காலமாய் உழுது உழைத்துப் பாடுபட்டும் பயனில்லாமல் நிற்க நிழலும் சாரச் சுவருமின்றி வறுமையே மூதாதைகள் சேமித்து வைத்த பொருளாயும் தாங்கள் போற்றி வந்த தனமாயும் ஆண்டு அனுபவித்து வந்த பறையர் சிலர், 'நந்தன் சொல்லும் வார்த்தையில் நம்பிக்கை வைப்போம். அவன் சொல்லும் எல்லாவற்றையும் செய்வோம். எப்படியாவது நம் கஷ்டம் ஒழிந்தால் சரி' என்று அவனை ஆதரிக்கின்றனர் (நந்தன், ப. 25). பதினோரு பேர்கள் சேரியை விட்டு அகன்று நந்தனுடன் சேர்கின் றனர். நந்தனார் இவர்களை விபூதி அணிய வைக்க கதை சொல்லி

தன் பேச்சுத் திறமையை வெளிக்காட்டுகிறார். ''மற்ற பறையருடன் தங்க விட்டால் மோசம் வருமென்றும் இப்புதிய சிவபக்தர்களது உள்ளத்தில் பக்தி நன்றாகப் பதிவதற்கு தன் கையின் கீழேயே சில நாள் அவர்களை வைத்திருத்தலும் மற்ற பறையரிடமிருந்து பிரித்து வைத்தலும் நலம் என்று நந்தன் அறிந்து செயற்பட்டதாக ஆசிரியர்கள் ஓர் அரசியல் உத்தியை எடுத்துரைக்கிறார்கள் (நந்தன், ப. 32). பெரும்பாலாரான பறையர்கள் நந்தன் வழியை ஏற்க மறுக்கின்றனர். ஊர்ப்பெருங் கிழவன் உதவியை நாடுகின்றனர். கிழவனும் நந்தன் பக்கம் சேர்ந்து விடுகிறான். நந்தன் தன்வழி வராத பறையர்களை வன்முறையால் கீழ்ப்படிய வைக்கிறான். ஆசிரியர்கள், ''எந்த தேசத்திலும் பழைய காலங்களில் மத மார்க்கங்களைப் புகட்டியவர்கள் எவ்வெவ்விடங்களில் உபதேச முறை தவறிற்றோ, யார் யார் இடத்தில் நாவினால் தூண்டுதல் பலிக்கவில்லையோ, அவ்வவ்விடங்களில் குழந்தைகளை அடித்துப் பால் புகட்டுவார் போல அறிவிலிகளைச் சாம தான பேத தண்ட உபாயங்களினால் மேற்கொண்டு ஞானப்பாலைப் புகட்டியதுண்டு'' (நந்தன், ப. 61) என்று கூறி நந்தனின் வன்முறைக்கு நியாயம் கற்பிக்கிறார்கள். நந்தனின் வன்முறைக்கு அஞ்சி அவனுடைய பக்தி வழியில் பறையர்கள் செல்ல முற்படுகின்றனர். ஆனால் பொருளாதார முரண்பாடு தடையாக நிற்கிறது. ''உடலில் உயிர் தங்கி நின்றால் அல்லவோ பக்தி?... உழவும் பார்ப்பனர் சடங்கும் ஒற்றுமைப்படுமா?'' எனத் தயங்குகின்றனர். நந்தன் தன் பிடிவாதத்தைத் தளர்த்துகிறான். அவரவர்கள் செய்யும் தொழிலைத் தொடர்ந்து புரிந்து கொண்டே சிவ வழிபாடு செய்யலாம் என்கிறான். ''அவன் அவன் தான் தான் செய்து வந்த தொழிலை விட்டுவிட நான் சொல்லவில்லை. பாம்பு அடிக்கும் பொழுதும் பரமசிவனைப் பற்றி எண்ணு. தண்ணீர் பாய்ச்சும் பொழுதும் தாண்டவராயனைத் துதி; எது செய்த போதிலும் அவனை மறவாமல் மனதில் இறுத்தி வை. தெய்வங்களுக்கு எது இஷ்டமோ அதை நாம் செய்து வருவதுதான் பக்தி. விட வேண்டிய பிழைக்கும் வழியையல்ல'' என்கிறான் (நந்தன், ப. 66).

இவ்வாறு வாழ்விற்கும் வழிபாட்டிற்கும் சமரசம் காண்கிறான். அவனுடைய சாதனை, பறைச்சேரி ஒரு நொடிப்பொழுதேனும் பறையர்கள் ஒருங்கு கூடி பக்தி செய்தபொழுது புதுச்சேரி ஆவதும், அநாகரிகமான நடை உடை பாவனைகள் வரவரத் தேய்வுபடுதலுமே (நந்தன், ப. 62). வெறும் பண்பாட்டு இயக்கமாகவே நந்தனின் பக்தி இயக்கம் நின்று விடுகிறது. சாதியடிமைத்தனத்திலிருந்து மீளும் இயக்கமாக உருப்பெறவில்லை.

சாதி முரண்பாடும் வர்க்க முரண்பாடும் ஒன்றோடொன்று பின்னிக் கிடப்பன என்பதை நந்தனுக்கும் சேரிப் பெருங்கிழவன்

மூப்பனுக்குமிடையே நிகழும் உரையாடல் வாயிலாக ஆசிரியர்கள் புலப்படுத்துகின்றனர். சிவாலயம் போவதும் அதில் உள்ள பார்ப்பாரச் சாமியைத் தொழுவதும் பறையர் குலத்துக்கு ஒவ்வாத காரியம் என் பதை விளக்கும் வகையில் மூப்பன் கூறுகிறான் :

> பார்ப்பருக்கும் நமக்கும் கூட்டுறவு எதுவுமில்லை. நாம் கறுநிறமாய் இருக்கிறோம் என்பதற்காக நம்மைக் கண்டாற் காதவழி விலகச் செய்கிறார்கள். உழைப்பது நாம், உண்பது அவர்கள். நமக்கு வீடு கிடையாது, வாசல் கிடையாது; கட்டத் துணியும் கிடையாது. நாம் குடிப்பது கூழ்; அவர்கள் புசிப்பது அன்ன போசனம். அவர்களது ஊரில் நாம் போகல் ஆகாது; ஆனால் அவர்களுக்கு நாம் குளம் வெட்ட வேண்டும்; வெட்டிய பிறகு அதில் தண்ணீர் எடுக்கக் கூடாது. வீடு கட்ட மண்ணுங்கல்லும் சுமப்பது நமது கடமை. கட்டின அன்று தாங்கள் கூடி விலாப்புடைக்கப் பரிந்து அருந்துஞ்சோற்றில் கால் வயிறேனும் நமக்குக் கொடார்கள். நமக்கும் அவர்களுக்கும் ஒரு நிமிடமேனும் ஒற்றுமை கிடையாது. அன்பும் கிடையாது, பட்சமும் கிடையாது, பாரபட்சம் அதிகம் உண்டு. சாகக் கிடந்தாலும் வீடு ஏறி வந்து பாரார். நாம் செத்துக் கிடந்தால் செத்த செலவிற்கும் சீட்டு எழுதி வாங்குவார்கள். பாவி செத்தான், பயிர்த்தொழில் பாழாச்சு என்பார்கள்...கஷ்டப்பட்டு முழு மனதுடன் உழைக்கிறானே என்று எண்ணியாவது நமக்கே என்று ஒரு குழி நிலம் யாராவது விட்டதுண்டா? நமது நாற்றக் குடிசைகளை நற்குடிசைகள் ஆக்கப் பணம் உதவியதுண்டா?

என்று ஒரு சொற்பொழிவே நிகழ்த்துகிறான் (நந்தன், ப. 50). இதற்கு மறுமொழி கூறும் நந்தன் பார்ப்பாரை மட்டும் நிந்திப்பது சரியல்ல என்று கூறி சூத்திரர்களும் தங்களை இழிவாக நடத்துவதைச் சுட்டிக் காட்டுகிறார். ''பணத்திமிறு ஏறிக் கிடப்பது யாருக்கு?... நம்முடன் கூடக் கலப்பை பிடித்து உழுவார்கள்; மண்வெட்டி எடுத்து வெட்டுவார்கள்; நெருங்கி நின்று வேலை செய்வார்கள். ஆனால் கயிறு கொண்டு கட்ட முடியாத அவ்வளவு அன்பு நம்மிடத்தில் அவர் களுக்கு இருக்கக் காணோமே" என்கிறார் (நந்தன், ப. 51). நந்தனின் வாதத்தில் பிராமணர் பிராமணரல்லாதார் பூசலைப் பற்றி அன்று பாரதியார் போன்றோர் கருத்து எதிரொலிக்கிறது. ''நம் முடைய சைவ வேளாளருள்ளே 'அல்லாதார்' கிளர்ச்சியைச் சேர்ந் திருப்பவருங்கூட....தமக்குக் கீழேயுள்ள இரண்டாயிரத்துச் சில்லரைச் சாதியர்களுடனும் தாம் சேர்ந்துண்டு மணம் புரிந்து வாழுமாறு

யாதொரு பிரயத்தனங்களும் செய்யாதிருக்கிறார்கள்'' என்று பாரதியார் ஒரு கட்டுரையில் எழுதியிருப்பது குறிப்பிடத்தக்கது.[16]

நந்தன் மூப்பன் உரையாடலில் மூப்பனின் வாதங்கள் முன்பு கூறப்பட்ட இரு முரண்பாடுகளையும் தழுவியுள்ளன. முதலில் பொருளாதார முரண்பாட்டையும் வர்க்கப் பகைமையையும் எடுத்துக் கூறிய மூப்பன் இறுதியாக தம் குலப் பண்பாடே பின்பற்றத் தக்கது என்கிறான். ''தாய் முலைப்பாலைக் குடித்துப் பிழைக்காத பிள்ளை தாதி கட்டை விரலைச் சப்பிப் பிழைக்குமா ? அந்நியரிடத்திற் கூட்டுறவை விடு. இன நட்பு என்பது உனக்குக் கிடையாதா ?... பார்ப்பாரச் சாமியை பக்தி செய்வாயானாற் பறையர்களைப் பகைத்தது ஆகவில்லையா ?'' என்பது குறிப்பிடத்தக்கது. அடிமைப் பட்ட மக்களின் தலைவர்களில் பலர் அந்நியரின் பண்பாட்டை எதிர்த்து சொந்தப் பண்பாட்டைப் போற்றியும் வருவது இன்னும் காணக் கிடக்கிறது. அன்றும் திலகர் முதலானோர் இது போன்ற நிலை எடுத்தது ஒப்புநோக்கற்பாலது. இறுதியாக நந்தனால் இப் பிறப்பில் அடிமைத்தனத்தினின்று விடுதலை கிடையாதாகையால் எல்லா வகை அடிமைத்தனங்களினின்றும் விடுதலை அளிக்கும் பிறவா வரம் தருவது சிவவழிபாடே என்பதை விளக்கியே தன் நிலையை நிலைநிறுத்த முடிகிறது.

நந்தன் தில்லை செல்லத் தீர்மானித்தது 'பறையர்களுக்கு வயிற்றில் புளியைக் கரைத்தது போலிருந்தது'. நந்தன் சேரியில் பலரையும் அழைத்துச் சென்றால், நடவு வேலை கெட்டு விடும் என்றும் தங்கள் பிழைப்பு போய்விடும் என்றும் அஞ்சுகின்றனர். பொருளாதார முரண்பாட்டை உடனடியாக எதிர் கொள்ள வேண்டிய நிலையில் நந்தனை அவனுடைய ஆண்டையின்மூலம் கட்டுப்படுத்த முயல்கின்றனர். ''ஊரில் உள்ள ஐயன்மார் பயிர்த்தொழிலுக்குப் பறையன் ஒருவனேனும் அகப்படப் போவது இல்லை'' என்று அவரை அச்சுறுத்தி நந்தனின் தில்லைச் செல்கையைத் தடுக்கும்படி கோரு கின்றனர். இவ்வாறு நந்தனுக்கும் அவனுடைய குலத்தினருக்கும் ஏற்பட்ட முரண்பாடு, அதாவது பெருந்தெய்வ வழிபாட்டிற்கும் உழவுத் தொழிலுக்குமுள்ள முரண்பாடு தீர்க்கப்படாது 'அந்நியத் தலையீட்டிற்கு' வழிகோலுகிறது.

மேற்சாதி முரண்பாடுகளைச் சித்தரிக்கப் பல புதிய பாத்திரங் களைப் புகுத்திய ஆசிரியர்கள் நந்தன் சாதி முரண்பாடுகளைப் பழைய பாத்திரங்களைக் கொண்டே விளக்கியுள்ளனர். உரையாடல் களின் உள்ளடக்கத்திலும் ஆசிரியர்களின் கூற்றுக்களிலும் புதிய கருத்துக்களை ஆங்காங்கே நுழைத்ததோடு திருப்தியடைந்து விட்டனர்.

மேனிலையாக்க முயற்சிகள் மேற்சாதிகளிடத்திலும் கீழ்ச்சாதி களிடத்திலும் எவ்வெவ்வகையான எதிர்ப்புகளைச் சந்திக்க வேண்டி யிருக்கும், எவ்வெவ்விதமான முரண்பாடுகளைத் தோற்றுவிக்கும் என்பதைப் புதின ஆசிரியர்கள் தங்கள் புதினத்தில் புதிய பாத்திரங்கள் உரையாடல்கள் ஆசிரியக் கூற்றுகள் ஆகியவற்றின் வாயிலாகத் திறம்பட எடுத்துரைத்துள்ளனர்.

1917-இல் வெளிவந்த நந்தன் என்ற புதினம் கோபாலகிருஷ்ண பாரதியார் இயற்றிய நந்தனார் சரித்திரக் கீர்த்தனையைத் தழுவி, கதையின் போக்கிலும் முடிவிலும் எவ்வித மாற்றமும் செய்யாது எழுதப்பட்டதாகும்.. இப்புதினம் எழுதப்பட்ட காலத்தில் தமிழகத்தில் தாழ்த்தப்பட்ட சாதியினரின் இழிநிலையைப் போக்குவது பற்றியும், இந்து சமயத்திற்குள்ளே நிலவிய சாதிப் பிரிவினைகளை ஒழிப்பது பற்றியும் தேசிய இயக்கத்தின் தலைவர்களும் சமூகச் சீர்திருத்த இயக்கத்தினரும் பேசி வந்தனர். இந்த இயக்கங்களால் நாட்டில் ஒரு விழிப்புணர்வு ஏற்பட்டது புதிய கருத்துக்களும் சிந்தனைகளும் எழுந்தன. இவற்றின் பிரதிபலிப்பு இப்புதினத்தில் காணப்பெறுகிறது. புதின ஆசிரியர்கள் புதிய பாத்திரங்களை நுழைத்து அவற்றின் உரையாடல்கள் வாயிலாக அவர்கள் காலத்திய கருத்துக்களைக் கூறியுள்ளனர். ஆசிரியர் கூற்றாக வரும் பகுதிகளிலும் இவை காணப் பெறுகின்றன.

கங்காதர சாஸ்திரியார், சாத்வீகாசாரி ஆகிய பாத்திரங்கள் பிராமணர்களிடையே புதிய சீர்திருத்தக் கருத்துக்களைப் பரப்பிவந்த விவேகானந்தர், சுப்பிரமணிய ஐயர், பாரதியார் போன்றவர்களைப் பிரதிநிதித்துவப் படுத்துகின்றன. சாதியில் உயர்வு தாழ்வு கருதுதல் கூடாது என்றும் கீழ்ச்சாதியினரும் பெருந்தெய்வ வழிபாடு செய்ய உரிமையுடையார் என்றும் இந்து சமய சாத்திரங்கள் இதை அனுமதிக் கின்றன என்றும் பிராமணர்கள் தங்களுக்குள் உள்ள வேற்றுமை களைக் களைய வேண்டும் என்றும் இந்து சமய ஒற்றுமைக்குப் பாடுபட வேண்டும் என்றும் பல கருத்துக்கள் உரையாடல்களில் இடம் பெற்றுள்ளன. எனினும் நந்தனைத் தீக்குளியாமல் கோயிலுக்குள் செல்வதாகக் காட்டாமையும் தீக்குளிப்பு என்னும் யாகத்தை கங்காதர சாஸ்திரிகளைக் கொண்டு நடத்தி வைப்பதாகக் காட்டி யிருப்பதும் சீர்திருத்தப் போக்கு சொல்லளவேயன்றி செயலளவில் இல்லை என்று கருத இடம் தருகிறது.

நந்தன் பாத்திரமும் நந்தனார் சரித்திரக் கீர்த்தனை காட்டிய நந்தனாரினின்று அதிகம் வேறுபடவில்லை. ஆசிரியர்கள் காலத்தில் இயங்கிய தாழ்த்தப்பட்டோர் இயக்கங்களின் பாதிப்பு நந்தன்

பாத்திர வடிப்பில் புலனாகவில்லை. சேரிப் பெருங்கிழவனின் உரையாடலில் பிராமண நில உடைமையாளரைப் பற்றிய கண்டனம் பெருமளவு அக்காலத்திய சிந்தனையை ஒட்டியிருக்கிறது. நந்தன் ஒரு சாதி ஒழிப்புக் கிளர்ச்சிக்காரனாகக் காட்டப்படவில்லை.[17] தன்னுடைய சமூகத்தைப் பண்பாட்டளவில் மேனிலையாக்கம் செய்ய முற்படுபவனாகவே காட்டப்படுகிறான். தன்னுடைய பக்தி இயக்கத்தால் மேற்சாதி நிலவுடைமையாளருடன் மோதல் ஏற்படுமளவிற்குப் பொருளாதார முரண்பாடுகள் விளையும் என்று உணர்ந்ததும் அதைத் தவிர்க்கத் தன் குலத்தினர் மீது தான் விதித்த கட்டுப்பாடுகளைத் தளர்த்துகிறான். தானும் தன் ஆண்டைக்குச் செய்ய வேண்டிய பணிகளைச் செய்து முடித்து விட்டே தில்லை செல்வதாக ஒப்புகிறான். ஒரு தாழ்வு மனப்பான்மையுடனே செயற்படுகிறான்.[18] உயர்ச் சாதியினரின் பண்பாட்டை எய்த வேண்டுமென்று மட்டுமே நந்தனுடைய குறிக்கோள் இருந்ததே தவிர அவர்களுடன் சம உரிமை கொண்டாடவோ அவர்களுடன் சேர்ந்து வாழவோ வேண்டும் என்று எண்ணியதாகத் தெரியவில்லை.

ஆக, நந்தன் தன் சாதிக்கு இப்பிறவியில், இப்புவியில், விடுதலையில்லை என்றும் சிவவழிபாட்டால் பிறப்பு இறப்புச் சூழலினின்று விடுபடுவதால் மீண்டும் ஈனச் சாதியில் பிறவாமல் பிழைக்கலாம் என்றும் நம்புவதாகவே இப்புதின ஆசிரியர்களும் முந்தைய நந்தன் கதைகளில் இருந்தது போல் நந்தன் பாத்திரத்தை அமைத்துள்ளனர். நந்தனை ஒரு முழுமையான மேனிலையாக்க இயக்கத் தலைவனாகப் படைக்கும் நோக்கமெதுவும் புதின ஆசிரியர்கட்கில்லை என்ற போதிலும் அத்தகைய இயக்கத்தின் தன்மைகளான கீழ்த்தெய்வ வழிபாட்டைக் கைவிடல், மூடநம்பிக்கைகளைக் கைவிடல், தூய்மையாகவும் நல்ல பண்பாட்டுடனும் வாழ்தல் போன்றவற்றை ஆசிரியர்கள் வரவேற்கின்றனர்.

## அடிக்குறிப்புகள்

1. வேதநாயகன் பிள்ளை, பிரதாப முதலியார் சரித்திரம், சென்னை: சக்தி வெளியீடு, 1957, ப. 11.
2. க. கைலாசபதி, தமிழ் நாவல் இலக்கியம், சென்னை: நியூ செஞ்சுரி புக் ஹவுஸ், 2-ம் பதிப்பு, 1977, ப. 28.
3. A. Kettle, *An Introduction to the English Noval,* Vol. I London, Hutchumson, 1953, Rept. 1978, p. 33.

4. பெ. சு. மணி, **பாரதியாரும் சமூகச் சீர்திருத்தமும்**, சென்னை: திருமகள் நிலையம், 1980, பக். 28-29.

5. மே. நூ., ப. 28.

6. மே. நூ., ப. 38, சுப்பிரமணிய அய்யர் இச்சொற்பொழிவை 13. 1. 1893 அன்று சென்னை யங்மென் அசோஷியனில் ஆற்றினார்.

7. மே. நூ., பக். 55-56, 166-168.

8. ஆ. கோபாலசுவாமி ஐயங்கார், கா. ஆரவமுத ஐயங்கார், **நந்தன்**, சென்னை: சீனிவாச வரதாச்சாரி வகையார், சாலி 1840, பிங்கள (1917).

9. பெ. சு. மணி, மு. கூ. நூ., பக். 34, 70.

10. அப்பர், **தேவாரம்**.

11. விவேகானந்தர், **புதிய இந்தியாவைப் படைப்போம்**, சென்னை: இராமகிருஷ்ண மடம், 1983, ப. 9.

12. கா. சிவத்தம்பி, **தமிழ் இலக்கியத்தில் மதமும் மானுடமும்**, சென்னை: தமிழ்ப் புத்தகாலயம், 1983, ப. 114.

13. ராஜம் கிருஷ்ணன், **பாஞ்சாலி சபதம் பாடிய பாரதி**, சென்னை: பாரி புத்தகப் பண்ணை, 1983, ப. 345.

14. விவேகானந்தர், மு. கூ. நூ., ப. 59.

15. கே. முத்தையா, **தமிழ இலக்கியங்கள் கூறும் வர்க்க சமுதாயம்**, சென்னை: சிகரம் வெளியீடு, 2-ம் பதிப்பு, 1981, ப. 58.

16. சுப்பிரமணிய பாரதியார், **பாரதியார் கட்டுரைகள்**, (தொகுப்பு), சென்னை : பூம்புகார் பிரசுரம், 1977, ப. 341.

17. க. கைலாசபதி, **அடியும் முடியும்**, சென்னை : பாரி நிலையம், 1970, பக். 314 - 315.

18. அ. ச. ஞானசம்பந்தம், 'திருநாளைப்போவார் தீக்குளித்தது ஏன்?' **கல்கி தீபாவளி மலர்**, சென்னை, 1969, பக். 87-88.

## புதிய நந்தன் - சிறுகதை (புதுமைப்பித்தன்)

1931 நவம்பரில் பெரியார் ஈ.வெ. இராமசாமி ஐரோப்பியச் சுற்றுப் பயணம் ஒன்றை மேற்கொண்டார். அச்சுற்றுப்பயணத்தில் சோவியத் நாட்டிற்கும் சென்றார். சோவியத் நாட்டில் கண்ட மாற்றங்கள் அவரை மிகவும் கவர்ந்தன. பொதுவுடைமை கொள்கைகளில் அவருக்குப் பற்று ஏற்பட்டது. 1932 டிசம்பரில் நாடு திரும்பிய பின், சுயமரியாதை இயக்கத்தை சமதர்மக் கொள்கைகள் கொண்ட ஓர் அரசியல் அமைப்பாக மாற்றியமைக்க விரும்பினார். தமிழகத்தின் முதல் பொதுவுடைமைவாதி எனக் கருதப்பட்ட தொழிற்சங்கத் தலைவர் மு. சிங்காரவேலுவின் ஒத்துழைப்புடன் ஒரு புதிய திட்டத்தை 1932 டிசம்பர் 29 அன்று ஈரோட்டில் நடந்த சுயமரியாதைக் கட்சியின் பொதுஅவைக் கூட்டத்தின் முன் வைத்தார். 'ஈரோட்டுப் பாதை' என்று அழைக்கப்பெற்ற இத்திட்டத்தின் படி சுயமரியாதைக் கட்சி இரு பிரிவுகளாக இயங்கலாயிற்று. ஒரு பிரிவு அரசியல் இயக்கத்தைக் கவனித்துக் கொள்ள, இன்னொரு பிரிவு சமூக சீர்திருத்தத்திற்காகப் பாடுபடலாயிற்று. பின்னதின் தலைவராக விளங்கிய இராமநாதன் ஒரு தீவிர பகுத்தறிவாளர். உலகத்துப் பகுத்தறிவு இயக்கங்களுடன் தொடர்பு கொண்டு, அவற்றிடமிருந்து பகுத்தறிவுப் பிரச்சார நூல்களைப் பெற்று தமிழாக்கம் செய்து வெளியிட்டார். சமய எதிர்ப்புப் பிரச்சாரம் தீவிரப்படுத்தப்பட்டது. இப்பிரச்சாரம் இந்து சமயத்தைத் தாக்கிய தோடு நிறுத்திக் கொள்ளவில்லை. கிறித்துவ சமயத்தையும், குறிப்பாக ரோமன் கத்தோலிக்கப் பிரிவை, வன்மையாகக் கண்டித்தது. முக்கியமாக, தஞ்சை, திருச்சி மாவட்டங்களில் தாழ்த்தப்பட்ட வகுப்பினரிடையே கிறித்துவ சமயத்திற்கெதிராக ஊர்தோறும் பிரச்சாரம் நடத்தியது. மத மாற்றத்தினால் தாழ்த்தப்பட்டோரின் சமூக நிலை எவ்விதத்திலும் உயரவில்லை என்பதைச் சுட்டிக் காட்டியது. கிறித்துவ சமயக் குருமார்களின் ஒழுக்கக் கேடுகளை அம்பலப்படுத்தியது. இதன் விளைவாக கிறித்தவ சமயத்தைத் தழுவிய தாழ்த்தப்பட்ட வகுப்பினைச் சார்ந்த பல்லாயிரக் கணக்கானவர்கள் மாதாகோயில் செல்வதை நிறுத்தினர். 'மக்கள் சமயம்

என்னும் சகதியினின்று விடுவிக்கப்பட்டாலன்றி சமூகப் பொருளாதார விடுதலையோ அரசியல் விடுதலையோ சாத்தியமில்லை' என்று இராமநாதன் பேசினார்.[1]

சுயமரியாதை இயக்கம் இங்ஙனம் நிலை கொண்டிருக்க, அண்ணல் காந்தியின் தலைமையில் இயங்கிய தேசிய இயக்கமும் தாழ்த்தப்பட்ட வகுப்பினரின் பிரச்சினையில் தீவிர கவனம் செலுத்தலாயிற்று. திருவிதாங்கூர் சமசுதானத்தில் வைக்கம் என்ற ஊரில் கோயிலருகேயுள்ள வீதிகளில் தாழ்த்தப்பட்ட சாதியினர் நுழைவதற்கிருந்த தடையை எதிர்த்து ஒரு கிளர்ச்சி 1924 ஏப்ரல் திங்களில் துவங்கியது. வைக்கம் சத்தியாக்கிரகம் என்று புகழ் பெற்ற இக்கிளர்ச்சியை அன்று தமிழ்நாட்டுக் காங்கிரசுத் தலைவராயிருந்த ஈ. வெ. இராமசாமி தலைமை தாங்கி நடத்திச் சிறை சென்றார். இந்த இயக்கம் காந்தியின் தலையீட்டின் பிறகு வெற்றியுடன் முடிவு பெற்றது. அவ்வமயம் காந்தி, சனாதனிகள் எனப் படும் தீவிரமான வைதீகர்களுடன் பேச்சு வார்த்தை நடத்தியது குறிப்பிடத்தக்கது.

காந்தி தாமே ஒரு தூய சனாதனி என்றும் சனாதன தர்ம அடிப் படையிலேயே தீண்டாமையை எதிர்ப்பதாகக் கூறியும், எழுதியும் வந்தார் என்பது குறிப்பிடற்பாலது.[2] காந்தியின் இக்கூற்றுக்களை மறுத்தும் ஆதரித்தும் வைதீகப் பெருமக்கள் பத்திரிக்கைகளில் விவாதங்கள் நடத்தி வந்தனர்.

மேற்கூறிய வரலாற்று நிகழ்ச்சிகளைப் பின்னணியாகக் கொண்டு புதுமைப்பித்தன் ''புதிய நந்தன்''[5] என்ற கதையைப் படைத்துள்ளார். தாழ்த்தப்பட்ட சாதியின் பிரதிநிதியாக கருப்பனை யும், வைதீகச் சனாதன இயக்கத்தைப் பிரதிநிதித்துவப்படுத்தும் வகையில் விசுவநாத சிரௌதிகளையும், காந்தீய அரிசன நல இயக்கத்தின் பிரதிநிதியாக சிரௌதிகளின் மகன் இராமநாதனை யும், விழித்தெழுந்து கிறித்துவ மதத்திற்கு மதம்மாறி மேம்பாடு அடைய முயன்று தோல்வி கண்டு சுயமரியாதை இயக்கத்தைத் தழுவும் போக்கினை எடுத்துக்காட்ட பாவாடையையும் கதாசிரியர் திறம்பட படைத்துள்ளார்.

புதுமைப்பித்தன் கதையில் வரும் பாத்திரங்கள் நந்தன் சரித்திரத் தில் வரும் பாத்திரங்கள் அல்லர். எல்லோரும் தற்காலத்திய மாந்தர். பெயர்கள் கூட பழைய பாத்திரங்களிலிருந்து வேறுபட்டவை. என்னும் நந்தன் கதையை நினைவு கூறும் வகையிலேயே கதையின் போக்கு அமைந்துள்ளது.

நந்தனாரின் மோட்சத்தாலோ, அவருடைய வாழ்க்கை வரலாற்றை உருக்கமான கதைகளாக ஆக்கி நாடெங்கும் பரப்பியதாலோ தாழ்த்தப்பட்ட சாதியினர் எவ்வித நன்மையும் பெறவில்லை. அவர்கள் நிலை அப்படியே இருக்கிறது. ''நந்தன் பறைச்சேரியில் விடைபெற்றுக் கொண்ட பிறகு, பறைச்சேரிக்கு என்னமோ கதி மோட்சம் கிடையாது. பழைய பறைச்சேரிதான். பழைய கள்ளுக் கடைதான்'' (ஆ. ப. 46) என்று குறிப்பிடுகிறார்.

அது மட்டுமல்ல, முன்னைவிட ஒருவகையில் அடிமைத்தனம் மிகுந்து விட்டது என்கிறார். ''சேரிப்பறையர்கள் ஆண்டையின் அடிமைகள். அத்துடன் அவர்களுக்குத் தெரியாத வெள்ளைத் துரைகளின் அடிமைகள்'' என்று நிலவுடைமை ஆதிக்கத்துடன் அந்நிய ஏகாதிபத்தியத்தின் ஆதிக்கமும் சேர்ந்து கொண்டதைக் குறிப்பிடுகிறார் (ஆ. ப. 46). இதன் விளைவாக ஆண்டை ஆண்டையாக மட்டுமில்லாது பிரிட்டிஷ் சாம்ராஜ்யத்தின் தூணாகவும் இருந்ததை தனக்கே உரிய நடையில் நையாண்டி செய்கிறார்.

''கருப்பன் ஒரு கிழட்டு நடைப்பிணம்'' (ஆ. ப. 47) என்று கருப்பனை அறிமுகப்படுத்தும் பொழுதே, விழித்தெழாத தாழ்த்தப்பட்ட சாதியினரின் நிலைமையையும் விமர்ச்சிக்கிறார். தாங்கள் கொடுமைக்குள்ளாகியும் கொடுமை என்று உணராது தங்கள் அடிமை நிலையிலேயே இலயித்து இருப்பதாகக் காட்டுகிறார்.

கருப்பனின் மகன் பாவாடை இவ்வடிமைத்தனத்தினின்று விடுபட விரும்பி, கல்வி பயின்றிட கிறித்தவப் பாதிரியாருடன் செல்கிறான். மதம் மாறி 'டானியேல் ஜான்' ஆகிறான். கல்வியில் முன்னிற்கிறான்; என்றாலும் பாதிரியாரின் மகளைக் காதலித்ததும் அவனுடைய பிரமையைப் பாதிரியார் தகர்க்கிறார். அவர் வேளாளக் கிறித்துவர். அவன் பறையன். எம்மதம் மாறினாலும் பறையன் பறையனே என்ற உண்மையைப் புலப்படுத்துகிறார். மத மாற்றம் மூலம் மேனிலையாக்கம் பெற முடியாது என்பதைப் புதுமைப்பித்தன் சுட்டிக் காட்டுகிறார்.

டானியேல் ஜான் என்கிற பாவாடை சுயமரியாதை இயக்கத்தில் ஈடுபட்டு அதன் பிரச்சாரகன் ஆகிறான். இப்பொழுது அவன் பெயர் தோழர் நரசிங்கம். தன் ஊர் திரும்பியதும் அவன் கண்ட உண்மைகளில் ஒன்று அவனுக்கும், அவன் குடும்பத்தினருக்கும் எண்ணங்களிலும், செயல்களிலும் பெரிய பிளவு இருக்கிறது என்பதே. ''இவர்களை மனிதரின் நிலைக்குக் கொண்டு வர எந்தப் பகீரதன் உண்டாகப் போகிறானோ!'' என்ற மலைப்பு அவனுக்கு ஏற்பட்டது. தன் பிரசங்கங்கள் 'படித்தவரிடத்தில் செல்லும். இவ்வாயில்லாப் பூச்சிகள் என்ன செய்வர்?' (ஆ. ப. 49).

சுயமரியாதை இயக்கம் உட்பட மேற்சாதியினரால் நடத்தப்பட்ட இயக்கங்கள் அடிமட்டத்தில் இருந்தவரிடம் எவ்வித பாதிப்பும் ஏற்படுத்தவில்லை என்பதை புதுமைப்பித்தன் சுட்டிக் காட்டுகிறார் எனலாம். பாவாடை மீண்டும் தன் இயற்பெயருடன் நடமாடவில்லை என்பதும் குறிப்பிடத்தக்கது. தோழர் நரசிங்கத்தை ஏற்றுக் கொள்ளும் சமூகம் பாவாடையை ஏற்காது என்பது ஒரு புறம் இருக்க, அந்த இயற்பெயர் அவனுடைய சாதிச் சிறையின் குறியீடு என்றும், விடுதலை வேட்கையுடைய அவன் மீண்டும் அச்சிறைக்குள் செல்ல வில்லை என்றும் ஆசிரியர் குறிப்பாகக் கூறுகிறார் எனலாம்.

காந்திய இயக்கத்தின் பிரதிநிதியாக வரும் இராமநாதன் பாவாடையின் தங்கைக்குப் பாவம் செய்து விட்டதாக நினைத்து அவளை மணம் புரிய முன் வருகிறான். ஆனால் கருப்பன் இது நடக்கமுடியாத செயல் என்கிறான். வைதிகக் கருத்துக்களின் ஆதரவாளராக வரும் சிரௌதிகள் காந்தியை வாதத்தில் வென்று விட்டால் சனாதனத்தின் மேன்மையை மகன் உணர்வான் என நம்பு கிறார்.

காந்தி ஆதனூருக்கு வருவதின்மூலம் சனாதனம், சுயமரியாதை இயக்கம், காந்திய இயக்கம் ஆகிய மூன்று போக்குகளுக்கும் ஒரு சோதனை நடக்கப் போவதாக ஆசிரியர் கதையை நடத்திச் செல்கிறார். காந்தி வருவதற்கு முன் வந்த விரைவுத்தொடர் வண்டியில் கருப்பன் அடிபட்டு விடுவானோ என்று அவனைக் காப் பாற்ற பாவாடையும், இராமநாதனும் விரைந்தோடுகின்றனர். கருப்பனும், அவனைக் காப்பாற்றத் தனித்தனியே வந்த இருவரும் அடிபட்டு மூவர் இரத்தங்களும் ஒன்றாய்க் கலக்கின்றன (ஆ. ப.53).

ஆசிரியர் ''இதில் யாரை நந்தன் என்பது? புதிய ஒளியை இருவர் கண்டனர். இருவிதமாகக் கண்டனர். இறந்த பிறகாவது சாத்தியமா?'' (ஆ. ப. 53) என்று தம் ஆதங்கத்தை வெளிப்படுத்துகிறார். சுயமரியாதை இயக்கமும், காந்திய இயக்கமும் தனித்தனியே இயங் கிக் காப்பாற்ற முடியாத தாழ்த்தப்பட்ட சாதியினரை இரு இயக்கங் களும் ஒன்றுபட்டு இயங்கினால் கரையேற்ற முடியுமா என்ற ஏக்கம் தொனிக்கிறது. இவ்வாறு புதுமைப்பித்தன் சமகாலத்து சமூக அரசியல் இயக்கங்களை உருவகப்படுத்தி தன் கதையை ஓர் அரசியல் விமர்சனமாகப் படைத்துள்ளார்.

புதுமைப்பித்தன் இக்கதையை 'எள்ளல்' போக்கில் எழுதிச் செல்கிறார். கதை முழுவதும் தன் உணர்வுகளைக் காட்டிச் செல் கிறார். இடையிடையே தன் கருத்துக்களையும் விவரிக்கிறார். கதை யைத் தொடங்கும்போதே 'எள்ளல்' அமைப்பில் தொடங்குகிறார்,

நடந்து முடிந்த நிகழ்ச்சியை ஆசிரியர் பின்கண்டவாறு குறிப்பிடு கிறார்.

''நந்தன் சாம்பானை நந்தநாயனாராக்க சிதம்பரத்தில் அக்கினிப் புடம்போட்ட பின்னர் வெகுகாலம் சென்றது. அந்த பெருமையிலேயே ஆதனூர் சந்தோஷ அல்லது துக்க சாகரத்தில் மூழ்கி அப்படியே மெய் மறந்தது'' (ஆ. ப. 46).

நாட்டில் பல மாறுதல்கள் ஏற்பட்டாலும் ஆதனூர் மக்கள் எந்த மாறுதலுமின்றி பழைய நிலையிலேயே இருந்தனர். நந்தன் நிகழ்ச்சி நடந்து பல நூற்றாண்டுகள் சென்ற பின்னரும், ஆதனூர் கதி மோட்சம் இன்றி, நீண்ட நெடும் தூக்கத்தில் இருந்தது. 'இங்கிலீஷ் சாம்ராஜ்யம் வந்த சங்கதி கூடத் தெரியாது. அப்படிப் பட்ட நெடுந்தூக்கம். இப்பொழுது ஆதனூரிலே ரயில்வே ஸ்டேஷன், வெற்றிலைப் பாக்குக் கடை என்ற ஷாப், காப்பி ஹோட்டல் என்ற இத்யாதி சின்னங்கள் வந்து விட்டன. எப்படி வந்தன என்ற சமாச் சாரம் யாருக்கும் தெரியாது'' (ஆ. ப. 46) என்று குறிப்பிடுவது சிந்தனைக்குரியது. புதுமைப்பித்தன் இக்கதை முழுவதும் ஒரு சொல்லைக் கூட வீணாகப் பயன்படுத்தவில்லை. அத்தனை சொற் களும் சிந்தனைக்குரியவைகளாக உள்ளன. ஆதனூரில் ஒரு நகராட்சி விளக்கு போடப்பட்டுள்ளது. ஆனால் அது ஏற்றப்பட வில்லை. பறையர்கள் தீண்டத்தகாதவர்கள் என்ற எண்ணம் உள்ளது போல சேரிக்குப் புறம்பாக அந்த விளக்கும் உள்ளது. பறைச்சேரியில் உள்ள மக்கள் கவனிப்பாரற்று இருப்பதைப் போலவே, இந்த நகராட்சி விளக்கும் ஏற்றப்படாமல் இருக்கிறது. இதை ஆசிரியர் குறியீடாகக் குறிப்பிடுகிறார் எனலாம்.

''சேரிக்குப் புறம்பாக அல்லது தீண்டக்கூடாது என்ற கருத் துடனோ மரியாதையான தூரத்திலே ஒரு முனிஸிபல் விளக்கு. அதை ஏற்றுவதைப் பற்றி ஒருவருக்கும் தெரியாது. சேரிப்பறையர்கள் ஆண்டையின் அடிமைகள்...'' (ஆ. ப. 46).

புதுமைப்பித்தன் வேதியர் குலப் பிரதிநிதியாகக் காட்டும் விசுவநாத சிரௌதிகளை சித்தரிக்கும்பொழுது முரண்பாடுள்ள பாத்திரமாகக் காட்டுகிறார். பழைய சனாதனக் கொள்கையிலும், புதிய ஆங்கிலப் பேரரசிலும் நம்பிக்கை உள்ளவராகக் காட்டுகிறார். புதிய ஆங்கிலப் பேரரசில் சிரௌதிகளுக்கு நம்பிக்கை இருந்தாலும் சனாதன தர்மத்திலும் அவருக்கு அதிக நம்பிக்கை இருந்தது. இங்கு ஆசிரியர் 'இறந்து போன சனாதனக் கொள்கை' என்று குறிப்பிடு கிறார். இது ஆசிரியரின் முற்போக்கு கொள்கையை படம் பிடிக் கிறது எனலாம்.

ஆசிரியர், புதிய கொள்கைகளை ஏற்றுக் கொள்ளும் இளம் தலைமுறைக்கும், பழைய நம்பிக்கைகளில் பிடிப்புள்ள தலைமுறைக்கும் நடுவில் உள்ள இடைவெளியைக் காட்டுகிறார். காந்தியின் சத்தியாக்கிரக கொள்கையை இளம் தலைமுறையினர் ஏற்றுக் கொண்டனர். ஆனால் சனாதனத்தில் நம்பிக்கையுள்ள தலைமுறையினர் இக்கொள்கையை பைத்தியக்காரத்தனம் என்று கூறினர். நந்தனாரைச் சிவனடியாராக ஏற்றுக் கொண்ட பிராமண சமூகத்தினர், அவர் பிறந்த குலத்தைச் சேர்ந்தவர்களைத் தீண்டத் தகாதவர்கள் என்று ஒதுக்கி வைத்தனர். காந்தியடிகள் தீண்டாமை ஒழிப்பு மூலமாக அவர்களைச் சமுதாயத்தில் சமபங்கு கொள்ளச் செய்ய முயன்றார். சனாதனிகள் இக்கொள்கையைத் தவறு என்று விமர்சித்தனர். இதனையே ஆசிரியர்,

''சிரௌதிகளின் பையனான இராமநாதன் எம். ஏ. படித்து விட்டு கலெக்டர் பரிட்சை கொடுக்கவிருந்தான். ஏதோ பைத்தியக்காரத்தனத்தினால் (இது அவர்கள் வீட்டிலும், அக்ரகாரத்திலும் உள்ள கொள்கை) சத்தியாக்கிரகத்தில் ஈடுபட்டு விட்டான்'' (ஆ. ப. 47) என்று குறிப்பிடுகிறார். இதன் மூலம் புதிய தலைமுறையின் கொள்கைகளை, சனாதனிகள் ஏற்கத் தயாராக இல்லை என்பது புலனாகிறது. இதையே ஆசிரியர் 'எள்ளல்' வடிவில் மேற்கண்டவாறு குறிப்பிட்டுள்ளார். உயர் சமூகத்தினர் வாழும் பகுதியில் இருக்கும் குளத்திலோ அல்லது கிணற்றிலோ, தாழ்ந்த சமூகத்தினரை தண்ணீர் எடுப்பதற்கு அனுமதிப்பது இல்லை. இக்கொடுமை காலம் காலமாக நடந்து வருகிறது. இதையே ஆசிரியர் தன் கதையிலும் அமைத்துக் காட்டுகிறார். கருப்பன் தெரியாத்தனத்தினால் தெப்பக்குளத்திலிறங்கி தண்ணீர் குடித்து விடுகிறான். இதனை, சுப்பு சாஸ்திரிகள் கண்டு விடுகிறார். புதுமைப்பித்தன் ''கோயில் தெய்வத்தின் உலாவுப் பிரதிநிதியான சுப்பு சாஸ்திரிகள்'' (ஆ. ப. 47) என்று சுப்பு சாஸ்திரிகளைக் குறிப்பிடுகிறார். இறைவன் ஆணையால் நந்தனாரை அக்கினியில் மூழ்க வைத்து, இறைவனோடு இரண்டறக் கலக்க வைத்த பெருமையை உடைய சுப்பு சாஸ்திரிகள் நந்தன் குலத்தைச் சேர்ந்தவன் தண்ணீர் குடிப்பதை அனுமதிக்கவில்லை. இறைவன் முன் அனைவரும் சமம் என்று வேதங்களும் புராணங்களும் கூறினாலும், அவைகளைப் படித்து அதன்வழி நடப்பதாகக் கூறிக் கொள்ளும் சாஸ்திரிகள் மனிதர்களுக்கிடையே வேற்றுமை பாராட்டுகிறார். புதுமைப்பித்தன், ''சுப்பு சாஸ்திரிகள் கண்டு விட்டார்'' என்று எழுதியிருக்கலாம். ஆனால் ''கோயில் தெய்வத்தின் உலாவுப் பிரதிநிதியான சுப்பு சாஸ்திரிகள்'' என்று எழுதியதிலிருந்து சாஸ்திரிகளின் மனப்பக்குவமின்மையை வெளிப்படுத்தியுள்ளார்.

விசுவநாத சிரௌதிகள் பழைய சனாதனக் கொள்கைகளில் அழுத்தமான நம்பிக்கை உடையவராக இருந்தார் என்பதைக் காட்டவே கருப்பனின் செய்கையை அறிந்ததும் அவனை அடித்துக் குருடாக்குகிறார் என்று புதுமைப்பித்தன் எழுதியுள்ளார். மேலும் ''விளையும் பயிர் முளையிலேயே'' (ஆ. ப. 47) என்ற ஒரு முது மொழியையும் கிண்டல் தொனிக்க குறிப்பிடுகிறார்.

பாவாடையின் படிப்பிற்கு முற்றுப்புள்ளி வைக்கப்பட்டதற்கு அவன் பாதிரியாரின் மகளைக் காதலித்தது காரணம். இதைக் கூறும் முன்னர் ''பரமண்டலத்திலிருக்கும் கர்த்தரின் விதி வேறு விதமாக இருந்தது'' (ஆ.ப. 48) என்பதில் அடங்கியுள்ள எள்ளல் சுவையாக உள்ளது.

தன் சாதிக்கு மீறிய காதல் விவகாரத்தில் பாவாடை துரத்தப் பட்டது போலல்லாது, இராமநாதன் தன் சாதிக்குத் தகாத முறையில் பாவாடையின் தங்கையுடன் தொடர்பு கொண்டபோது துரத்தப்பட வில்லை. மாறாக ''கருப்பன் மகளுக்கு சின்னப் பண்ணையின் தயவு கிடைத்ததில் திருப்தி'' என்றும், இராமநாதனின் திருமண யோசனை ''நயிந்தோ மகாபாவம் கண்ணானே அப்படிச் செய்யக் கூடாது'' (ஆ.ப. 51) என்று கருப்பன் கூறியதாகச் சொல்வதன் மூலம் ஆசிரியர் வெவ்வேறு சாதிக்கு வெவ்வேறு நீதி இருப்பதை மிகச் சுருக்கமாகக் காட்டுகிறார்.

கதையின் கடைசிப் பகுதியின் விறுவிறுப்பு ஒவ்வொரு வாக்கியத் திலும் வெளிப்படுகிறது. மதராஸ் மெயில் ''நெற்றிக் கண்ணைத் திறந்த சிவபிரான் போல்'' வெளிச்சத்தைப் போட்டுக் கொண்டு வருவதாக ஆசிரியர் சொல்லும்பொழுது, திரிசிரபுரம் எரிப்புடன், நந்தன் எரிப்பும் அன்று நடக்கப் போகும் விபத்தும் வாசகர்கள் முன் நிற்கின்றன. ''ஆதனூர் அதன் மரியாதைக்குக் குறைந்து நிற்காது; நாற்பது மைல் வேகம்'' (ஆ.ப. 52) என்பதில் கிண்டல் மட்டு மல்லாது நிகழப் போவது குறித்த ஒரு சோகமும் கலந்திருக்கிறது.

கதையின் முடிவு நெருங்க நெருங்கக் கேள்விமேல் கேள்வி கேட்டு, ''பிறகு ஆதனூரில்'' என்ற கேள்வியுடன் முடிக்கிறார். படிப்பவரிடம் ஒரு விமரிசன உணர்வைத் தூண்டுகிறார்.

பழைய நந்தன் கதையில் நந்தன் இம்மையில் தன் குலத்தோருக்கு எவ்வித விடிவும் சாத்தியமில்லை என்று நம்புகிறான். மேற் சாதிக் கடவுளாகிய சிவனை வழிபட்டு அவன் அருளால் மறுமையில் மேன்மையடையலாம் என்றும் மீண்டும் கீழ்ச்சாதியில் பிறக்காமல் இருப்பதே விடிவிற்கான ஒரு வழி என்றும் நினைக்கிறான். எனவே

அவன் ஒரு சமூகப் புரட்சிக்காரனாக நடந்து கொள்ளவில்லை. தீயில் குளிப்பதை மனமார ஏற்றுக் கொள்கிறான்.

ஆனால் புதிய நந்தன் கதையில் பாவாடை முதலில் கல்வி மூலம் தான் மேன்மையடைய முடியும் என்று நம்பி அதற்குத் தேவையான மதமாற்றத்தையும் ஏற்கிறான். கிறித்துவ சமயத்தைத் தழுவுவதால் ஏற்றத் தாழ்வில்லாத ஒரு சமுதாயத்தில் இடம் பெற்று விட்டதாக நினைக்கிறான். அந்த நம்பிக்கை பொய்யானதும் நாத்திகனாக மாறி சமூகக் கொடுமைகளுக்கு எதிராக பிரச்சாரம் செய்கிறான். சாதி யடிமைத்தனத்தினின்று விடுதலை பெறப் பாடுபடுகிறான். உணர்வு பூர்வமாக சமுதாய மாற்றத்திற்கு — தன் குலத்திற்கு மட்டுமல்ல எல்லாக் குலங்களையும் பாதிக்கும் — ஒரு சமுதாய மாற்றத்திற்காக உழைக்கிறான்.

பழைய நந்தன் கதையில் வேதியர் — நந்தன் முரண்பாடும், நந்தன் — நந்தன் குலத்தோர் முரண்பாடும் முக்கிய இடம் பெறுகின் றன. புதிய நந்தன் கதையில் இவை இடம் பெறவில்லை. பாவாடை யின் செலவைத் தடுத்ததாகச் செய்தி இல்லை. முரண்பாடு கிறித்துவ சமயத்திற்குள்ளே நிகழ்கிறது. அதே சமயம் வேதியர் குலத்திலும் இரு தலைமுறைகளுக்குமிடையே முரண்பாடு நிகழ்கிறது. பின்னது பூசலாக முடியவில்லை. சிறுகதை என்னும் இலக்கிய வடிவத்தில் விரிவாக வளர்த்துக் காட்ட முடியாதது காரணமாக அமையலாம்.

பழைய நந்தன் கதையில் அற்புதங்கள் நிகழ்ந்தன. புதிய நந்தனில் இவற்றிற்கு இடமில்லை. பழைய நந்தன் முக்தி பெற் றான். அந்தண குலம் அவனை மட்டும் ஏற்றுக் கொண்டது. ஆனால் அவன் குலம் ஆயிரம் ஆண்டுகளாக அதே அவல நிலையில்தான் உழன்று கொண்டிருக்கிறது. புதிய நந்தனில் பாவாடை தான் மேற்கொண்ட முயற்சியில் வெற்றி காணாமலே இறக்கிறான். பழைய சமூகத்துடன் முரண்பட்ட இருவருமே பழைய சமூகத்தை மாற்றுவதில் வெற்றி காண்பதற்குள் இறக்கின்றனர். பழைய சமூகங்களும் அவர் களை ஏற்றதாகத் தெரியவில்லை. தாழ்த்தப்பட்ட சாதி இன்னும் அதே நிலையில் உழலத்தான் வேண்டியிருக்குமோ? என்ற கேள்வி யுடன் கதை முடிகிறது.

புதுமைப்பித்தன் எழுதிய 'புதிய நந்தன்' என்ற இக்கதையில் பல புதிய சிந்தனைகளையும் கருத்தோட்டங்களையும் காண முடி கிறது. புதுமைப்பித்தன் பல புராண நிகழ்ச்சிகளை எடுத்துக் கொண்டு அவைகளைப் புதிய கண்ணோட்டத்தோடு படைத்துக் காட்டியுள்ளார். நந்தனார் என்ற புராணப் பாத்திரத்தை எடுத்துக் கொண்டு புதிய கண்ணோட்டத்தோடு இக்கதையை நடத்திச் சென் றுள்ளார். சாதிக் கொடுமைகள் இந்து சமயத்தில் மட்டும்தான்

உண்டு, கிறித்துவ சமயத்தில் இல்லை என்ற கூற்றை ஆசிரியர் ஏற்க வில்லை. சமயம் என்பது வேறு; சாதிப்பற்று என்பது வேறு. ஆசிரியர் படைத்துக் காட்டும் ஜான் ஐயர் என்ற கிறித்துவ வேளாளர், டானியல் என்ற பாவாடை தாழ்த்தப்பட்ட இனத்தைச் சேர்ந்தவன் என்பதற்காக அவனுக்குத் தன் மகளை மணம் முடித்துத் தர இசையவில்லை. புதுமைப்பித்தன் சமுதாயத்தில் நடக்கும் ஒவ் வொரு நிகழ்ச்சியையும் கூர்ந்து கவனித்திருக்கிறார். கிறித்துவ சமயத்தின் போலிப் பிரச்சாரத்தை ஆசிரியர் எதிர்க்கிறார். கிறித்துவ மத சாமியார்களின் இயற்கைக்கு எதிரான செயல்களை ஆசிரியர் கண்டிக்கிறார். கிறித்துவ சமயமும் புனிதமானதல்ல; அதிலும் சாதிக் கொடுமைகள், சாமியார்களின் தவறான நடவடிக்கைகள் நிறைந்திருந்தன என்பதை ஆசிரியர் காட்டுகிறார். இக்கதையில் பல நிகழ்ச்சிகள் குறியீடுகளாக காட்டப்படுகின்றன.

சிறுகதையின் இறுதியில் ஆசிரியர் பல கேள்விக் குறிகளோடு கதையை முடிக்கிறார். தாழ்த்தப்பட்ட சமுதாயத்தைச் சார்ந்த நரசிங்கம், வயதான கருப்பன், மற்றும் உயர் வகுப்பைச் சார்ந்த இராமநாதன் இவர்கள் மூவரும் ஒரே நேரத்தில் இறக்கின்றனர். இரத்தங்கள் ஒன்று கலக்கின்றன. மூவருடைய இரத்தமும் ஒரே நிறமாகத்தான் இருக்கிறது. ஆனால் சமுதாயத்தில் மனிதர்கள் உருவாக்கிய சமுதாயச் சட்டங்களால் மனிதக் கூட்டம் வேறுபடுத்தப் பட்டு இருக்கின்றது. இந்தச் சட்டங்கள் உடைந்து மனிதர்கள் எல் லோரும் ஒன்று என்ற எண்ணம் வரவேண்டும். புதுமைப்பித்தன் இங்கு வேறு ஒன்றையும் குறியீடாகச் சொல்கிறார். இராமநாதன் காந்திய இயக்கத்தைச் சேர்ந்தவன். தோழர் நரசிங்கம் சுயமரியாதை இயக்கத்தைச் சேர்ந்தவன். இந்த இரு இயக்கங்களும் ஒன்றிணைந்து செயலாற்ற வேண்டும் என்பதும் ஆசிரியரின் எண்ணமாகக் கருத இடமுண்டு.

கதையில் ஆசிரியர் ''மூவரின் இரத்தங்கள் ஒன்றாய்க் கலந்தன. ஒன்றாய்த்தான் இருக்கின்றன. இதில் யாரை நந்தன் என்பது?'' என்று கூறுவதில் இருந்து புதிய நந்தன் யார் என்பது சிந்திக்க வேண்டிய ஒன்று. தோழர் நரசிங்கமே புதிய நந்தன். கோபால கிருஷ்ண பாரதியாரின் நந்தனார், சிவபக்தியினால் சமுதாயத்தினரை திருத்த முயன்றார். ஆனால் இறுதியில் தீக்கிரையாக்கப்பட்டார். புதுமைப்பித்தன் காட்டும் தோழர் நரசிங்கமும், சுயமரியாதை இயக் கத்தால் தன் சமுதாயத்தினரை விழிப்படையச் செய்ய முயன்றான். முடியவில்லை. அவனும் இறுதியில் இறந்து விடுகிறான். ஆசிரியர், இருவரும் ஒரு புதிய ஒளியைக் கண்டனர் - ஆனால் இருவிதமாகக் கண்டனர் என்று உள்ளீடாகக் குறிப்பிட்டுள்ளார். தோழர் நரசிங்கம்

சுயமரியாதை இயக்கத்தின் கருத்துக்கள் தன் சமுதாயத்தினரை விழிப்படையச் செய்யும் என்ற நம்பிக்கை ஒளியைக் கண்டான். இராமநாதன் காந்தியடிகளின் அரிசன ஒழிப்பு இயக்கத்தால் மனிதர் அனைவரும் சமம் என்ற எண்ணம் உருவாகி, தீண்டத் தகாதவர் என்பவர் நம் நாட்டில் இல்லை என்ற நிலை உருவாகும் என்ற ஒளியைக் கண்டான். ''இறந்த பிறகாவது, சாத்தியமா? சமுதாயத்திற்கு பலிதான். இதை யார் நினைக்கிறார்கள்'' என்ற ஆசிரியரின் சொற்கள் நம் சிந்தனையைத் தூண்டுகின்றன. தோழர் நரசிங்கமும், இராமநாதனும் இருந்த இயக்கங்கள் ஒன்று இணைந்து மக்கள் விழிப்புணர்வு பெற்று அனைவரும் சமநிலை அடைய வேண்டும் என்ற ஆசிரியரின் எண்ணம் வெளிப்படுகிறது.

ஆசிரியர், பிறகு ஆதனூரில்? என்று கேள்விக்குறியோடு கதையை முடித்திருக்கிறார். நந்தனார் தில்லை வெளியில் கலந்து பல நூறு ஆண்டுகளான பின்னும் நந்தன் சமூகம் விழிப்படையாமல் பரம்பரை பரம்பரையாக வேதியருக்கு அடிமையாகவே இருந்து வந்தது. இதையே ஆசிரியர் தன் கதையின் தொடக்கத்தில் குறிப்பிடு கிறார். ''இதற்குப் பிறகாவது ஆதனூரில் தாழ்த்தப்பட்ட சமுதாயத் தினர் விழிப்புணர்வு பெறுவார்களா? மனிதர்களால் உருவாக்கப்பட்ட தவறான சமுதாயச் சட்டங்களை உடைத்து எல்லோரும் சமம் என்ற நிலை உருவாகுமா? இந்த நிலையைக் கொண்டு வருவதற்கு தோன்றியுள்ள சுயமரியாதை இயக்கமும் காந்திய இயக்கமும் ஒன்றுபட்டு பாடுபடுமா? அதனால் நல்ல பயன் விளையுமா?'' என்ற பல கேள்விகள் இந்த ஒரு கேள்விக்குறியில் அடங்கியுள்ளன எனலாம். புதுமைப்பித்தன் எதிர்பார்த்த அளவுக்கு தாழ்த்தப்பட்ட சமுதாயம் விழிப்புணர்வு பெறவில்லை என்றாலும் ஓரளவு முன்னேற்றம் அடைந்துள்ளது என்று கூறலாம். எனவே புதுமைப்பித்தனின் எதிர்பார்ப்புகள் இன்னும் முழுச்செயல் வடிவம் பெறவில்லை என்றே கூற வேண்டும்.

### அடிக்குறிப்புகள்

1. E Sa. Viswanathan, *The Political Career of E. V. Ramasami Naicker,* Madras : Ravi and Vasantha, 1983, PP. 150-152.
2. Gandhi, *Young India*, October 12, 1921 Quoted in R. P. Dutt, *India Today,* Calcutta : Manisha, 1979, P. 471.
3. புதுமைப்பித்தன், **ஆண்மை**, சென்னை : ஸ்டார் பிரசுரம், 1947, மூன்றாம் பதிப்பு, பக். 46-53.

## கிந்தன் சரித்திரம் - கதாகாலட்சேபம் (என். எஸ். கிருஷ்ணன்)

1947 ஆகஸ்டு 15ம் நாள் இந்தியா சுதந்திரம் பெற்றது. மக்களாட்சி மலர்ந்தது. நாட்டு மக்கள் தங்கள் இன்னல்கள் எல்லாம் தீர்ந்து விடும் என்ற நம்பிக்கைத் ததும்ப எதிர்காலத்தை எதிர் பார்த்து நின்றனர். காந்தியடிகள் ஒரு கால் நூற்றாண்டு காலமாக வலியுறுத்தி வந்த சீர்திருத்தங்கள் சட்டமாக்கப்படும் என்றும் செய லாக்கப்படும் என்றும் பேசப்பட்டு வந்தது. இவற்றில் தீண்டாமை ஒழிப்பும் மதுவிலக்கும் முக்கிய இடம் பெற்றிருந்தன. சீர்திருத்த மனப்பான்மை கொண்ட கலைஞர்கள் இவற்றைப் பற்றி நாடகங்கள், கதா காலட்சேபங்கள், திரைப்படங்கள் ஆகியவற்றின்மூலம் மக்களி டையே விழிப்புணர்வு தோற்றுவிக்க முற்பட்டனர். இவர்களில் தமிழ்நாட்டின் தலைசிறந்த நகைச்சுவை நடிகராக அன்று விளங்கிய என். எஸ். கிருஷ்ணன் முன்னின்றார். 1947 ஏப்ரல் 25ம் நாள் அவர் சிறையினின்று விடுதலையாகி வெளிவந்த பின்னர் பல நகைச்சுவை நிகழ்ச்சிகள் நடத்தினார். இவற்றில் கிந்தன் சரித்திரம்[1] என்ற கதா காலட்சேபம் தீண்டாமைச் சிக்கலுக்குத் தீர்வு காணும் ஒரு வழியைச் சுட்டிக் காட்டியது. இதுவும் இவருடைய மற்றொரு நிகழ்ச்சியாகிய 'இந்திரன் சபையில் மதுவிலக்குப் பிரச்சாரமும்' 1949-ல் வெளி வந்த 'நல்ல தம்பி' எனும் திரைப்படத்தில் இடம்பெற்றன.[2]

நந்தனைக் கிந்தன் என்பதால் இது வெறும் கிண்டலோ என்று எண்ண இடமுண்டு என்பதற்காகவே, தன் கதையை "கிந்தன் சரித் திரமே கிண்டல் அல்லவே அல்ல" (பார்க்க : பின்னிணைப்பு) என்று தொடங்குகிறார். கதை சிறியதுதான் என்றாலும் கருத்தாழம் மிக்கது. ஆதனூரில் அரிசன வகுப்பில் கிந்தன் பிறந்தான். அவனுக் குப் பட்டினம் சென்று படித்து முன்னேற வேண்டும் என்ற ஆசை மிகுந்தது. ஆதனூர் பள்ளி ஆசிரியரிடம் இதற்காகப் பொருளுதவி நாடுகிறான். தாழ்ந்த சாதியைச் சேர்ந்த கிந்தனுக்கு பட்டினத்துப் படிப்பு தேவையில்லை என்றும் கிராமத்திலேயே கழனி வேலை பார்த்தால் போதும் என்றும் ஆசிரியர் கருதுகிறார். கிந்தனைப் பல வாறு ஏசி உதவி செய்ய மறுக்கிறார். கிந்தன் மிக வருத்தத்துடன் வீடு திரும்பி தன் வேதனையைத் தந்தையிடம் தெரிவிக்கிறான்.

சென்னைக்குப் போயே தீருவேன் என்று அடம் பிடிக்கிறான். கிந்தனின் தந்தை தங்கள் சாதியின் நிலைமையை எடுத்துத்துரைத்து கிந்தனின் ஆசை நியாயமற்றது என்று பலவாறு விளக்கி சென்னைக் குச் சென்று படிக்கும் எண்ணத்தைக் கைவிடும்படி கேட்டுக் கொள் கிறார். கிந்தனோ பிடிவாதமாக பட்டணம் சென்று பல இன்னல் களை அனுபவித்த பின் ஒரு கல்லூரி முதல்வரின் உதவியால் படித்துப் பட்டம் பெறுகிறான். பள்ளி ஆய்வாளராகத் தன் ஊருக்கே திரும்பி வருகிறான். ''விலகிப் போடா கிட்ட வராதே'' என்று விரட்டிய பள்ளி ஆசிரியர் ஆய்வாளராக வந்த கிந்தனை கட்டித் தழுவிக் கொள்கிறார். கல்வியால் தான் சாதி பேதங்கள் மறைய முடியும் என்ற கருத்து இக்கதையின் மையக் கருத்தாக அமைகிறது.

என். எஸ். கிருஷ்ணன அவர்கள் மதுவிலக்கு, தீண்டாமை ஒழிப்பு போன்ற சமூக சீர்திருத்தக் கருத்துக்களைத் திரைப்படங்களில் பாடல்கள் மூலமாகவும், இசைப் பேருரைகள் (கதா காலட்சேபம்) மூலமாகவும் பரப்பி வந்தார். அவற்றுள கிந்தனார் சரித்திரம் என்ற கதை தீண்டாமை ஒழிப்பை மையமாகக் கொண்டு இயற்றப்பட்டது.

இக்கதையில் பாடல்கள்மூலம் தீண்டாமை ஒழிப்புக் கருத்துக் களை வெளிப்படுத்துகிறார். கிந்தனும் அவன் நண்பர்களும் திருப்புன் கூருக்கு புகை வண்டியைக் காணச் சொல்கிறார்கள். புகைவண்டி நிலையத்தில் உள்ளே சென்று புகைவண்டியைப் பார்க்க விழைகிறார் கள். அப்போது சீட்டுப் பரிசோதகர் உள்ளே விட மறுக்கிறார். கிந்தன் வருத்தத்தோடு வெளியே நின்று கொண்டிருக்கும்போது வண்டி வந்து விடுகிறது. புகைவண்டியைப் பார்த்தவுடன் மகிழ்ச்சி யால் கூத்தாடி அதைப் பற்றியே ஒரு பாட்டு பாடுகிறான்.

கரகரவென சக்கரம் சுழல
கரும்புகையோடு வருகிற ரயிலே
கனதன வான்களும் ஏறிடும் ரயிலே
கன வேகத்தில் போகிற ரயிலே
மறையவரோடு பள்ளு பறையரை ஏற்றி
மத பேதத்தை ஒழித்திட்ட ரயிலே...
ஏ ரயிலே! எத்தனையோ பெரிய பெரிய
தலைவர்கள் எங்கள் தேசத்திலே
தீண்டாமையை ஒழிக்க எவ்வளவோ
பாடுபட்டாலும் இன்னும் தீண்டாமை
ஒழிந்த பாடில்லை. இப்பேர்ப்பட்ட
பெரும் அருமையான காரியத்தை,
கஷ்டமான காரியத்தை, மனிதர்கள்

செய்ய முடியாத காரியத்தை,
மரக்கட்டையாகிய நீ வந்த அன்றே
செய்து முடித்து விட்டாய்...
சகல சாதியாரையும் ஒரே பெஞ்சில்
ஒன்றாக உட்கார வைத்த பெருமை
உன்னுடையதல்லவா?

என்று பாடுகிறான்.

இந்தப் பாடலில் தீண்டாமை ஒழிய வேண்டும் என்றும் இரயிலில் அனைத்துச் சாதியினரும் சமத்துவத்துடன் அருகருகே அமர்ந்திருப்பதுபோல சமுதாயத்திலும் சாதி ஒழிந்து அனைவரும் சமத்துவத்துடன் விளங்க வேண்டும் என்றும் கருதும் என். எஸ். கிருஷ்ணனின் எண்ணம் புலனாகிறது. இவ்வாறு இரயில் பாடலின் மூலம் சமத்துவத்தை வலியுறுத்துகிறார்.

கிந்தன் படிப்பதற்காகப் பட்டணத்துக்கு வருகிறான். பள்ளிக்கூடத்துக்கு வழி விசாரிக்கிறான். இதனை ரிக்ஷா ஓட்டுபவர்கள் அறிகிறார்கள். ரிக்ஷா ஓட்டிகள் பலர் போட்டிப் போட்டுக் கொண்டு கிந்தனைப் பள்ளிக்கு அழைத்துச் செல்லத் தங்கள் வண்டிகளுடன் சூழ்ந்து கொள்கிறார்கள். கிந்தன் சென்னையில் கல்விக்காகச் சேவை செய்ய இவ்வளவு போட்டியா என்று வியக்கிறான். அவற்றுள் புதிதாகத் தோன்றிய வண்டியைத் தேர்ந்தெடுத்து அதில் அமர்ந்து கொள்கிறான். ரிக்ஷா தொழிலாளி கிந்தனை ஒரு கல்லூரி வாசலில் கொண்டுபோய் விட்டு விடுகிறான். கிந்தனிடம் பணம் கேட்கிறான். இப்போது கிந்தனுக்கு உண்மை புரிகிறது. கல்விக்காக இந்தப் போட்டி நடக்கவில்லை; புதிதாகப் பட்டணம் வருபவர்களிடம் பணம் பறிக்கவே போட்டி என்றும் புரிந்துகொள்கிறான். கிந்தனிடம் காசு இல்லாததால் அதற்குப் பதிலாக அவனுடைய சட்டையை ரிக்ஷா ஓட்டுபவன் பறித்துக் கொண்டு போய் விடுகிறான். இந்த நிகழ்ச்சியின் மூலமாக செல்வம் சமூகத்தில் தனி செல்வாக்கை உருவாக்குகிறது என்றும் அது இல்லாதவர்கள் சமூகத்தில் மதிப்பை இழப்பதோடு கல்வி கற்கும் வாய்ப்பையும் இழந்து விடுகின்றனர் என்றும் அறிய முடிகிறது.

கிந்தனுக்கு கல்வி கற்க ஆர்வம் இருந்தும் செல்வம் இல்லாததால் கல்வி பெறத் தகுதி இல்லாதவனாகிறான். கிந்தன் கல்வி கற்று பதவிக்கு வந்ததும் சமூகத்தில் தீண்டத் தகாதவன் என்ற நிலை மறைந்து மதிப்பிற்குரியவனாக ஆகிறான். கல்வி, தாழ்ந்த சமூகத்தினரையும் உயர் சமூகத்தினராக மாற்றி விடும் என்பது என். எஸ். கிருஷ்ணன் அவர்களின் கருத்து.

கல்வி கற்பதால் மட்டுமே சமூக மதிப்புகளைப் பெற முடியும் என்ற தீர்வு ஒரு தற்காலிகமே தவிர நிரந்தரமானதல்ல, சமூக அமைப்பில் நிரந்தர மாற்றங்கள் ஏற்படாதவரை தீண்டாமை போன்ற சமூகக் சீர்கேடுகள் மறையாது என்றும் கூற இயலும்.

கோபால கிருஷ்ண பாரதியார் அவர்கள் கையாண்ட முறை யையே என். எஸ். கிருஷ்ணனும் கையாளுகிறார். அக்கதையில் நந்தனாரின் இறைபக்தி முதன்மையிடம் பெறுகிறது. ஆனால் கிந்தனார் சரித்திரத்தில் தீண்டாமை முதலிடம் பெறுகிறது. நந்தனார் சரித்திரக் கீர்த்தனையில் இறைவனை வழிபட வேதியர் தடையாக இருக்கிறார். அதே போன்று கிந்தனார் சரித்திரத்தில் பட்டினம் சென்று கல்வி கற்க பள்ளி ஆசிரியர் கிந்தனுக்குத் தடை யாக இருக்கிறார். கிந்தன் பட்டினம் செனறு கல்வி கற்கப் பொரு ளுதவி வேண்டுகிறான். ஆசிரியரோ

பட்டணம் என்று சொல்லப் படுமோடா
பட்டணம் என்பதை விடு
பழையச் சோற்றை சாப்பிடு
இந்தப் பட்டிக்காட்டில் படித்திடு
நல்ல பையன் என்று பேரெடுத்திடு
(பார்க்க : பின்னிணைப்பு)

என்று கூறித் தடுக்கிறார். நந்தன் சிவலோக நாதனைத் தரிசிக்கத் திருப்புன்கூர் போனதுபோல் அதே திருப்புன்கூருக்கு கிந்தன் ரயிலைத் தரிசிக்கச் சென்றதாக என். எஸ். கிருஷ்ணன் கூறுகிறார். நந்தன் இறைவனை வழிபட அவர்கள் சமூகத்திலிருந்தே எதிர்ப்பை சந்திக்க வேண்டியிருந்தது. அதைப் போன்றே கிந்தன் கல்வி பெறப் பட்டணம் செல்வதை அவன் தந்தை எதிர்க்கிறார்.

''நியாயம்தானா நீ சொல்லு'' என்ற பாடலின் மூலம் கிந்தன் சமூகத்தின் நியதிகளைக் கிந்தனின் தந்தை எடுத்துரைக்கிறார்.

நல்ல நாகரிகம் நம்ம சாதிக்கு
அடுக்காது

என்றும்

காடு கழனிகளை உழுது பிழைப்பதே
கடவுள் நமக்கு அமைத்த அமைப்பு

என்றும்

படிப்பது மேல் சாதிக் காரர்களுக்கே
உரியது
(பார்க்க : பின்னிணைப்பு)

என்றும் கூறி அவனைத் தடுக்கிறார்.

கோபாலகிருஷ்ண பாரதியாரின் ''ஞாயம்தானோ நீர் சொரல் லும்'' (ந.ச. கீ., ப. 37) என்ற பாட்டை மேலே கண்ட வரிகள் ஒத்திருக்கக் காண முடியும். கோபாலகிருஷ்ண பாரதியார், சாம்பன் என்ற பாத்திரத்தின் மூலம் நந்தனாருக்கு அவர் சமூகத்திலேயே இருந்த எதிர்ப்பைத் தெரிவிக்கிறார். அதைப் போன்றே என். எஸ். கிருஷ்ணனும் சாம்பனுக்கு நிகராகக் கிந்தனின் தந்தையைப் படைத் துள்ளார்.

நந்தனார் சரித்திரக் கீர்த்தனையில் இறைவனை வழிபடுவதற்கு நந்தி தடையாக இருந்ததாகவும், அது விலக வேண்டுமென்று, ''வழி மறைத்திருக்குதே மலை போலே'' என்று நந்தன் பாடியதாகவும் வருகிறது. கிந்தனார் சரித்திரத்திலும் இரயிலைத் தரிசிப்பதற்குச் சீட்டுப் பரிசோதகர் தடையாக இருப்பதாக என். எஸ். கிருஷ்ணன் குறிப்பிடுகிறார்.

வழி மறைத்திருக்கிறான் டிக்கெட் கலெக்டர்
மலை போலவே தடுத்து நிற்கிறான்
(பார்க்க : பின்னிணைப்பு)

என்ற பாடல் மூலமாகக் கிந்தனின் வேதனையை வெளிப்படுத்து கிறார்.

நந்தன் தில்லையை அடைந்ததும் மூன்று நாட்கள் மதிற்புறத் தில் காத்திருந்ததைப் போல் கிந்தனும் சென்னையை அடைந்ததும் கல்லூரி வாசலில் மூன்று நாட்கள் ஏதும் உண்ணாமல் கிடந்தான்.

இவ்வாறு என். எஸ். கிருஷ்ணன், கோபாலகிருஷ்ண பாரதியா ரைப் பின்பற்றி தன் கதையையும் கதைப் பாடல்களையும் அமைத் துள்ளார். எனினும் பாரதியார் அளவிற்கு முரண்பாடுகளைத் தீவிர மாகக் காட்டவில்லை. நந்தனுக்கு ஏற்பட்ட அளவு, கிந்தனுக்கு எதிர்ப்புகளும், தடைகளும் வலிமையுடையனவாக இல்லை. விடுதலை பெற்றவுடன் மக்களிடையே நாட்டின் சிக்கல்கள் எளிதில் தீர்க்கப்பட்டு விடும் என்ற நம்பிக்கை ஓங்கியிருந்தது. அதன் பிரதி பலிப்பைக் கிந்தனார் சரித்திரத்திலும் காண முடிகிறது.

தீண்டாமை ஒழிய வேண்டுமானால் கல்வி கற்று உயர வேண்டும் என்ற கருத்தை மட்டுமே இக்கதை விளக்குகிறது. இக்கதையில் தீண்டாமையின் கொடுமைகள் ஆழமாகப் பேசப்படவில்லை. மேலோட்டமாகச் சுட்டிக் காட்டப்பட்டுள்ளன. தீண்டாமை ஒழிவதற் கான தீர்வுகளையும் இக்கதை குறிப்பிடவில்லை. கல்வி பெற்று உயர் வதையே தீண்டாமை ஒழிவதற்குத் தலையாய தீர்வாக என். எஸ். கிருஷ்ணன் குறிப்பிட்டுள்ளார். இந்த அடிப்படையிலேயே தாழ்த்தப்

பட்ட சமூகத்தினர் கல்வி பெற வேண்டுமென்று மத்திய மாநில அரசுகள் பல கல்விச் சலுகைகளை அளித்து வருகின்றன; என்ற போதிலும் கிராமங்களில் வாழும் தாழ்த்தப்பட்ட சாதியினரின் நிலை மேம்பாடு அடையவில்லை. பொருளாதாரத்திலும், சமூகப் படி நிலையிலும் இன்னும் அடிமட்டத்திலேயே உழல்கின்றனர். எனவே கல்வியும், கல்வியின் பயனாகப் பெறும் அரசுப் பதவியும் தனிப்பட்டவரின் மேம்பாட்டிற்கு உதவுமேயன்றி சமூகம் முழுமையும் மேனிலை பெறப் பயன்படா எனவும், கல்வி மூலம் மேனிலையாக்கம் என்பது ஓரளவிற்கே சாத்தியம் எனவும் தெரிகிறது.

''நந்தன் கதை'' என்னும் பழங்கதை, நாடு விடுதலை பெற்ற பின்னர் தாழ்த்தப்பட்ட சாதியினரை உய்விக்கக் கல்வி வசதி வழி செய்யும் என்னும் புதிய கருத்தை வெளிப்படுத்த, மிகச் சிறப்பாகப் பயன்பட்டுள்ளது. கோபாலகிருஷ்ண பாரதியார் கையாண்ட அதே கலை இலக்கிய வடிவமான கதா காலட்சேப வடிவத்தையே என். எஸ். கிருஷ்ணனும் மிகத் திறம்படக் கையாண்டுள்ளார்.

## அடிக்குறிப்புகள்

1. என். எஸ். கிருஷ்ணன், '**கிந்தனார் சரித்திரம்**', என். எஸ். கிருஷ்ணன் பாட்டுகள் அடங்கிய பதிவு நாடாவிலிருந்து எழுத்து வடிவமாக்கப்பட்டது. கதை முழுமையும் *பின்னிணைப்பில் காண்க*.

2. அறந்தை நாராயணன், **தமிழ் சினிமாவின் கதை**, சென்னை: *நியூ செஞ்சுரி புக் ஹவுஸ்*, 1981, பக். 315-318.

## நந்தன் கதை - நாடகம் (இந்திரா பார்த்தசாரதி)

இந்தியா சுதந்திரம் பெற்று பல ஆண்டுகளுக்கு மேல் ஆகி விட்டன. நம்பிக்கை ததும்பிப் பாடிய என். எஸ். கிருஷ்ணனின் கிந்தனார் சரித்திரம் இயற்றப் பெற்று இருபது ஆண்டுகள் ஆகி விட்டன. தாழ்த்தப்பட்ட வகுப்பினருக்காக, முக்கியமாக அவர்கள் கல்வியறிவு பெற்று முன்னேறுவதற்காக, பல சட்டங்கள் இயற்றப் பட்டன; பல சலுகைகள் அளிக்கப்பட்டன; பல நடவடிக்கைகள் எடுக்கப்பட்டன. ஆனால் இவை யாவும் தீண்டாமைச் சிக்கலின் அடிப்படையைத் தொடவில்லை என்று நினைவுபடுத்துவதற்கு 1968 டிசம்பர் 25ஆம் நாள் இரவு கீழவெண்மணியில் ஒரு நிகழ்ச்சி நடந்தது. தஞ்சை மாவட்டத்தில் உள்ள இந்தக் கிராமத்தில் ''விவசாயத் தொழிலாளர்களின் குடிசைகள் நிலவுடைமையாளர் களால் நெருப்பு வைத்துக் கொளுத்தப்பட்டன. ஆண்கள் துப்பாக்கிக் குண்டுகளால் தாக்கப்பட்டார்கள். இதைக் கண்டு அஞ்சிய பெண் களும் பிள்ளைகளும் வயது முதிர்ந்த ஆண்களும் ஓடி ஒளிந்த சிறு குடிசை எரித்துச் சாம்பலாக்கப்பட்டது. அக்குடிசையில் நாற்பத்தி நான்கு உயிர்கள் எரிந்து சாம்பலாயின''.[1] இந்நிகழ்ச்சி தற்செயலாக நேர்ந்ததல்ல. விவசாயத் தொழிலாளருக்கும் நிலவுடைமையாளருக் கும் இருபது ஆண்டுகட்கு மேலாக நிலவி வந்த முரண்பாட்டின், வர்க்க அடிப்படையில் நிகழ்ந்த உரிமைப் போரின் 'உச்ச கட்டம்' இந்தக் கொடூர நிகழ்ச்சி ஆகும். இது தமிழகத்தைப் பெரும் அதிர்ச் சிக்குள்ளாக்கியது. எரிந்த விவசாயத் தொழிலாளர்கள் தாழ்த்தப் பட்ட சாதியைச் சேர்ந்தவர்களாக இருந்தது அதிர்ச்சியை இன்னும் இரட்டிப்பாக்கியது. மனச்சாட்சியுள்ள எழுத்தாளர்கள் இது பற்றி அக்கறை கொண்டு எழுதினர். இவர்களில் இந்திரா பார்த்தசாரதி குறிப்பிடத்தக்கவர். தில்லிப் பல்கலைக்கழகத்தில் தமிழ் ஆசிரியராகப் பணிபுரிந்து வந்த இவர் ஒரு முன்னணி இலக்கியப் படைப்பாளியாக வும் இருந்து வருகிறார். ''வேறெந்த ஆசிரியரையும் விட இவர் மோதுகிற மதிப்புக்களையும் அவற்றின் காரணங்களையும் ஆராய் கிறார். அவற்றைப் புறச் சமூக வாழ்க்கையில், இச்சமூகத்தில் உள்ள தனி மனிதர்களது உறவுகளில் காண முயன்று அவற்றிற்குரிய

காரணங்களையும் பகுத்தாராய முயல்கிறார்'' என்று இவருடைய சமுதாய நோக்கைப் பேராசிரியர் நா. வானமாமலை பாராட்டியுள்ளார்.[2] இவருடைய நூல்களனைத்தையும் திறனாய்வு செய்த தி. சு. நடராசன், ''நவீனப் போக்குகளின் ஒரு சக்தி வாய்ந்த பிரதிநிதியாகவும் திறம்பெற்ற படைப்பாளியாகவும் விளங்குவதால் கவனத்துக்குரிய ஒருவராகத் திகழ்கிறார்''[3] என்றும் ''இவருடைய கண்ணோட்டங்களில் பொதுவாக மனித நேயம் இழைந்தோடுவது குறிப்பிடத்தக்கது''[4] என்றும் குறிப்பிடுகிறார். பேராசிரியர் ந. பிச்சமுத்து இவரை இலக்கியப் போக்குகளில் விமர்சன எதார்த்தவாதத்திற்கு எடுத்துக்காட்டாகக் கூறுகிறார்.[5] பேராசிரியர் கைலாசபதி அவர்களும் சமுதாயத்தின் பிரச்சினைகளை மீண்டும் மீண்டும் சித்தரிப்பதல்லாது யதார்த்தத்தில் அவற்றிற்குத் தீர்வு காணக்கூடிய மார்க்கத்தைக் காட்ட முடியாதவர்களாக உள்ளனர்''[6] என வேறு பலரோடு இணைத்து இந்திரா பார்த்தசாரதியையும் மதிப்பிட்டுள்ளார்.

சமூகக் கண்ணோட்டமுள்ள இலக்கியப் படைப்பாளி என்கிற முறையில் இந்திரா பார்த்தசாரதி கீழவெண்மணி நிகழ்ச்சியின் சமூகப் பின்னணியை ஆய்ந்து இலக்கியம் படைத்துள்ளார். இவருடைய புதினம் குருதிப்புனல் கீழவெண்மணி நிகழ்ச்சியைப் பற்றியது ஆகும். இந்நூல் சாகித்திய அகாடமி பரிசைப் பெற்றது.[7] புதின வடிவில் கீழவெண்மணி நிகழ்ச்சியைச் சித்தரித்த இந்திரா பார்த்த-சாரதி நந்தன் கதையை மறுபரிசீலனை செய்து நாடக வடிவில் 'நந்தன் கதை'[8] என்ற தலைப்பில் படைத்திருப்பது காலத் தேவையைக் கருதியே என்பதில் ஐயமில்லை.

நந்தன் கதைக்கு எழுதியுள்ள முன்னுரையில் ''இது நந்தன் கதைதான்; நந்தனார் கதை அல்ல. 'ஆர்' என்பது சிறப்பு விகுதி அன்று; சிலுவை. சமூக ஏற்றத் தாழ்வுகளைக் கண்டு சீறிய நந்தன், இந்த 'ஆர்' என்ற சிறப்பு விகுதிக்காக, 'பார்ப்பானுடைய' கைத்தட்டல் பெறுவதற்காக, நெருப்பில் எரிந்து போன சோகக் கதையைச் சொல்லுகிறது இந்த நாடகம்''[9] என்று தன் நாடகத்தின் நோக்கத்தைத் தெரிவிப்பதிலிருந்து இவருடைய சமூகக் கண்ணோட்டத்தை அறிய முடிகிறது.

கோபாலகிருஷ்ண பாரதியாரின் **நந்தனார் சரித்திரக் கீர்த்தனை** தான் தன்னை இந்நாடகத்தை எழுதத் தூண்டியது என்று சொல்லும் ஆசிரியர், அவருக்குப் பாராட்டு தெரிவித்து எழுதியிருப்பது சிந்திக்கத் தக்கது. ''சேக்கிழாரில் காணப்படாத கதைக் குறிப்பை அதாவது ஓர் அந்தணர் வருவ்தாக அவர் காட்டியிருப்பதே பாரதியாரின் மேதைத் தனத்திற்கு ஒரு சான்று. Sanskritisation என்று இக்கால சமூக இயல் அறிஞர்கள் கூறுவதைப் பற்றி அறியாமலேயே, அவர்

'சாதியற்றவன்' சாதிக்குள் புகுந்து கொள்ளப் பார்ப்பதை எழுதியிருக்கிறார். பாரதியாருடைய சமூகக் கண்ணோட்டம் வியத்தற்குரியது''[10] என்கிறார்.

மேலும் கீழவெண்மணி நிகழ்ச்சியை ஆராய்ந்த ஆசிரியர் நந்தன் கதையை வெறும் சாதி முரண்பாடாகக் காணாது வர்க்கக் முரண் பாடாகக் காண முற்படுவது இயல்பே. இதையே '' 'பார்ப்பான்' என்று ஒரு குறிப்பிட்ட சாதியைக் கூறவில்லை. சமூகத்தில் ஆதிக்கம் செலுத்த வேண்டுமென்று நினைக்கிறவன் எவனாயிருந்தாலும் அவன் 'பார்ப்பான்' ''[11] என்று விளக்கம் தந்திருப்பதன் வாயிலாகத் தெளிவுபடுத்தியுள்ளார். நாடகத்தில் இதற்கேற்ப சில மாற்றங்கள் செய்திருப்பதும் பொருத்தமானது ஆகும்.

நந்தனை ஒரு மேனிலையாக்க இயக்கத் தலைவனின் மாதிரியாகச் சித்தரிக்க முயன்றிருப்பதும் இந்த மேனிலையாக்க இயக்கம் திசை திருப்பப் படாவிட்டாலோ ஒடுக்கப்படாவிட்டாலோ கிராமத்தில் பொருளாதார ஆதிக்கம் செய்யும் வர்க்கத்தினருக்குப் பேரபாயமாய் உருப்பெற்று விடும் என்பதை உணர்ந்து அதற்கேற்பச் செயற்படுபவர்களாக மேற்சாதிக் கதை மாந்தரைப் படைத்திருப்பதும், நந்தன் சாதியினரை விழிப்படையாதவராயும் எளிதில் சூழ்ச்சிகட்கு இரையாவோராகக் காட்டியிருப்பதும் இந்நாடகத்தின் சிறப்புக் கூறுகளாம். சேக்கிழாரும் கோபாலகிருஷ்ண பாரதியாரும் இறைவன் அருளால் நிகழும் அற்புதங்களாகக் காட்டியவையெல்லாம் பகுத்தறிவுக்கு ஒவ்வாதன என்பதால் மேற்சாதியினரின் சூழ்ச்சிகளாகக் காட்டியிருப்பதும் இந்நாடகத்தின் வேறுபட்ட தன்மைக்குச் சான்றாக அமைகிறது.

மேனிலையாக்க இயக்கத் தலைவனாக நந்தன் மாறுவதற்குச் சமய உணர்வு முதன்மையாகக் கூறப்படவில்லை. மாறாக நந்தனின் அழகியலுணர்வே காரணமாகக் கூறப்படுகிறது. முதற்காட்சியில் திரை விலகியதுமே பறைச்சேரியின் அவல நிலை காட்டப்படுகிறது. நந்தன் 'இதுதாங்க எங்க பறச்சேரி. கள்ளே கைலாசம்னு நினைக்கிற பயல்வ' என்று பறைச்சேரியைப் பார்வையாளருக்குச் சுட்டிக் காட்டி விட்டு, ஏன் தனக்கு மட்டும் அழகுணர்ச்சி ஏற்படவேண்டும் என்று வியப்பதாகவும், தன் மனது திறந்ததால்தான் இந்த அழகுணர்ச்சி ஏற்பட்டிருக்கிறது என்றும் மற்ற பறையர்களின் மனதுகளையும் திறந்தால் அவர்களும் தங்களின் அழுக்கு நிறைந்த வாழ்க்கையை வெறுத்து அழகை நுகர அறிந்து, மனிதர்களாக மாறுவார்கள் என்று நினைப்பதாகவும் ஆசிரியர் நந்தனுடைய தன்னுரையாடலை அமைத்திருக்கிறார். மேலும் இந்த அழகுணர்ச்சிக்குப் பார்ப்பார் கும்பிடும் கடவுள்தான் தோற்றுவாய் என்று நந்தன்

நினைப்பதை ''பாப்பாரச்சாமி அளகு, பறையன் பார்ப்பானாவது எப்படி? பார்ப்பாரச் சாமியைக் கும்பிடனும்'' (ந.க. ப. 9) என்ற நந்தன் கூற்றால் வெளிப்படுத்துகின்றனர். மேலும், ''குனித்த புருவமும்'' என்று தொடங்கும் தேவாரப் பாடலுக்கு ஒரு அழகிய பெண் நடனமாடும் காட்சியையும், தொடர்ந்து சேரியில் கள் குடித்த வண்ணம் ஆபாசக் கூத்தாடும் காட்சியையும் மாற்றி மாற்றி அமைப்பதன் வாயிலாகவும் நாடகம் பார்ப்போரும் நந்தன் உணர்ச்சியைப் புரிந்து கொள்ளுமாறு ஆசிரியர் நாடகத்தை அமைத்துள்ளார். ''இவங்களை எப்படியாவது மாத்தி ஆகணும்'' என்று நந்தன் உறுதி பூணுவது தர்க்கரீதியான வளர்ச்சியாக அமைகிறது (ந. க. ப. 10). நந்தனின் சிவபக்தி பகுத்தறிவு அடிப்படையில் புரிந்து கொள்ள முடிகிறது. மேனிலையாக்க இயக்கங்களில் கள்ளுண்ணாமை, தூய்மை, அழகுணர்ச்சி ஆகியவை இடம் பெற்றிருப்பது முன்னரே குறிப்பிடப்பட்டது. மேலோட்டமாகப் பார்க்கும்பொழுது பக்தி இயக்கமாகவும் பண்பாட்டு இயக்கமாகவும் காட்சியளித்தாலும், இதன் தர்க்கரீதியான வளர்ச்சியில் வர்க்கப் போராட்ட இயக்கமாக மாறவல்ல வாய்ப்பு இருக்கிறது. ஆசிரியர் இந்த அபாயத்தை மேல் சாதியினர் உணர்வதாக நாடகத்தை நடத்திச் செல்கிறார்.

வேதியர்கள் நந்தனைப் பற்றித் தங்களுக்குள் பேசிக் கொள்வதிலிருந்து இந்த உணர்வு புலப்படுகிறது. ''பறச்சாமி வேணாம், பாப்பாரச்சாமி வேணும்'', ''அழுக்குச்சாமி வேணாம், அழகுச்சாமி வேணும்'', ''காட்டுச்சாமி வேணாம், நாட்டுச்சாமி வேணும்'' என்றெல்லாம் முழங்குவதோடு நந்தன் நிறுத்திக் கொள்ளவில்லையென்றும், ''மனுஷனுக்கு மனுஷன் அடிமை பண்ணைக்காரன் வச்ச சட்டம்'' என்பதாக பேசுகிறான் என்றும் இப்படியே விட்டால் ''பறையனுக்கு வரும் நாட்டாண்மை'' என்றும் ''சாதி தர்மம் போனால் நாதியத்துப் போவோம்'' என்றும் வேதியர்கள் உரையாடுவதாக ஆசிரியர் காட்சி அமைத்துள்ளார். காட்சி முடிவில் ஒரு வேதியர் ''நந்தனைத் தீர்த்துக் கட்ட வழியை'' மற்றவர்களுக்குக் காதோடு காதாகக் கூறுவதாக அமைத்துத் தங்கள் ஆதிக்கத்திற்கு அபாயமாக வரவல்ல மேனிலையாக்க இயக்கத்திற்கு எதிராக ஆதிக்கச் சக்திகள் சூழ்ச்சி செய்யும் இயல்பை ஆசிரியர் குறிப்பாகத் தெரிவிக்கிறார்.

மேற்சாதியினர் வர்க்க அடிப்படையில் ஒன்றுபடுகின்றனர் என்பதை வேதியரும், முதலியாரும், உடையாரும் கூடிச் சூழ்ச்சி செய்வதாகக் காட்டுவதன் வாயிலாக ஆசிரியர் வெளிப்படுத்துகிறார். இம்மூவருமே நந்தன் சரித்திரக் கீர்த்தனையில் வாராத பாத்திரங்கள்,

இந்நாடகத்தில் வரும் வேதியர் ஆதிக்க வர்க்கத்தின் சிந்தனையாள ராக உருவாக்கப்பட்டுள்ளனர். நந்தனார் சரித்திரக் கீர்த்தனையில் ஆண்டையாக வரும் வேதியருக்கு இணையான பாத்திரமாக வரும் 'புதிய வேதியர்' முற்றிலும் வேறுபட்ட குணங்களை உடையவராகக் காணப்படுகிறார். நந்தனார் சரித்திரக் கீர்த்தனையில் வேதியர் மிகுந்த உயர்நிலையில் உள்ள பாத்திரமாக படைக்கப்பட்டிருக்கிறார். இந்நாடகத்தில் வரும் ஆண்டை சீரழிந்த 'மிராசுதார்' வர்க்கத்தின ராகக் காட்டப்பட்டுள்ளார். பரம்பரைச் சொத்தையெல்லாம் கூத்திலும் சூதிலும் இழந்து போகத்தில் மூழ்கிக் கிடப்பவர். 'அப்பன் வைத்தது நாற்பது வேலி. இவன் கிட்டேயிருப்பது நாலு வேலி' என்று கிண்டலுக்கு உரியவராகிறார். இவருக்குத் தன் நிலத்து நடப்புகளில் எந்தவித அக்கறையுமில்லை. முதலியாரும் உடையாரும் முதல் வேதியரும் எது சொன்னாலும் தலையாட்டி விட்டு ''நான் அப்போ வரட்டுமா'' என்று சொல்லி இடத்தைவிட்டு நழுவ முயல் கிறார். தஞ்சை மாவட்டத்தில் இந்நூற்றாண்டில் பிராமண நில உடைமையாளர் சீரழிந்து பிராமணரல்லாதாராகிய நில உடைமை யாளர் மேலாதிக்கம் பெற்றிருப்பதை இப்பாத்திரங்கள் குறிக்கின்றன.

நந்தனுடைய இயக்கம் எல்லா மேட்டுக்குடி மக்களையும் பாதித் திருக்கிறது என்பது முதலியார், உடையார், வேதியர் உரையாடலில் தெரிய வருகிறது. மூவர் நிலத்திலும் உழவுத்தொழில் பாதிக்கப்பட் டிருக்கிறது. முதலியாரும் உடையாரும் நந்தனை அடித்துப்போட வேண்டும் என்று கருதுகிறார்கள். ஆனால் வேதியர் வன்முறை பயன்தராது, தந்திரத்தால் வெல்ல வேண்டும் என்கிறார். இதற்காக அவர் வகுத்த திட்டம் ஓர் அரசியல் பாடமாக அமைகிறது. இத் திட்டம் யாதெனில், நந்தனுடைய வழியிலேயே சென்று, அவனுடைய ஆசைகள் பலிக்கும்படியாக உதவி செய்து, அதேசமயம் அவனுக்கு இறையருள் கிட்டியதால் இவ்வாறு எல்லாம் பலிக்கின்றன என்று அவனை நம்பச் செய்து, அவனைத் தன்மயக்க நிலையில் ஆழ்த்தி தனக்கு தெய்வீக சக்தி இருப்பதாக நினைக்கும்படி செய்வது; அதே சமயம் அவனை அவனுடைய வகுப்பினரிடமிருந்து அந்நியப்படுத்தி அவன் வகுப்பினருக்குள்ளேயே பகையை வளர்த்து அவனைத் தனிமைப்படுத்துவது, இறுதியில் நந்தனைத் தீயினின்று அவன் பக்தி அவனைக் காக்கும் என்று நம்பவைத்து தீக்குளிக்கச் செய்து எரிப்பது; இவையே வேதியரின் சூழ்ச்சியாகும்.

இதன்படி, அவன் கோயில் தேவதாசியாகிய அபிராமியின் உதவி யுடன் திருப்புன்கூர் கோயிலுக்குள் புகுந்து தரிசனம் செய்கிறான். அப்பொழுது அசரீரி வாக்கு, ''நந்தா நீ என் பக்தன். உன்னால் செய்ய முடியாதது இனி ஒன்றுமில்லை...அற்புதங்கள் நிகழ்த்தி என்

தாளை நீயடைவாய்" (ந.க. ப. 30). நந்தன் பகுத்தறிவுக்கு மீறிய இவ்வாக்குகளில் நம்பிக்கை கொள்ள ஆரம்பிக்கிறான். அசரீரியின் கட்டளைப்படி அபிராமியைத் துணையாக ஏற்றுக் கொள்கிறான். நந்தனுக்குப் 'பூணூலை மாட்டியது போதாது என்று குட்டியை வேறு சேர்த்துவிட்டார் வேதியர்' (ந.க. ப. 32). இவ்வளவு அழகான பெண் நந்தனுக்குக் கிடைத்ததால், அவன் சாதியிலேயே அவனுக்கு எதிராக ஒரு தலைவன் உருவாகிறான். "கீழ்ச்சாதியிலே ஏற்படுகிற உட்பூசல் மேற்சாதி காட்டிலே பெய்கிற மழை" என்கிறார் வேதியர் (ந. க. ப, 32). நந்தனுக்கு ஏற்பட்டதை வேதியர் கீழ்வருமாறு விளக்குகிறார்.

"ஸ்தாபனத்தை ஒருத்தன் எதிர்த்துப் போராடினா, ஸ்தாபனம் அவனை ஏத்துக்கட்டும்; எதிர்க்கிறவன் கட்சி ரெண்டாகும். ஸ்தாபனம் வாங்கிவிட்ட கைக்கூலின்னு அவன் தலைமையை எதிர்த்துப் போராட புதுசா ஆட்கள் புறப்படுவர். இதுதான் இப்பொ நடக்கிறது. இன்னும் சில காலம் காத்திருங்கோ, நந்தன் கதையும் முடிஞ்சாச்சு" (ந.க. ப. 33).

நந்தன் சாதியில் மேலும் பிளவுண்டாக வேதியர் முதலானோர் பரத நாட்டியத்திற்கும் பறையர் பள்ளுக்கூத்திற்கும் ஒரு போட்டியை ஏற்பாடு செய்து நடத்துகிறார்கள்; பரதம் வெற்றி பெற்றதாக அறிவிக்கிறார்கள். மேலும் நந்தனால் தங்களுடைய நோய்நொடிகள் நீங்கியதாக வேதியரால் ஏவி விடப்பட்ட ஆட்கள் நந்தனை வணங்குகின்றனர். நந்தன் தனக்கு உண்மையாகவே இறையருள் கிடைத்து விட்டதாக நம்புகிறான். சேரியில் பகைமையும் பொறாமையும் அதிகரிக்கின்றன.

வேதியர் யோசனைப்படி தில்லை செல்ல நந்தன் முடிவு செய்கிறான். ஆனால் ஆண்டையின் வயல் வேலைகளை முடிக்க வேண்டுமே என்று தயங்குகிறான். வேதியர் அவனை இடைவிடாது இரவு முழுவதும் தன் சீடர்களுடன் பஜனை நடத்தும்படி கூறுகிறார். அவனுடைய தெய்வவலியால் அறுவடை தானே நடக்கும் என்கிறார். அதன்படி நந்தன் பஜனை செய்து கொண்டிருக்கும் பொழுது, வேறு ஆட்களை வைத்து அறுவடையை செய்து முடிக்கிறார். நந்தன் தன்னுடைய பக்தியின வல்லமையால் நிகழ்ந்தது எனறு நம்பி விடுகிறான் (ந. க. பக். 50-54).

நந்தன் அபிராமியுடனும் மற்ற சீடர்களுடனும் தில்லை செல்கிறான். அபிராமியுடன் அவன் தீக்குள் செல்கிறான். "பார்க்கின்றவர்கள் மனம் பதைத்து உடல் சில்லிட்டுப் போகும்படியான அளவுக்கு

அமானுஷ்யமான மனித மிருக ஓலம்" கேட்பதாகக் காட்சி அமைகிறது. முதலியார், "இன்னும் பார்ப்பானாப் போகணுங்கிற பறையங்க யாராரு? வாங்க வாங்க" என்கிறார். பறையர்கள் தலை தெறிக்க அரங்கத்தை விட்டு ஓடுகின்றனர் என்பதாக நாடகம் முடிகிறது (ந. க. பக். 57).

ஆசிரியர் நாடக ஆரம்பத்தில் நந்தனை ஒரு பித்தனாகக் காட்டாமல் ஒரு சிந்தனையாளனாகவே காட்டுகிறார். தன் சாதியினர் தங்களுடைய வாழ் நெறியுடன் திருப்தி கொண்டவர்களாகக் கள்ளிலும் அழுக்கிலும் மூழ்கியிருக்கிறார்களே என்று வருந்தி, அவர்களிடம் விழிப்புணர்வு ஏற்படுத்த முயல்வதாகக் காட்சிகள் வருகின்றன. "மனிசனுக்கு வேண்டியது வவுறு (வயிறு)" என்றும், "வவுத்துக்குச் சாமி சோறு" என்றும் பறைச்சிகள் பேச, நந்தன் "வவுத்துக்குச் சாமி சோறு, மனசுக்கு?" என்று கேட்கிறான். அதற்குப் பறையர்கள் 'பறையனுக்கு வவுறுதான் மனசு' என்றும், 'மாடும் பறையனும் ஒன்று' என்றும் கூறுகின்றனர். நந்தன் "மாடு கோயிலுக்குள் நுழையலாம், பறையனால் முடியாது. எனவே பறையனை விட மாடு உயர்ந்தது" என்று இடித்துரைக்கிறான். "இது பிறவியிலே உண்டான நட்டம்" என்று அவர்கள் வாதாட, நந்தன் "அது பணக்காரன் வச்ச சட்டம்" என்றும் பிறவியின் இழிவை மாற்ற, "நாமே நம்மை மாற்றிக் கொண்டால் போதும்", என்றும் "தங்களை மாற்றிக் கொள்ள பார்ப்பாரக் கோயிலுக்குச் சென்று அழகைக் கும்பிடுவோம் என்றும் கூறுகிறான். அழகு என்பதே மனிதன் என்கிறான். "மாடுகளாக இருக்கோம் மனிசனங்களாக மாறணும்" என்றும் அதற்கு பறையன் பறைச்சி என்கிற தன்னுணர்வு நீங்க வேண்டும் என்றும் கூறுகிறான். சாதி புறவய உண்மை தம் நினைவில் உள்ள ஒன்றல்ல என்ற வாதத்திற்கு நந்தன், "மேற்சாதிக்காரன் சொல்வது பாதி; நாமே அப்படி நினைப்பது மீதி" என்று கூறி, "ஆண்டைக்கு அடிமைக்காரனல்லவே" என்ற பாடலைப் பாடுகிறான். இவ்வாறு பறையர்கள் விடுதலைக்குத் தான் ஒரு வழி கண்டுபிடித்து விட்டதாக நினைத்து அதை அவர்களுக்கு விளக்கிக் கூறுகிறான்.

பின்னர் சேரிப் பெருங் கிழவனுடன் வாதாடும் பொழுதும் 'முக்தி', 'விடுதலை' என்ற சொற்களுக்குப் பொருள் கூறும்போது, "நாம் ஆண்டைக்கு அடிமையில்லை என்கிற இரகசியம், நாமே சாமியாகிவிடுகிற அதிசயம்" என்று தன் இயக்கம் பறையர்களின் விடுதலைக்கான இயக்கம் எனக் கூறுகிறான். அவனுடைய சீடரில் ஒருத்தியும், கிழவனைப் பார்த்து, "சங்கரா சங்கரா என்று ஆடு, இனி அடிமையில்லே என்று பாடு" என்கிறாள். ஆனால் இந்த விடுதலை இப்பிறப்பில் இல்லை என்பதாக 'சாமியாவது எப்போ?'

என்ற கிழவன் கேள்விக்கு ''உடம்பு நீங்கினா போதும்'' என்று பதிலிறுக்கிறான். அதாவது இனிமேல் ஆண்டைகளுக்கு உழைப் பதை விடுத்து சிவனையே வழிபட்டு காலத்தைப் போக்கி உயிரை விட வேண்டும் என்பதே நந்தன் காட்டும் வழியாக அமைகிறது. எனவே ''சாமி தரிசனம் வேண்டாம் பூமி தரிசனம் போதும்'' என்று கிழவன் கூற்று நியாயமானதாகத் தென்படுகிறது. நந்தன் ஆண்டை யின் வயலில் வேலையை முடித்துக் கொடுத்துவிட்டுத்தான் தில்லை செல்வது நியாயம் என்று கூறுவதாக வருவது மேற்கூறிய நிலைக்கு முரண்பாடாக உள்ளது. 'நந்தன்' புதினத்தில் (பார்க்க : இயல் இரண்டு) இத்தகைய முரண்பாடு தென்படாமலிருக்க நந்தனே ''சிவ நாமத்தை உச்சரித்துக் கொண்டே தொழிலைத் தொடர்ந்து செய்ய லாம்'' என்று ஒரு சமரசம் செய்து கொள்வாக வருகிறது.

நாடகத்தில் முற்பகுதி முழுவதும் நந்தனை அறிவுபூர்வமாகச் சிந்திப்பவனாகக் காட்டிய ஆசிரியர் பிற்பகுதியில் மெல்ல மெல்ல தன்வயமிழந்து வேதியருக்குப் கட்டுப்பட்டவனாய் தன் மயக்க நிலையில் செயற்படுபவனாய் காட்டுகிறார். நாடகத்தில் இம்மாற்றம் ஏற்படும் பாங்கு இயல்பாக இல்லை. நாடகத்தை எழுதுவதற்கான ஆசிரியருடைய நோக்கம், ஆதிக்கச் சக்திகளுடைய அங்கீகாரத்தை நாடும் அல்லது ஏற்கும் அடிமை மக்களின் தலைவன் மக்களிடமிருந்து தனிமைப் படுத்தப்பட்டு தன் வலிமையையிழந்து இறுதியில் ஆதிக்கச் சக்திகளால் அழிக்கப் படுவான் என்ற கோட்பாட்டை விளக்குவதாகும் என்பது அவருடைய முன்னுரையிலிருந்து புலப்படுகிறது. மேனிலை யாக்க இயக்கங்கள் பலவும் உயர்சாதிப் பண்பாட்டின் குறியீடுகளாக விளங்கும் பல பழக்க வழக்கங்களை மேற்கொள்வதைத் தம்முடைய இயக்கக் கொள்கையாகக் கொண்டிருப்பதுண்டு. மறைமுகமாக இக்கொள்கை அம்மக்களின் சொந்தப் பண்பாட்டை இழிந்ததாகக் கொள்வதாகவும் அமைவதுண்டு. எனினும் அவை அடிப்படையில் சமத்துவம் கோரி உயர்சாதிக்கு எதிராக எழுந்த வெகுசன இயக்கங் கள் என்பதையும் நினைவிற் கொள்ளல் அவசியம்.[12] இந்த அடிப் படையிற் பார்க்கும் பொழுது, நந்தன் பாத்திரத்தை இந்திரா பார்த்தசாரதியும் தம்முடைய முன்னோடிகளைப் போலவே ஒரு முழுமையான மேனிலையாக்க இயக்கத் தலைவனாக உருவாக்கத் தவறிவிட்டார் என்றே கூறவேண்டியதாகிறது. தனிப்பட்டு இயங்கும் ஒரு சீர்திருத்தவாதியாகவே நந்தன் பாத்திரம் படைக்கப்பட்டிருக் கிறது. ஓர் உண்மையான மக்கள் இயக்கத் தலைவன் வேதியர் செய்த சூழ்ச்சிகளைப் புரிந்து கொள்ளாதவனாகவும் வேதியரையே துணை கொள்பவனுமாகவும் இருத்தல் அரிது. பழைய நந்தனார் சரித்திரங்களில் கூறியுள்ள அற்புத நிகழ்ச்சிகளை நடந்தவையாகவே கொண்டு கதையமைக்கப்படுவதால் இக்குறை நேர்கிறது.

மேலும் இந்நாடகத்தில் நந்தன் சாதியினர் சற்றும் விழிப்புணர் வில்லாதவர்களாகக் காட்டப்பட்டுள்ளனர். நந்தன் என்ற புதினத்தின் (பார்க்க: இயல் இரண்டு) ஆசிரியர்கள் சித்தரித்த அளவிற் சிறிதுங் கூட இந்நாடகத்தில் வரும் கிழவனிடமோ மற்றவரிடமோ உயர் சாதி மீதான வெறுப்பு காணப்படவில்லை. நந்தனாகட்டும் மற்ற பறையர்களாகட்டும் எல்லோருமே மிக எளிதாக வேதியரால் பகடைகளாக விளையாடப்படுகின்றனர். ஆதிக்க சித்தாந்தவாதி களின் சக்தி மிகைப்படுத்திக் காட்டப்பட்டிருக்கிறது. மேலும் மேனிலையாக்க இயக்கத்தில் ஒரு நல்ல விளைவாக உயர்சாதி யினரிடையே சமூக மாற்றம் விரும்பும் முற்போக்குச் சிந்தனையாளர் களின் பங்கு சமூகவியலாளரால் சுட்டிக் காட்டப்படுகிறது.[13] நந்தன் எ ற புதினத்தில் இவ்வாறு உயர்சாதியினரிடையே சீர்திருத்தப் போக்குள்ள பாத்திரங்கள் படைக்கப்பட்டுள்ளமை முன்னரே குறிப் பிடப்பட்டுள்ளது. புதுமைப்பித்தனின் புதிய நந்தன் கதையிலும் (பார்க்க: இயல் மூன்று) இராமநாதன் என்னும் பாத்திரம் இடம் பெற்றுள்ளது. ஆனால் இந்நாடகத்தில் அத்தகைய பாத்திரம் எதுவும் இல்லை. முதலியார், உடையார் போன்ற தற்கால உயர் சாதி பிற்போக்காளரைப் பாத்திரங்களாகக் கொண்ட நாடகத்தில் ஆதிக்க வர்க்கத்திற்குள்ளேயே உருவாகியிருக்கக்கூடிய முற்போக் காளர்கள் பாத்திரங்களாகப் படைக்கப் படாமை ஒரு குறையென்றே குறிப்பிட வேண்டியதாகிறது.

இக்குறைகளுக்கு ஒரு காரணம் நந்தனின் அதிருப்திக்கு உந்து சக்தியாக அவனுடைய அழகியலுணர்ச்சியையே எடுத்துக் கொண்டி ருப்பதாகும். நந்தன் அபிராமி என்கிற தேவதாசியின் அழகில் மயங்கி விடுகிறான். ''அண்ணைக்கி திருப்புன்கூர்லே ஆடின குட்டி, அதை அளகுன்னு உணராதவன் மட்டி, அது ஆடின ஆட்டம் அளகுன்னு உணர்ந்ததுக்குக் கிடைச்ச வட்டி! ஆ! எவ் ன அளகு! என்ன அளகு!'' என்று ஏங்குவதாக முதற்காட்சியிலே வருகிறது (நந்தன் கதை ப. 8). அடுத்த காட்சியில் அபிராமியைத் தேடித் திருப்புன்கூருக்குச் செல்வ தாக வருகிறது. அங்கு அவளைச் சந்தித்து உரையாடி தன்னையும் தன் தோழர்களையும் கோயிலுக்குள் எப்படியாவது அழைத்துச் செல்லும்படி வேண்டுகிறான். இவ்வுரையாடலில் அழகு பற்றிய சில ஆசிரியக் கருத்துக்கள் புலனாகின்றன. அபிராமி 'குனித்த புருவமும்' என்ற பாடலுக்கு அபிநயம் பிடித்தபொழுது தனக்கு அவள் நடராசராகவே காட்சியளித்ததாகவும் அவளுடைய பெண்ணுடல் தென்படவில்லை என்றும் கூறுகிறான். 'அழகு என்பது உடலில் இல்லை. உணர்வோர் மனதில் இருக்கிறது என்றும் நந்தன் கூறு வதாகவும், அதற்கு அபிராமி, ''பறையனோ பார்ப்பானோ அழகு என்று உணர்வோர் இருக்கும்பொழுதுதான் அழகிற்கே பொருள்

உண்டு" என்று பதிலிறுப்பதாகவும் ஆசிரியர் உரையாடலில் அமைத்திருக்கிறார். இவை அனைத்தும் அழகியலுணர்ச்சிக்கு ஆசிரியர் அளிக்கும் முக்கியத்துவத்தை உணர்த்துகிறது. ஆனால் ஒடுக்கப்பட்ட மக்கள் தங்கள் இதரக் கூறுகளைக் கைவிட்டாலும் அழகு பற்றிய கருத்தைக் கைவிட்டால் அவர்களுடைய தனித்தன்மையே அழிந்துவிடும் என்று அடிமைப்பட்ட மக்களின் சித்தாந்தவாதிகள் கருதுகின்றனர். திலிப் ஹிரோ என்பவர் கூறுவது இங்கு பொருத்தமாக இருக்கும்.

> ஆப்ரோ அமெரிக்க, ஆப்ரோ கரீபிய மக்களின் வரலாற்றுப் பின்னணியை ஆய்ந்தால் அவர்களுடைய விடுதலைக்கான தேவை தெளிவுபடும். அவர்கள் தங்கள் மொழியை இழந்தனர். தங்கள் மதங்களை இழந்தனர்; தங்களைத் தாங்களே வெறுப்புடன் காணலாயினர். தங்களுடைய வெள்ளைக்கார எசமானர்களைப் போல தங்களைப் பண்பாட்டளவில் மட்டுமல்ல உடலமைப்பிலும் ஆக்கிக் கொள்ள முயன்றனர். அடிமை முறை ஒழிப்பு அவர்களை இந்தத் துல்லியமான, தாங்களே தங்கள்மீது சுமத்திக் கொண்ட பண்பாட்டு அடிமைத்தனத்தினின்று விடுவிக்கவில்லை. தங்கள் உதடுகளையும் மூக்குகளையும் மெலிதாக்கிடவும், தங்கள் சுருட்டு மயிரை நிமிர்த்திடவும், தங்கள் கருநிறத் தோலை வெளுக்கச் செய்யவும் கோடானு கோடி டாலர்களும் கோடானு கோடி மணி நேரத்தையும் செலவழித்தனர். இந்த வரலாற்றுப் பண்பாட்டு வகை உண்மைகளை நினைவிற் கொண்டால் மட்டுமே "கறுப்பே அழகு" என்றும், "நாம் கறுப்பர்கள், அழகியவர்கள்" என்றும் ஸ்டோக்லி கார்மைக்கேலின் முழக்கங்களில் அடங்கியுள்ள சக்தியை, இனவிடுதலைக்கு வழிகோலும் சக்தியைப் புரிந்து கொள்ள முடியும்.[14]

எனவே, நந்தன் அபிராமியைத் தன் மனைவியாகக் கொண்டு சேரிக்கு வந்ததும் அவனுக்கு அவனுடைய சாதிக்காரர்களிடையே எதிர்ப்பு மிகுந்தது என்றும் அவளை அவர்கள் ஏற்றுக்கொள்ளாததோடன்றி மிக இழிவாகப் பேசினர் என்றும் ஆசிரியர் அமைத்திருப்பது நோக்கத்தக்கது. ஒருபுறம் தங்களுக்குக் கிடைக்காத பேறு அவனுக்குக் கிடைத்து விட்டதே என்ற பொறாமையும் மற்றொருபுறம் அழகு பற்றிய தங்கள் சாதி மதிப்பீடுகளை இகழ்ந்தானே என்ற கோபமும் அவனைத் தனிமைப்படுத்தக் காரணமாயின எனக் கொள்ளலாம். அழகுணர்ச்சியை மட்டுமே அடித்தளமாகக் கொண்டு இயக்கத்தைக் கட்டியதால் இது சாத்தியமாயிற்று என்றும் உண்மையான சமூகப்

பொருளாதார முரண்பாடுகளை அடிப்படையாகக் கொண்டு இயக்கத்தைக் கட்டியிருந்தால் நேர்ந்திராது என்றும் கூற இயலும். விடுதலை இயக்கத் தலைவர்கள் தங்கள் 'எதிரி' வர்க்கத்தினின்று பெண்ணெடுத்திருந்தாலும் தொடர்ந்து தலைவராக இயங்க முடிவதற்கு வரலாற்றில் பல சான்றுகள் காட்ட முடியும்.

இந்நாடகத்தில் இடம் பெறும் காட்சிகளில் முக்கியமான ஒன்று அபிராமியின் நடனத்திற்கும் பறையரின் பள்ளுக்கூத்திற்குமிடையே போட்டி நடத்தப்படுவதாக வரும் காட்சியாகும். இந்தப் போட்டி வேதியரின் சூழ்ச்சியாகும். இதனால் பொல்லாப்பும் பூசலும் விளையும் என்று நந்தன் முதலில் ஒத்துக்கொள்ளவில்லை. ''பறையர்களுக்கு வேண்டும் புது தர்மம் என்று நீ சொல்வது வலுவடைய பறையர்கள் ஆடும் பழங்கூத்தை பரதம் செயித்தால்தான் முடியும்'' என்று வேதியர் வற்புறுத்த மிகத் தயக்கத்துடன் ஒப்புக்கொள்கிறான். போட்டி நாளில் நந்தன் கூட்டத்தை நோக்கி அறிவிப்பதாக வரும் பகுதி பின்கண்டவாறு அமைகிறது.

> இப்போ நடக்கப்போற போட்டி ரெண்டு மரபுக்கு இடையே நடக்கப் போற போட்டி...அறிவுக்கும் அறியாமைக்குமிடையே நடக்கப் போற போட்டி — பறையங்க என்னிக்கும் அடிமைகளா காட்டுமிராண்டிகளா இருக்கக் கூடாதுங்கிறது தான் என் கட்சி...அதனாலே அறிவுத்தீ வளர்த்தா அறியாமைங்கிற அசுரன் துடிதுடித்துச் சாவாங்கிறதைச் சொல்லப் போறதுதான் இப்பொ அபிராமி ஆடப்போற நடனம்
>
> (நந்தன் கதை, பக். 37-38)

அபிராமி பாரதியாரின் 'ஏறுதே தீ...' என்று வரும் வேள்விப் பாடலுக்கு அபிநயம் பிடிக்கிறாள். இதற்கு எதிராக 'தமிழன் என்று சொல்லடா தலைநிமிர்ந்து நில்லடா' என்ற நாமக்கல் இராமலிங்கப் பிள்ளைப் பாடலை நினைவூட்டும் மெட்டில் 'பள்ளன் என்று சொல்லடா' என்ற பாடலுக்குப் பறையர்கள் ஆடுகின்றனர். இப்பாடலில் எல்லா உழவு வேலைகளைச் செய்பவரே பள்ளனும் பறையனும் புலையனும் உழவனுமாய் என்று கூறப்பட்டு அவர்களுடைய துன்பமான வாழ்க்கையைப் பற்றிய குறிப்புகள் அபிநயம் பிடிக்கப்படுகின்றன. இவ்வாறு முற்றிலும் வேறுபட்ட இரு கலைவடிவங்கள் காட்டப்படுகின்றன. போட்டியின் நடுவர்களாக முதலியாரும் உடையாரும் இருந்து பரதம் வென்றது என்கின்றனர். இவ்வாறு ஆதிக்க வர்க்கங்கள் அடிமைப்பட்டுக் கிடக்கும் வர்க்கங்களின் கலை பண்பாடு எல்லாம் இழிந்தன என தாமே அறிவித்துவிட்டு, தாங்கள் பண்பாட்டில் உயர்ந்திருப்பதே ஆதிக்கம் செலுத்துவதற்கான

நியாயம் என்று அடித்துரைப்பதை நாடக ஆசிரியர் எடுத்துக் காட்டி யிருக்கிறார்.

நாடக ஆசிரியர் நந்தன் கதை ''படிப்பதற்காக எழுதப்பட்ட நாடகமல்ல; மேடைக்கென்றே எழுதியது'' என்றும் இந்நாடகமே ஒரு 'Stylistic நாடகம்தான்' என்றும் கூறியுள்ளார் (நந்தன் கதை ப. 6). இந்த நாடகபாணி மேயர் ஹோல்டு என்பவரால் புரட்சிக்கு ப்பிந்திய உருசியாவில் கையாளப்பட்டு அரசியல் அறிவு புகட்டும் நாடகங் களுக்கு ஏற்றதாகக் கொள்ளப்பட்டது. 'நடிகர்களும் பார்வையாளர் களும் தாங்கள் ஒரு நாடக அரங்கில்தான் இருக்கிறோம் என்பதை மறக்காமல் விழிப்பு நிலையில் இருக்க வேண்டும்' என்பதே மேயர் ஹோல்டின் கருத்து. Stylization செய்யப்படுவதனால் இது சாத்தியமாகிறது. ''நாடகங்களை நடித்துக் காட்டும் முறையில் நாடக மேடையில் குறிப்பாகத் தெரிவிக்கப்படும் பல பூரணமற்ற செய்திகளைத் தன் கற்பனையைப் படைப்புக் கருவியாகப் பயன்படுத்தி நிறைவு செய்து கொள்ள வேண்டிய கட்டாயத்திற்குப் பார்வையாளன் உந்தித் தள்ளப்படுகிறான்''.[15] வசனம் செயற்கையானதாக, தாளத் திற்கேற்ப அமைக்கப்படுவதால் பார்வையாளன் தன்வயமிழக்காமல் விமரிசன உணர்வோடு நாடகத்தைக் கவனிப்பான். இந்த உத்திக்குப் பல எடுத்துக்காட்டுகள் நாடகம் முழுவதிலிருந்து எடுத்துத் தர முடியு மெனினும் ஓரிரண்டே இங்கே தரப்படுகின்றன.

நந்தனும் பறையர்களும் உரையாடுவதிலிருந்து சில வரிகள்:

நந்தன் : மனிசப் பொறவி எதுக்குடா?

ஆண் 1 : கள்ளு ஊத்தி குடிக்க

ஆண் 2 : கல்லுச்சாமி கும்பிட

ஆண் 3 : உளுந்து உளுந்து ஆட

ஆண் 4 : சுடலைக் காட்டை காக்க

(நந்தன் கதை ப. 17)

மேற்படி உரையாடலில் ஒவ்வொருவரும் தாளத்திற்கேற்ப தக்க சைகைகள் செய்தவண்ணம் தாங்கள் சொல்ல வேண்டியதை கூறுவர். இதே பாணியில் இந்தக் காட்சி முழுவதும் அமைந்துள்ளது குறிப்பிடத் தக்கது.

மற்றொரு காட்சி வேதியர், முதலியார், உடையார் ஆகி யோரிடை நிகழும் உரையாடல் :

உடையார் : நந்தன் காலை ஒடிச்சா போதாது?
வால் விட்டுப் பிடிப்பதா தும்பு?

வேதியர் : தடியைக் காட்டினா போறாது
தந்திரம் காட்டி ஜெயிக்கணும்

முதலியார் : ஐயருக்குத் தெரியுமா தந்திரம்?

உடையார் : ஐயருக்குத் தெரிந்தது மந்திரம்!

வேதியர் : தந்திரமும் மந்திரமும் ஒண்ணுதான்

முதலியார் : புரியாம இருந்தா மந்திரம்

உடையார் : புரிஞ்சு போனா தந்திரம்

இப்படியே செல்கிறது உரையாடல். முடிவில்,

முதலியார் : நந்தன் கிட்டே இருக்கிறது பக்தி.

உடையார் : ஐயர் கிட்டே இருக்கிறது புத்தி

வேதியர் : நந்தனுக்கு கிடைச்சிடும் முக்தி.

இவ்வாறு நான்கைந்து பாத்திரங்கள் கூடிப் பேசும் உரையாடல்கள் பெரும் பகுதியாக அமைந்துள்ளன.

இந்நாடகத்தில் பாடல்கள் பல இடம் பெறுகின்றன. நந்தனார் சரித்திரக் கீர்த்தனை, தேவாரம் முதலியவற்றினின்று மிகப் பலவும், பாரதியார் பாடல் ஒன்றும் எடுத்தாளப்பட்டுள்ளது. மேலும் கோபால கிருஷ்ண பாரதியார் கையாண்ட இருசொல் அலங்காரத்தைப் பின் பற்றி ஆசிரியரும் ஒரு சில பாடல்களை அமைத்திருக்கிறார்.

இந்திரா பார்த்தசாரதி, நந்தன்கதை என்ற இந்நாடகத்தில் சமூகத்தில் சூழ்நிலையில் உழன்று கிடக்கும் சேரி மக்களுக்கு விழிப் புணர்வு ஏற்படச் செய்ய அவர்களிடையே உறங்கிக் கிடக்கும் அழகுணர்ச்சியைத் தட்டி எழுப்பி அதன் வாயிலாகச் சிவ வழிபாட் டில் ஈடுபடச் செய்ய நந்தன் முயல்வதாகவும், இனி விழிப்பினால் பண்பாட்டு அளவில் மேம்பட்டு உயர்சாதியின் ஆதிக்க நலன்களுக்கு எதிராகப் பறைமக்கள் எழுந்துவிடுவார்களோ என்று அஞ்சி நந்தனின் முயற்சிகளை அவனுக்கு எதிராகவே திருப்பி விட மேற்சாதியினர் சூழ்ச்சி செய்து நந்தனைத் தான் அற்புதங்கள் புரியும் மகான் என்று மயங்கும்படிச் செய்தும், நந்தனுக்கும் அவனுடைய சாதியினருக்கு மிடையே மனத்தாங்கல் ஏற்படும்படி செய்து அவனைத் தனிமைப் படுத்தியும் இறுதியில் தீக்கிரையாக்கியும் நந்தனுடைய இயக்கத்தை ஒழித்ததாகவும் கதையை அமைத்துள்ளார். நந்தன் சரித்திரக் கீர்த்தனையில் வரும் அற்புதங்கள் பொய்யென்றும் வெறும் சூழ்ச்சி

களின் விளைவுகளென்றும் கூறி பகுத்தறிவைப் போற்றியுள்ளார். அடிமைப்படுத்தப்பட்ட மக்களின் தலைவனை ஏற்றுக் கொள்வதாக ஏமாற்றி அவனை அவன் மக்களிடமிருந்து பிரித்து ஒழிப்பதே ஆதிக்க வர்க்கங்களின் அரசியல் தந்திரம் என்பதே நாடகத்தின் மையக் கருத்தாக அமைகிறது.

நந்தனாரைப் பற்றிய புராணக் கதையை நாடகம் பார்ப்போர் வர்க்க முரண்பாடுகள் பற்றிய தற்காலச் சிந்தனைக்கு உகந்தபடி மறுபரிசீலனை செய்யத் தூண்டும்படி நாடகத்தைக் கொண்டு சென்றுள்ளதும் இதற்கு உதவும்படி நாடக பாணியை கையாண்டு உள்ளதும் நாடக ஆசிரியரின் சமூக உணர்வுக்குச் சான்றாக அமைந்திருக்கிறது.

## அடிக்குறிப்புகள்

1. வி. இராதாராஜன், **வெண்மணி**, சென்னை ; பாட்டாளிகள் வெளியூடு, 1978, பக். 19-24; மற்றும் கோ. வீரய்யன், **விவசாய இயக்கத்தின் வீர வரலாறு**, சென்னை : கார்க்கி நூலகம், 1981, ப. 65.
2. நா. வானமாமலை, 'ஆசிரியர் குறிப்பு', **ஆராய்ச்சி**, மலர் 3, இதழ் 1, பக். 39-40.
3. தி. சு. நடராசன், 'இந்திரா பார்த்தசாரதியின் படைப்புக் கள்', **ஆராய்ச்சி**, மலர் 3, இதழ் 1, ப. 41.
4. மே. நூ., ப. 59.
5. ந. பிச்சமுத்து, **திறனாய்வும் தமிழ் இலக்கியக் கொள்கை களும்**, சென்னை : சக்தி வெளியீடு, 1983, ப. 258.
6. க. கைலாசபதி, 'ஆக்க இலக்கியமும் சமூகவியலும்', **ஆக்க இலக்கியமும் அறிவியலும்**, அ. சண்முகதாஸ் (பதிப் பாசிரியர்), **யாழ்ப்பாணம் : யாழ்ப்பாண** வளாகத் தமிழ்த் துறை வெளியீடு, 1977, ப. 47.
7. ந. பிச்சமுத்து, மு. கூ. நூ., ப. 260.
8. இந்திரா பார்த்தசாரதி, 'நந்தன் கதை', **ஔரங்கசீப்**, சென்னை : தமிழ்ப் புத்தகாலயம், 1978.
9. மே. நூ., ப. 6.
10. மே. நூ., ப. 6.

11. மே. நூ. ப. 5.

12. Hetuker Jha, 'Lower - Caste Peasants and Upper caste Zamindars in Bihar (1921 – 25) : An Analysis of Sanskritization and Contradiction between the two groups', *The Indian Economic and Social History Review*, Vol. XIV, No. 4, Oct - Dec 1977, P 558.

13. David Hardiman, Adivasi Assertion in South Gujarat : The Devi Movement of 1922, 1923, *Subaltern Studies III*, Ranajit Guha (ed.), Delhi : Oxford University press, 1984, P. 218.

14. Dilip Hiro, *Black British, White British*, New York, Monthly Review Press, 1973, P. 61.

15. Ayyappa Paniker, 'Traditional Indian Theatre and Experimental Western Theatre' *Journal of Arts and Ideas*, No 4, July - September, 1983, PP. 9-10.

# கோபுர வாசல் - கவிதை நாடகம் (இ. முருகையன்)

தமிழ் நாட்டில் மட்டுமல்லாது, பிற நாடுகளிலும் தமிழ் பேசும் மக்கள் வாழும் பகுதிகளில், சாதி முறை நிலவி வந்திருக்கிறது. தாழ்ந்த சாதியினர் மேற்சாதியினரின் கொடுமைக்குள்ளாகியிருக்கின்றனர். தங்கள் அடிப்படை உரிமைகளுக்காகப் போராடியுள்ளனர். இப்போராட்டங்களின் பின்னணியில் இலக்கியம் படைக்கப்பட்ட போது, நந்தன் கதை இலக்கியப் படைப்பாளிகளின் கவனத்தை ஈர்த்ததில் வியப்பில்லை.

தமிழ் நாட்டுக்கு மிக அருகிலுள்ள இலங்கைத் தீவின் வடக்கு கிழக்குப் பகுதிகளில் தமிழர்கள் வெகுகாலமாக வாழ்ந்து வருகின்றனர். ஈழம் என இன்று உரிமை கொண்டாடப்படும் தமிழர் வாழ் நாட்டின் வடபகுதியாகிய யாழ்குடாப் பிரதேசத்தில் மற்ற பகுதிகளில் இருப்பதைவிட அதிகமாக சாதிக் கொடுமை தலைவிரித்தாடியது. இதற்கு அடிப்படைக் காரணமாக நிலவுடைமைச் சமூக அமைப்பு விளங்கியது. இப்பகுதியில் உயர்குடிப் பிறப்பாளர்களே பெரும் நிலக்கிழார்களாக விளங்கினர். மன்னர்கள் ஆண்டு வந்த காலத்தில், மன்னன் நிலத்துக்கு நேரடியாக உரிமையற்றவனாக நிலத்துக்கு வரி அறவிடுபவனாக மட்டுமே இயங்கி வந்தனன். எனவே பெருநிலக் கிழார்களான, உயர்குடிச் சாதியினரான வேளாளரின் கை ஓங்கியிருந்தது. அவர்கள் வசம் ஏராளமான காணி நிலம் முடங்கிக் கிடந்தது. நிலத்தை அடிப்படையாக வைத்தே எல்லா உறவு முறைகளும் வரையறுக்கப்பட்டிருந்தன. சாதியுடன் சேர்த்து வறுமையையும் திட்டமிட்டுத் திணித்தனர். ஒடுக்கப்பட்ட மக்கள் தொடர்ந்து அடிமைகளாக வாழ நேரிட்டது.[1]

வேளாளர்கள் நிலவுடைமையாளராக இருந்ததோடல்லாது அரசு அதிகாரிகளாகவும் விளங்கினர். யாழ்ப்பாண அரசு காலத்தில் 'பிரதேச பொறுப்பதிகாரிகளாகக்' கடமையாற்றி வந்தவர்கள் அன்னியராட்சிக் காலத்திலும் அந்நியனைப் பேணித் தம் அதிகார நிலையை விட்டுக் கொடுக்காது காலத்துக்கேற்றவாறு கட்டுப்பாட்டதிகாரத்தைத் தம் கைகளிலேயே வைத்திருந்தனர்.[2] ''ஆங்கிலேய

ஆட்சியின் முற்கூற்றிலும் பெரும் பதவிகள் சாதி அதிகார அடிப்படை யிலேயே வழங்கப்பட்டன. ஆங்கிலக் கல்வியைப் பதவி நுழைவுச் சீட்டாக்கியபொழுதும் இந்த நன்மையை இவர்களே பெற்றனர்."[3]

பிராமணர்கள் யாழ்ப்பாணத்துச் சாதி அமைப்பில் அதிகார மேன்மையுடையவராக இருக்கவில்லை. அவர்கள் நிலவுடைமை யாளராக விளங்கவில்லை. பெரும்பாலும் புரோகித வாழ்க்கையையே மேற்கொண்டிருந்தனர்.[4] கோயில்களிலும் அறங்காவலராக பெரும் பாலும் வேளாளரே இருந்தனர்.[5]

இந்நிலையில் சாதிப் பூசல்கள் வேளாளருக்கும் சமூகத்தின் அடித் தளத்திலிருந்த பஞ்சமருக்கும் இடையேதான் வளர்ந்தன. மேற்சாதி யினரில் முற்போக்குக் கருத்துடையவர்கள் தாழ்த்தப்பட்ட சாதி யினரின் உரிமைகளுக்காகவும் மேம்பாட்டிற்காகவும் பாடுபடலாயினர். இந்தியத் துணைக் கண்டத்தில் தேசிய இயக்கம், குறிப்பாக அண்ணல் காந்தி தலைமையில், சமூக சீர்திருத்தத்துக்காகவும் செய லாற்றி வந்தது. தீண்டாமை ஒழிப்பு, தாழ்த்தப்பட்ட சாதியினரின் மேம்பாடு ஆகியவை இடம் பெற்றிருந்தன. இந்திய தேசிய இயக் கத்தின் தாக்கம் இலங்கையிலும் இத்தகைய சமூக சீர்திருத்த இயக்கம் வளர உதவியது. ஆலயப் பிரவேசம், சமபந்தி போஜனம், சரியாசனம் ஆகியவற்றை முன்வைத்து முற்போக்குச் சிந்தனையாளர் இயக்கங்கள் நடத்தினர். முதல் ஆலயப் பிரவேச முயற்சிகளை உயர் சாதியினர் நீதிமன்றத் தீர்ப்புகள் பெற்று தடுத்து நிறுத்தினர். சம பந்தி போஜன சாலைகள் தீக்கிரையாக்கப்பட்டன. தாழ்த்தப்பட்ட சாதி மாணவர்களுக்கு உயர்சாதி மாணவர்களுக்குச் சரிசமமான இருக்கை அளிக்க மேற்கொண்ட பள்ளிக்கூடங்களும் தீவைப்புக் குள்ளாயின. இவ்வாறு சமூக சீர்திருத்த இயக்கங்கள் உயர்சாதி யினரின் வன்முறையைச் சந்திக்க நேர்ந்தது.[6]

இலங்கை சுதந்திரம் பெற்று இருபதாண்டுகள் கழிந்தும் சாதிக் கொடுமை நீங்கவில்லை. தாழ்த்தப்பட்ட சாதியினர் தங்கள் உரிமை களை நிலைநாட்ட அமைப்புகள் ஏற்படுத்திக் கொண்டு போராடலா யினர். இதன் விளைவாக உயர்சாதியினரின் வன்முறைகள் பெருகின. 1960களின் இறுதியில் ஆலயப் பிரவேசப் போராட்டம் தீவிரமடைந் தது. எறிகுண்டு வீச்சு, துப்பாக்கிச் சூடு, கோவில் கதவடைப்பு போன்றவை அன்றாட நிகழ்ச்சிகளாயின. தேநீர்க் கடையில் நுழையவும் பொதுக்கிணற்றில் நீரெடுக்கவும் முயன்ற பஞ்சமர் தாக்கப் பட்டனர்.[7]

இந்தச் சூழ்நிலை ஈழத்து இலக்கியத்திலும் படைப்புக் கலை யிலும் எதிரொலித்தது. ''கந்தன் கருணை'' என்ற நாடகம் ஆலயப்

பிரவேச இயக்கத்துக்கு ஆதரவாக மேடையேற்றப்பட்ட பொழுது, பழமைவாதிகளின் கடும் எதிர்ப்புக்குள்ளாகியது.[8] டானியேலின் 'பஞ்சமர்' என்னும் புதினம் அக்காலகட்ட அனுபவங்களை உள்ளடக்கி வெளிவந்தது. இன்னும் சிறுகதைகள் கவிதைகள் பலவற்றிலும் இந்தப் பிரச்சனை இடம் பெற்றது.

1950களில் வானொலிக்காக எழுதப்படத் தொடங்கி 1960களின் பிற்பகுதியில் மேடையேற்றுவதற்கென்றே திட்டமிட்டு எழுதப்பட்டு வர ஆரம்பித்த கவிதை நாடகங்களில் பல சமூகப் பிரச்சனைகளைப் பொருளாகக் கொண்டிருந்தன.[9] கவிதை நாடகங்களில் ''உணர்ச்சி முனைப்பும் எண்ண வெளிப்பாட்டுச் செறிவும் முரண்பாட்டுச் சித்தரிப்பில் தெளிவும் உணர்வுத் தாக்கமும் அதிகம் ஏற்படுகின்றன'' என்பார் சிவத்தம்பி.[10] உரைநடையில் எழுதப்படும் நாடகத்தை விடச் செய்யுளில் எழுதப்படும் நாடகம் செறிவாகவும் இறுக்கமாகவும் அமைய முடியும் என்ற நம்பிக்கையில் இவ்வடிவம் பிரபலமாயிற்று என்பார் நுஃமான்.[11]

ஈழத்தில் கவிதை நாடக இலக்கியத்தில் முன்னணியில் நின்றவர்களில் குறிப்பிடத்தக்கவர் இ. முருகையன். இவருடைய பா நாடகங்களில் இலக்கியச் செய்திகளைப் பொருளாகக் கொண்டவையும் சமகால வாழ்க்கையைப் பொருளாகக் கொண்டவையும் உள்ளன. நக்கீரன் பற்றிய ''குற்றம் குற்றமே'', மாணிக்கவாசகர் பற்றிய ''வந்து சேர்ந்தன'', நந்தன் பற்றிய ''கோபுர வாசல்'' ஆகியவை முதல் வகையையும், ''கூடல்'', ''கடூழியம்'' ''அப்பரும் சுப்பரும்'' ஆகியவை இரண்டாவது வகையையும் சேர்ந்தவையாகும்.[12] இவற்றில் ''கோபுர வாசல்'' பழைய நந்தன் கதையைக் கூறுவதோடு, சமகால ஆலயப் பிரவேசப் போராட்டத்தை அடிப்படையாகக் கொண்ட காட்சியையும் கொண்டுள்ளது. எனவே இந்தப் பா நாடகம் சமகாலத்திய சாதிப் பூசலின் பாதிப்பால் படைக்கப்பட்டது எனக் கொள்ளலாம். முதற்கண் ஓர் இலக்கியச் சோதனையாக ஒரு முழு நேர மேடைக் கவிதை நாடகம் எழுத வேண்டும் என்ற ஆசையால் உந்தப்பட்டு ''கோபுர வாசல்'' எழுதியதாகவும், பின்னர் ஈழத்துச் சமுதாய வாழ்வின் சூழலிலே முனைப்பாகத் தோன்ற ஆரம்பித்த சிறு மாற்றங்களுடனும் இயக்கங்களுடனும் நாடகத்தை இயைபுபடுத்துவது மிக மிக அவசியம் என்று கருதி நாடகத்தில் சிறு சிறு மாற்றங்கள் செய்ததாகவும் இந்நாடகத்துக்கு எழுதிய முன்னுரையில் முருகையன் குறிப்பிடுகிறார்.[13]

ஓர் இலக்கியச் சோதனை பழைய வடிவத்திலிருந்த ஒரு படைப்பை உள்ளடக்கத்திலும் பாத்திரப் படைப்பிலும் மாற்றமின்றி வடிவத்தில் மட்டும் புதுமைப் புகுத்துவதுடன் முற்றுப்பெற்று விடும்.

கோபால கிருஷ்ண பாரதியாரின் நந்தனார் சரித்திரத்தில் கதை மாந்தரின் உரையாடல்கள் இசைப் பாடல்களாகவும் ஆசிரியர் கூற்று கள் உரைநடையாகவும் செய்யுளாகவும் அமைந்திருந்தனவென்றால், கவிதை நாடகமாக இயற்றும்பொழுது உரையாடல்கள் கவிதை வடிவிலே அமைந்து ஆசிரியர் கூற்று என்பதும் கவிதை வடிவில் சூத்ரதாரியின் உரையாகப் புகுத்தப்பட்டால் வடிவ மாற்ற முயற்சி வெற்றி பெற்றதாகக் கொள்ளலாம்.

ஆனால் ஆசிரியர் பழைய படைப்பின் உள்ளடக்கத்தில் வெளிப் படையாக இல்லாதவற்றை வெளிக்கொணரவோ விரிவான விளக்கம் தரவோ, சமகாலத்துக் கருத்துக்களைப் புகுத்தவோ விரும்பினால் புதிய கதை மாந்தர்களை நுழைக்கவும் உரையாடல்களிலும் சூத்ர தாரியின் உரைகளிலும் புதிய விளக்கங்களைப் புகுத்தவும் அவசியம் ஏற்படுகிறது. இத்தகைய மாற்றங்களை மதிப்பிடுவதால் புதிய படைப்பு எந்த அளவுக்கு சமகாலத் தேவையை நிறைவு செய்துள்ளது என அளவிடலாம்.

முருகையன் கதை மாந்தரின் உரையாடல்களிலும் சூத்ரதாரியின் உரைகளிலும் புதிய கருத்துக்களைப் புகுத்தியிருப்பதுடன் பல புதிய கதை மாந்தர்களையும் நுழைத்துள்ளார். இந்த மாற்றங்கள் போது மான அளவு சமகாலத்தியச் சூழலுக்கு இசைவுபடுத்தாமையாற் போலும், முற்றிலும் சமகாலத்திய நிகழ்ச்சியை இறுதிக்காட்சியாகச் சேர்த்திருக்கிறார்.

முருகையன் புதிதாக நுழைத்துள்ள புதிய கதை மாந்தர்கள் நந்தனின் தங்கையாக வரும் வள்ளி, நந்தனின் தாய்மாமனாக வரும் மூத்தார் நந்தனுக்கு எதிராகச் செயற்படும் சொரியனும், பூசாரி சாத்த னும் குண்டர்களும் வேதியருமாவார். இவர்களுள் வள்ளியும் மூத்தா ரும் நந்தனின் உயர் பண்புகளைப் புலப்படுத்த வருகின்றனர். நந்தனை உளவியல் அடிப்படையில் நன்கு புரிந்து கொள்ள உதவு கின்றனர். வள்ளி தன் அண்ணனிடம் அளவிடற்கரிய பாசமும் பக்தி யும் வைத்திருக்கிறாள். நந்தனைக் கயவர்கள் நையப் புடைத்தனர் என்ற செய்தி கேட்டதும் ''அண்ணா! அண்ணா! அடித்துவிட்டார் களே... கழுதைகள் முன்னர் ஏன் கற்பனை நயத்தொடும் கற்பூரத் தின் பெருமையைச் செப்பினாய்?'' என்று கதறுகிறாள். நந்தனைப் பாதுகாப்பாக வீட்டுக்கு அழைத்து வராதது ஏன் என்று வினவுகிறாள்.

மூத்தார் நந்தனுக்காக வேதியரிடம் வாதாடி அவர் மனமாற்றம் அடையும்படி செய்கிறார். நந்தனைக் கலகக்காரன், குழப்பக்காரன். கிளர்ச்சிக்காரன், புரட்சிக்காரன், நாத்திகன் என்று பலரும் பலவாறா கப் பழித்துரைத்து வருவது தவறு என்றும் ''சங்கரன் கருணையின்

பாத்திரமான பண்பினர்" என்பதை உணரவேண்டும் என்றும் கூறுக் கிறார். நந்தன் தன் சாதியினரிடமிருந்து வேறுபட்ட உயர்ந்த பண்பு களை உடையவன் என்பதை வள்ளி மூத்தார் ஆகியோரின் கூற்றுகள் வாயிலாக வற்புறுத்தப்படுகிறது. அவருடைய தனி உயர்பண்புகளுக் காகவும் உண்மையான சிவபக்திக்காகவும் ஆலயம் புகத் தகுதி உடை யவராகக் கருதப்பட வேண்டும் என்பது சாதி சமத்துவ உரிமை அடிப் படையில் ஆலயப் பிரவேசம் செய்ய முயலும் சமகாலத்திய இயக்கத் தினருக்கு ஆதரவானது எனக் கொள்ள முடியாது.

நந்தனுக்கு எதிராகச் செயற்படும் சொரியன், சாத்தன் முதலி யோரின் பேச்சைக் கேட்டே வேதியர் நந்தன் மீது பகைமை கொள்வ தாகவும் மூத்தாருடைய பரிந்துரையினால் மனமாற்றம் பெற்றதாக வும் அமைத்திருப்பதால் சாதி வர்க்க முரண்பாடு முதன்மை பெறாது போகிறது.

ஈழத்தில் நில உடைமையாளராகவும் கோயில் முகாமையாளராக வும் வேளாளரே இருப்பதால் அவர்களின் பிரதிநிதியொருவர் நாடகத் தின் பிரதான முரண் பாத்திரமாக உருவாக்கப்பட்டிருந்தால் கதை யதார்த்தமாகவும் வேகமுடையதாகவும் அமைந்திருக்கும் எனக் கருது வார் கைலாசபதி.[14] இந்திரா பார்த்தசாரதி தஞ்சை மாவட்ட சம காலத்து சமூக உறவுகளைப் பிரதிநிதித்துவப்படுத்தியுள்ளது முந்திய இயலில் குறிப்பிடப்பட்டது. அதுபோல் வேதியருடன் வேதியரல்லாத ஒரு வேளாளப் பாத்திரத்தையும் நுழைத்திருக்கலாம் எனக் கைலாசபதி கருதுகிறார். வேதியர் பாத்திரத்திலேயே சமகாலத்தில் மேலாதிக்கம் செலுத்தும் வேளாளரை அடையாளம் கண்டு கொள்ளும்படியாகப் பாத்திரப் படைப்பு அமைந்திருந்தாற்கூட இன்றையக் காலத் தேவையை நாடகம் நிறைவு செய்திருக்கும். ஆனால் முருகையன் வேறு கண்ணோட்டத்தில் தம் நாடகத்தை அமைத்துள்ளார்.

முருகையன் தன் முன்னுரையில் ''அவரது (நந்தனது) சூழலினின் றும் பிறப்பெடுத்து அக்காலத்துப் பின்னணியில் ஓங்கி நிமிர்ந்த அவரது ஆன்ம சொரூப விகசிப்பை, சாதாரண மக்களின் மறு செயல்களுடன் அருகருகே வைத்து வியாக்யானம் செய்வதற்கு வசதியாக இப்பாத் திரங்கள் வளர்க்கப்பட்டன" என்று கூறுகிறார். நந்தனை விதிவிலக் கான தனிச்சிறப்பு கொண்ட பாத்திரமாக ஒளிவீசச் செய்யும் முயற்சி யில் சமூக முரண்பாடுகளின் வார்ப்புகளுக்கு இடமில்லாமல் போய் விட்டது.

ஆலயப் பிரவேசத்துக்கு எதிர்ப்பு தெரிவித்தவர்கள் தங்கள் வர்க்க நிலையையும் சாதி அகந்தையையும் மறைத்து, சமயக் கோட்பாடுக ளுக்குக் கட்டுப்பட்டவர்கள் என்கிற முறையில் ஆலயப் பிரவேசத்துக்கு

எதிராக நிலை எடுக்க வேண்டியவர்களாக இருப்பதாகக் காட்டிக் கொண்டனர் என்பதைப் புதுமைப்பித்தன் சிறுகதையிலும் அய்யங்கார் களின் புதினத்திலும் கண்டோம். உண்மையான சமயக்கோட்பாடு களுக்கு இசைவானதே ஆலயப்பிரவேசம் என்று அதன் ஆதரவாளர் கள் வாதாடி எதிர்ப்பாளரை இணங்க வைக்க முயன்றனர் என்பதை யும் கண்டோம். இதனால் சாதி சமத்துவம் என்கிற மனித உரிமைப் பிரச்சினை பின்னுக்குத் தள்ளப்பட்டு, சமயம் கூறும் உண்மை எது என்பது பற்றிய ஆராய்ச்சியிலும் வாதப்பிரதிவாதங்களிலும் சிந்தனை திசை திருப்பப்படுகின்ற வாய்ப்பு உருவாகிறது.

தொன்மையான உண்மைச் சைவ சமயத்தில் சாதி அடிப்படையில் வேற்றுமை காணும் கோட்பாடுகள் இல்லை என்றும் சாதி வேற்றுமை கள் பின்னர் புகுத்தப்பட்டவை என்றும் சைவ சமய சீர்திருத்த மனப் பாங்குள்ளவர் வாதாடினார். உண்மை சைவத்தை மீண்டும் நிலை நாட்டுவதே சாதிப்பிணக்குகளுக்குத் தீர்வு காணும் வழி என்று கருதி னர். இந்தக் கண்ணோட்டத்தில் வில்லுப்பாட்டு வடிவத்தில் நிகழ்த்தப் பட்ட நந்தன் கதை வேறொரு இயலில் (இயல் 7) ஆராயப்பட்டுள்ளது.

முருகையனின் நாடகத்தின் இறுதிக் காட்சியில் சீர்திருத்தவாதி யான இளைஞனின் கூற்றாக வருவது ஒப்பு நோக்கற்பாலது:

> ஆகையால் ஐயரே! அகந்தை எனப்படும்
> சைவ விரோதம் தவிர்த்தல் வேண்டும்
> சைவ விரோதம் தவிர்த்திடீராயின், உம்
> சாதி பேதம் உட்பட தகாத
> அநீதி அனைத்தும் அறம் தரும்
> பெரும் புயலிடையே துரும்பாய்த் தொலையுமே.

மேலும் நந்தனை வைதீகச் சமூகம் ஏற்றுக் கொண்டதன் பின்னர், சாதியின் கடும்பிடி தளர்ந்ததாகவும் ஆயினும் மீண்டும் சாதி வேற் றுமை தலைதூக்கியதாகவும் முருகையன் சூத்திரதாரன் வாயிலாக அறிவிப்பு செய்கிறார்.

> ஆதனூர் நந்தரின் அழகிய சரிதையில்
> சாதியின் கடும்பிடி தளர்ந்தமை கண்டோம்
> பிறப்பின் வழியே பேசும் சாதியின்
> இறுக்கம் சற்றே இளக்கம் கண்டது
> ஆயினும் பின்னர் மறுபடி பழமையே
> வெற்றிகண்டது; வேற்றுமை தொடர்ந்தது.

இக்கூற்று வரலாற்று ஆதாரம் கொண்டதல்ல. மேலும் நந்தன் தனியொரு பிறவியாக அவனுடைய சாதியினரிடமிருந்து வேறு

பட்டவனாகவே ஏற்றுக் கொள்ளப்பட்டான் என்பதே நாடகம் கூறும் கதை. இழிய சாதியினன் தனிப்பட்ட முறையில் சாதிப் பண்பாட்டைத் துறந்து சிவபக்தி மார்க்கத்தைக் கடைப்பிடித்தால் வேள்வித் தீயில் குளித்து தூயவனாகி இறைவனடி சேரலாம் என்பதற்கு மேல் நந்தன் கதை எதையும் கூறவில்லை.

முருகையனின் நாடகத்தில் நந்தன் தீக்குளிப்புக்கு உட்படுத்தப் படவில்லை; அவன் தீக்குளிக்கவும் இல்லை. தன் ஆன்ம ஒளியிலேயே 'அருட் கனலிலே' தன்னைத் தூய்மைப் படுத்திக் கொள்கிறான்.

........ நின்மலன் நினைவினால்
அவர் தம் அருட்கனல் மூட்டி முழுகினார்

என்றும்

''சிவ அருட் கனலின் தேசினாற் பழைய
உருவம் நீங்கி ஓர் புத்துரு பெற்றார்

என்றும்

நந்தனின் ''தீக்குளிப்பு'' ஆன்மீகமாக நிகழ்ந்ததேயன்றி உண்மை யாகவே தீயில் இறங்கவில்லையென்று கதையில் ஒரு மாற்றத்தை ஏற்படுத்தியிருக்கிறார் முருகையன்.

படித்தவர்கள் மட்டுமே கவிதை நாடகங்களைப் பார்த்துப் புரிந்து கொள்ளக் கூடியவர்கள். அன்றைய ஈழத்துச் சமுதாத்தில் உயர்சாதி யினரே படித்தவராக இருந்தனர். இவர்களே ஆலயப்பிரவேசத்துக்கு எதிராகச் செயற்பட்டு வந்தனர். 'கோபுர வாசல்' எனும் நாடகம் இவர்களிடையே மன மாற்றம் ஏற்படுத்துவதற்காகவே இயற்றப் பட்டது எனலாம். நாடகம் பார்ப்போரைச் சிந்திக்க வைக்க வேண்டு மானால், அவர்கள் நாடகப் பாத்திரங்களுடன் ஒன்றி விடாது நாடக நிகழ்ச்சிகளை விருப்பு வெறுப்பின்றி விமர்சனக் கண்ணோட்டத்துடன் பார்க்கும்படியாக அமையும்படி ''அந்நியப்படுத்தல்'' அல்லது ''தொலைவு படுத்தல்'' எனும் உத்தியைக் கையாண்டு நாடகத்தைப் படைக்க வேண்டும் என்பார் செர்மானிய நாடகக் கலை இயல் மேதை பெர்த்தோல்ட் பிரெஷ்ட்.[15] ஈழத்து உயர் சாதியினரை விமர்சனக் கண்ணோட்டத்துடன் நாடகத்தைப் பார்க்க வைக்க வேண்டு மென்றால் அவர்களுக்கு அன்று இருந்த விருப்பு வெறுப்புணர்ச்சி களைக் கிளராமல் இருக்குமாறு நாடகத்தை அமைக்க வேண்டும் என்று கருதி 'தீக்குளிப்பு' நிகழ்ச்சியைத் தவிர்த்திருக்கிறார் நாடக ஆசிரியர் என அமைதி காணலாம். ஆனால் பழைய நந்தனை ஏற்றுக் கொள்ளுமளவிற்கு நாடகம் பார்க்கும் உயர் சாதியினர் மனப்பக்குவம் பெற்றாலும், தங்கள் காலத்திய நந்தன்களை, பக்தியின் அடிப்படை யில் அல்லாது மனித உரிமை அடிப்படையில் ஆலயப்பிரவேச உரிமை

கொண்டாடிய தாழ்த்தப்பட்ட சாதியினரை ஏற்றுக் கொண்டிருப் பார்களா என்பது கேள்விக்குரியது. இதற்கு விடை காண முடியாத வாறு இந்நாடகம் இயற்றப்பட்டதிலிருந்து 1980 வரை மேடை யேற்றப்படாது போயிற்று.[16] வெறும் இலக்கியப் படைப்பாக நின்று விட்டது.

ஈழத்தில் அறுபதுகளின் இறுதியில் நிலவிய சமூகச் சூழ்நிலை தோற்றுவித்த காலத் தேவையை மனத்திற்கொண்டு இயற்றப் பட்டிருந்த போதிலும் சமூக முரண்பாடுகளைத் தொடாமல் சமயப் பிரச்சனையாகக் குறுக்கி நாடகம் அமைக்கப்பட்டிருப்பதால் அது காலத் தேவையை நிறைவேற்ற இயலாது போயிற்று. பிற்சேர்க்கை யாக இணைக்கப்பட்ட இறுதிக் காட்சி சமய வரம்புக்குட்பட்ட பிரசார முயற்சியாகத் தனித்து நிற்பதால் அதுவும் வலுவற்றுள்ளது.

''சாதிப் பிரச்சினை பற்றிச் சிறந்த சில தனிப் பாடல்கள் யாத்துள்ள கவிஞர் முருகையன் இந்நாடகத்தில் ''மரபுக் கதையைப்'' பற்றியதாலேயே வேகமிழந்தார் என்று கூறத் தோன்றுகிறது''[17] என்று கைலாசபதி மதிப்பீடு செய்கிறார். மரபுக் கதையில் காலத் தேவைக்கு ஏற்ற மாற்றங்களைச் சரிவரச் செய்யாமையே இந் நாடகத்தின் பெருங்குறையாகும்.

இந்நாடகம் வெறும் இலக்கிய வடிவம் பற்றிய சோதனையாக அடங்கி விட்டது என்றே முடிவு கொள்ள வேண்டியுள்ளது.

அடிக் குறிப்புகள்

1. டொமினிக் ஜீவா: ''தற்காலத் தமிழ்ச் சிறுகதைகளில் வறுமையும் சாதீயமும்'', எச். பி. ராஜ்குமார் (தொ-ர்) தற்காலத் தமிழ் இலக்கியத்தில் வறுமையும் சாதீயமும், சென்னை, கிறித்துவ இலக்கிய சங்கம், 1982.
2. கா. சிவத்தம்பி, ஈழத்தில் தமிழ் இலக்கியம், சென்னை தமிழ் புத்தகாலயம், 1978, ப. 169.
3. மே. நூ., ப. 170
4. மே. நூ., ப. 169
5. கைலாசபதி : அடியும் முடியும், சென்னை பாரிநிலையம், மார்ச் 1960, ப. 335.
6. அருமை நாயகம், ''யாழ்ப்பாணத்தில் ஏற்பட்ட சமூக சீர் திருத்தம், 1900 - 1957, சில அம்சங்கள்: தென்னாசியவியல்

கருத்தரங்கு, யாழ்ப்பாணம், 1980. இக்கட்டுரையின் ஒரு பகுதி பாலம் டிசம்பர் '86-ஜனவரி' 87 இதழ்களில் வெளி வந்துள்ளது.

7. கே. டானியல் : பஞ்சமர், தஞ்சை பிரகாஷ் வெளியீடு, 1982, பிற்சேர்க்கை பக். 420 - 424.

8. மே. நூ., பக். 422 - 424.

9. எம். ஏ. நுஃமான் : ''ஈழத்துப்பா நாடகங்கள்'' மல்லிகை, 1980, மறு அச்சு : நுஃமான், ''திறனாய்வுக் கட்டுரைகள்'' சிவகங்கை, அன்னம், 1985, பக். 120 - 131.

10. கா. சிவத்தம்பி. மு. கூ. நூ., பக் 155 - 156.

11. நுஃமான், மு. கூ. நூ., ப. 115.

12. நுஃமான், மு. கூ. நூ., பக். 123 - 125.

13. இ. முருகையன், கோபுரவாசல், கொழும்பு, 1969. முன்னுரை.

14. கைலாசபதி, மு. கூ. நூ., ப. 335.

15. Bertolt Brecht, Brecht on Theatre, ed & tr. John Willet, New Delhi, Radhakrishna, 1979. pp. 91-99.

16. நுஃமான், மு. கூ. நூ., ப. 123.

17. கைலாசபதி, மு. கூ. நூ., ப. 345

## நந்தனார் ஆராய்ச்சிக் கதை - வில்லுப்பாட்டு
## (எம். சி. செயப்பிரகாசம்)

ஏறக்குறைய இந்திரா பார்த்தசாரதியின் நந்தன் கதை தில்லி மாநகரில் மேடையேற்றப்பட்டுவந்த சமயத்தில் தெற்கே இராமநாத புரம் மாவட்டத்தில் பாலு திராவிடன் என்ற திரு. பாலசுப்பிரமணியன் நந்தனார் ஆராய்ச்சிக் கதை என்ற தலைப்புடன் கூடிய வில்லுப்பாட்டு நிகழ்ச்சியை ஊர்தோறும் நடத்தி வந்தார்.[1] இந்திரா பார்த்தசாரதி யின் நாடகத்தைப் போலவே இந்த வில்லுப்பாட்டுக் கதையும் நந்தனார் சரித்திரக் கீர்த்தனையில் உள்ள அற்புதங்களை நீக்கி விட்டு முற்றிலும் பகுத்தறிவுக்கு உடன்பாடான நிகழ்ச்சிகளாகத் தொகுத்து இறுதியில் நந்தனைத் தீக்குள் தள்ளி எரித்துக் கொன்ற தாக முடிகிறது. இந்த வில்லுப்பாட்டுக் கதையை இயற்றியவர் எம். சி. செயப்பிரகாசம் என்பார். 1972ம் ஆண்டிலேயே திருச்சி வானொலியில் தணிக்கை செய்யப்பட்டு ஒலிபரப்பப்பட்டிருந்தாலும் 1984ம் ஆண்டிலேதான் அச்சேறி நூல் வடிவாக வந்துள்ளது. 1984ல் வெளியிடப்பட்டதன் நோக்கம் தாழ்த்தப்பட்டோர் வேறு மதங்களுக்கு மாறத் தலைப்பட்டிருப்பதைப் பற்றி உயர்சாதி சைவ சமயத்தினர் ஆழச் சிந்தித்து சைவத்தைக் காக்கச் செயற்பட வேண்டும் என்பதே யாம். இதனை ஆசிரியர் கூற்று உறுதிப்படுத்துகின்றது.

''இன்றைய நந்தனார்கள் தங்கள் உயிரைக் காக்க - தங்களுக்கு ஏற்பட்டுள்ள இழிவை அகற்ற மதம் மாறுவது என்ற சிந்தனைக்கு ஆட்பட்டு விட்டனர். மதமாற்றம் இழிவை அகற்றி விடாது என்பதை மதம் மாறியவர்களின் அனுபவம் உணர்த்துகிறது.

இதுவரை மதம் மாறியவர்கள் பெரும்பாலோர் தாழ்த்தப்பட்ட பிற்படுத்தப்பட்ட - சிவபக்தர்களே என்ற கசப்பான உண்மையைச் சைவ சமயத்தினர் புரிந்து, பிறப்பிலே பேதம் கற்பிக்கும் - மக்களி டையே உயர்வு தாழ்வு பரப்பும் - நச்சுக் கருத்துக்களை அகற்றும் பெரும் பணியினைச் செய்ய, சைவத்தின் தனித்தன்மையைப் பாது காக்க சைவ சமயத்தினர் விழித்தெழ வேண்டும்'' (ந. ஆ. க., பக். 9-10). எனவே மீனாட்சிபுரத்தில் ஆதி திராவிடர் பெருமளவில்

இஸ்லாம் மதத்தைத் தழுவியதை அடுத்து[2] இந்து சமயவாதி களிடையே ஏற்பட்ட கலக்கத்தின் விளைவாகவே இந்நூல் வெளி யிடப்படுவது அவசரத் தேவையாக உணரப்பட்டது என்பது தெளிவு.

நந்தன் எரிக்கப்பட்டதாகக் கதையை முடிப்பதும் சைவ சமயத் தில் நம்பிக்கை இழக்காமல் அதைக் காக்க விழித்தெழச் சொல்வதும் ஒன்றற்கொன்று முரண்பாடானது என்று கூறலாமே என்பதற்காக 'ஆய்வுரை' என்ற தலைப்பில் இந்நூலில் முன்னுரை எழுதியுள்ள 'பார்வதி மைந்தன்' பின்கண்ட செய்திகளைக் கூறுகிறார். ''திருஞான சம்பந்தர் காலத்திற்கு முன்னர் சைவம் சாதி உயர்வு தாழ்வு தீண் டாமை ஆகியவற்றைக் கொண்டிருக்கவில்லை. திருஞானசம்பந்தர் காலத்தில் சிவ பக்தர்களிடையே வைதீகக் கருத்துக்கள் கலந்து விட்டன. புத்த சமண மத ஆதிக்கத்தை எதிர்க்க வைதீகத்துடன் சமரசம் கண்ட சைவம் பிறப்பிலே பேதம் கற்பிக்கும் வைதீகத்தின் தவறான கோட்பாடுகளை எதிர்க்கத் தவறியது. இதனால் சிவ பக்தர்களிடையே சாதி பேதங்கள் வளர்ந்தன. தூய்மையான உண்மை யான சைவம் இழிந்து சாதிவெறி மிகுந்ததாக ஆகிவிட்டது. நந்தன் கதை சைவர்களுக்கு அறிவுறுத்துவது உண்மையான சைவத்தை மீண்டும் நிலை நாட்டி சாதிபேதங்களை நீக்க வேண்டும் என்பதே யாகும்'' என்று எழுதுகிறார்.

எனவே ''சாதீயக் கருத்துக்கள் சிவபக்தர்களிடம் கலந்ததால் நந்தன் தீயில் தள்ளப்பட்ட நிகழ்ச்சி உண்மையில் நடந்திருக்க வேண் டும் என ஒப்புக்கொள்ளத்தான் வேண்டும் என்றும் கூறுகிறார் (ந. ஆ. க., ப. 8).

இக்கதையைப் படைத்த செயப்பிரகாசம் தன் படைப்புரையில் பின்கண்டவாறு கூறுகிறார்.

> நந்தனார் வாழ்ந்த காலம், அவரது காலத்தில் தமிழகத்தில் புகுந்த வைதீகம், அந்த வைதீகம் உண்டாக்கிய தீண்டாமை என்னும் தீய உணர்வு, அதன் காரணமாக சமூகத்தில் நிலவிய சாதீய முரண்பாடு...வைதீகத்தில் தவறான கோட்பாடுகளை ஆதரித்த சிவபக்தர்கள், தம்மிடையே புகுத்திய தீண்டா மையை மவுனமாக ஏற்றுக்கொண்ட சைவ சமயத்தவரின் பரிதாப நிலை ஆகிய எல்லாவற்றையும் கணக்கிலெடுத்துக் கொண்டு யதார்த்தக் கண்ணோட்டத்துடன் ஆராய்ந்து எழுதப்பட்டதே நந்தனார் ஆராய்ச்சிக் கதை.

மேலும் இதுநாள் வரை சொல்லப்பட்டு வந்த நந்தனார் கதைக்கு முற்றிலும் மாறுபட்டக் கதையாகச் சொல்லப்பட்டிருக்கிறது என்றும்

இது போட்டிக் கதையல்ல, புதுமைக்கதை, உண்மைக்கதை என்றும் ஆணித்தரமாகக் கூறுகிறார் படைப்பாளர் (ந. ஆ. க., ப. 6).

நந்தனார் ஆராய்ச்சிக் கதை வில்லுப்பாட்டு எனப்படும் கலை வடிவத்தில் படைக்கப்பட்டுள்ளது. இக்கலை வடிவம் நாட்டார் கலை வடிவங்களில் மக்களால் மிகவும் விரும்பப்படும் ஒன்றாகும். வில் போன்றிருக்கும் ஒரு நாண் இசைக்கருவியை மீட்டிய வண்ணம், உரை நடையில் ஒரு சில மணித்துளிகளும் தொடர்ந்து பாட்டாக ஒரு சில மணித்துளிகளுமாக மாறி மாறிப் பேசியும் பாடியும் கதை சொல்லப் படும். கதா காலாட்சேபத்தைப் பெரிதும் ஒத்திருக்கும் வில்லுப் பாட்டில் இசை கிராமிய இசையாக இருப்பது அதன் சிறப்புத் தன்மை யாகும். இப்பாடல்களை இசைக்க உயர்ந்த இசைப் பயிற்சி தேவை யில்லை. சாதாரண மக்களும் கூடி இசைக்கக் கூடிய அளவு எளிமை வாய்ந்தது. மறைந்து கிடந்த இக்கலைக்குப் புத்துயிரூட்டி மக்கள் இடையே பரப்பியவர்களில் என். எஸ். கிருஷ்ணனும் ஒருவராவார் என்பது குறிப்பிடத்தக்கது.

செயப்பிரகாசம் இந்த வில்லிசைக் கதையில் ஏற்படுத்தியுள்ள புதுமைகள் குறிப்பிடத்தக்கன. நந்தனாருக்குச் சிவபக்தி ஏற்பட்ட தற்குக் காரணம் அவருடைய ஆண்டை தில்லையில் நடைபெறும் ஆனித்திருமஞ்சனத் திருவிழாவிற்குச் சென்று திரும்பிய பின் தாம் கண்ட காட்சிகளை நந்தனாருக்கு விவரித்துக் கூறியது என்கிறார் ஆசிரியர்.

*சிறப்பான கோபுரங்கள் சிவகங்கை தீர்த்தமுடன்*
*பற்பல நாயகரை — வேதியர் பார்த்ததாய் எடுத்துச்*
*சொன்னவர் கற்பனைக்கு எட்டாத கலையழகுச்*
*சிற்பங்களும் அற்புத மண்டபமும் அங்கு அதிகமாய்*
*இருக்குதென்றார் தெய்வப் பிரசாதம் தன்னை*
*தெவிட்டாத பொங்கல் தன்னை நெய்யினால் செய்யப்*
*பட்ட பொங்கல் நேர்த்தியினை எடுத்துச் சொன்னார்*
(ந. ஆ. க., ப. 14)

*தீண்டத்தகாதவருக்குத் தெய்வப் பிரசாதமாம் பொங்கலைத் தர முடியாது என்று வேதியர் மறுத்துவிட்டபோதிலும்,*

பொன்னம்பலம் பெருமை தன்னை பண்ணையார்
சொன்னதினால்
அன்று முதல் நந்தனுக்கு பக்தி அதிகமாய் வளர்ந்ததய்யா
(ந. ஆ. க., ப. 6)

இவ்வாறு கோயிலின் அழகைப் பற்றிக் கேட்டதனால் அவ்வழகைக் காண எழுந்த ஆர்வத்துடன் பக்தியும் முளைத்தது என்கிறார் ஆசிரியர்.

அடுத்து நந்தனார் திருப்புன்கூருக்குத் தனியாகவே போனதாகக் கதையை அமைத்துள்ளார். வயலில் உழைத்துவிட்டு மரத்தடியில் ஓய்வெடுத்துத் தூங்கிக் கொண்டிருந்தவர் விழித்தெழுந்ததும் கஞ்சிக் கலயத்தையும் மண்வெட்டியையும் எடுத்துக்கொண்டு வீடு திரும்பாமல் திருப்புன்கூருக்கு நடந்து சென்றார் என்பது இயல்பாக உள்ளது.

திருப்புன்கூர் கோயிலில் சன்னதித் தெருக்கோடியில் ஒரு சிவனடியார் கதா காலட்சேபம் செய்து கொண்டிருந்ததாகவும் அவர் சிவதரிசனத்தின் பெருமையை எடுத்துக் கூறும்பொழுது "எந்த சாதியில் பிறந்தாலும் ஒரே மனதுடன் ஈசுவர பக்தி கொண்டிருந்தால் அவர்கள் நிச்சயம் முக்தியடைய முடியும் என்றும் சிவலோக நாதனைக் கண்ணாறக் கண்டு ஒருமுறை தரிசனம் செய்தாலே செய்த பாபங்களெல்லாம் ஓடிவிடும் என்றும் இழிகுலத் தன்மைகளெல்லாம்... நீங்கிவிடும்" என்று உரைத்ததாகவும் அதைக் கேட்ட நந்தனாரும் தான் ஒருதரம் சிவலோகநாதனை வணங்கிவிட்டால் தன் கீழ்ச்சாதித் தன்மைகள் நீங்கி புனிதத் தன்மை பெறலாம் என்று நம்பிக்கை கொண்டதாகவும் கதையமைந்துள்ளது.

நந்தனார் கோயில் வாயிலிலேயே தூங்கிவிட்டார். அதைக் கண்ட ஒரு முரடன் அவரைத் தடியால் அடிக்க மண்டையிலடிப்பட்டு மயங்கி விழுந்தார். மயக்கம் தெளிந்து விழித்தெழுந்ததும் கோயில் வாயில் திறந்திருந்ததையும் ஒரு பெரிய காளை மாடு வாசலை அடைத்த வண்ணம் படுத்திருந்ததையும் கண்டார். பின்னர் அது எழுந்து விலகிச் சென்றபின் நந்தனாருக்குச் சிவலோகநாதன் காட்சி தெரிந்தது. இவ்விதம் திருப்புன்கூர் சிவதரிசனக் காட்சியை ஆசிரியர் அமைத்துள்ளார் (ந. ஆ. க., ப. 18).

சிவ தரிசனம் கிடைத்த மகிழ்ச்சியில் கூத்தாடிக் கொண்டிருந்த நந்தனாரை மேற்சாதியினர் அடிக்கலாயினர். ஓர் அந்தணர் அதை நிறுத்தி நந்தனாருக்குத் தண்டனையாக அவர் கால்பட்ட மண்ணை வெட்டியகற்றும்படி கூறினார். அதன்படி நந்தனார் தான் நின்ற இடத்தில் குழி வெட்டினார். இங்கு திருப்புன்கூரில் குளம் வெட்டிய நிகழ்ச்சியில் உள்ள அற்புதத்தன்மையை விலக்கிக் கதையை அமைத்துள்ளார் ஆசிரியர் (ந. ஆ. க., ப. 19).

சிவலோகநாதனைக் கண்ணால் கண்டு விட்டதால் தனக்கு இருக்கும் இழிகுலத் தன்மைகள் மறைந்து விட்டதென்று நந்தனார்

முழுமையாக நம்பலானார் என்றும் இதைத் தன் ஆண்டையாகிய வேதியரிடமே கூறுகிறார் என்றும் கதை செல்கிறது.

> பக்தியுள்ள புலையர்களும் பாரினிலே உயர்ந்தவரே
> பக்தியிலா வேதியரும் இங்கே முக்தி பெறத் தகுதியில்லை
> காலமெல்லாம் பக்தி செய்தால் ஞாலமெங்கும் பேதம்
> போகும் காலட்சேபம் தன்னில் கேட்டவிக் கருத்துக்களை
> நந்தனார் சொன்னார்
>
> (ந. ஆ. க., ப. 21)

மீண்டும் நந்தன் வயலில் மற்ற வேலையாட்களுடன் கூடி பக்திப் பாடல்கள் பாடிக் கொண்டிருப்பதைக் கண்டித்த வேதியரிடம் நந்தன் கூறுவதாவது :

''ஆண்டையே நீங்கள் உயர்ந்த சாதியில் பிறந்திருந்தாலும் மண்ணாசை, பெண்ணாசை, பொன்னாசை ஆகிய மூவாசைகள் வைத்திருக்கிறீர்கள். நானோ இந்த மூன்று ஆசைகளும் இல்லாமல் இருக்கிறேன். நான் ஒரே மனதுடன் ஆண்டவனை வணங்குவதால் எனக்கு முக்தி கிடைக்கும் என்று நம்புகிறேன்'' (ந. ஆ. க., ப. 22). இவ்வாறு வேதியரிடம் எதிர்வாதம் செய்ய இதற்கு முன் படைக்கப் பட்ட நந்தனார்கள் துணியவில்லை. மேலும் நந்தனார் மதுவையும் இறைச்சி உணவையும் நீக்கி அந்தணர்க்குரிய தூய வாழ்க்கையை வாழ்ந்து வந்தார் என்றும் எனவே 'மாடு தின்னும் புலையனுக்கு மார்கழித் திருநாளோ' என்று கேட்ட வேதியரைப் பார்த்து, மாமிசத்தை வெறுத்து விட்டேன். மதுபானத்தை மறந்து விட்டேன். சாமிபக்தி வளர்த்து விட்டேன். தில்லை சென்று வர அனுப்பும் என்று கூறினார் என்றும் கதையைக் கொண்டு சென்றிருப்பதும் வேறு தன்மையான நந்தனைக் காட்டுகிறது.

இங்கு ஆசிரியர் வேதியர் நந்தனுக்கு ஒரு கதை கூறி தில்லைச் சிந்தனையை விடும்படி அறிவுறுத்துவதாக ஒரு புதிய நிகழ்ச்சியைப் புகுத்தியுள்ளார். இக்கதையில் ஒரு அரசகுமாரன் வேதியர் பெண் ஒருத்திமீது மையல் கொண்டு அவளைத் தன் அரண்மனைக்குக் கடத்திச் சென்றதாகவும் அதனை அறிந்த வேதியர்கள் அவனைப் பழி வாங்கத் திட்டமிட்டு நல்லிணக்கத்தோடு அழைப்பது போல் காட்டிக் கொண்டு அவனைத் தங்களிடத்திற்கு வரவழைத்து விருந்தளித்ததாக வும் விருந்தின் முடிவில் அவன் அமர்ந்திருந்த நாற்காலியின் கீழே அமைக்கப்பட்டிருந்த பாதாளக் குழிக்குள் நாற்காலியோடு தள்ளி விட்டு அவனைப் புதைத்துக் கொன்றதாகவும் தங்களைக் கொல்ல அரசன் அனுப்பிய படையினரிடம் தங்கள் மனைவியரை அனுப்பி மாங்கல்யப் பிச்சை வாங்கி, உயிர் தப்பியதாகவும் வருகிறது.

''தில்லைக் கோவில் மூவாயிரம் தீட்சிதர்களுக்குச் சொந்தமானதடா! அதைப் பார்க்க நீ ஆசைப்பட்டால் மோசம் போவாய்! வேதியர் களுடன் விளையாடாதே! வேதியர்கள் நினைத்தால் எதுவும் செய் வார்கள்'' என்று நந்தனை வேதியர் எச்சரித்து 'தில்லை ஆசையை விடு ஒழுங்காக வேலை செய்' என்று அறிவுறுத்துவதாக ஆசிரியர் நந்தனுக்கு ஏற்படப் போகும் கொடுமையை முன்கூட்டியே குறிப்பாக உணர்த்துகிறார்.

ஆசிரியர் நுழைத்துள்ள இன்னொரு புதுமை நந்தன் வேதியரின் தென்னந்தோப்பிலிருந்து நான்கு காய்களைப் பறித்து கடவுட் பூசை செய்வதாகக் கூறிய ஒருவனுக்கு அளித்ததாக வரும் நிகழ்ச்சியாகும். இதனையறிந்த வேதியர் நந்தனாரைத் திருட்டுப் பயல் என்று திட்டவே நந்தனார் உண்மைத்திருடன் அவருடைய உழைப்பை உறிஞ்சி வாழும் வேதியரே என்று பொருள்பட ''உள்ளங்காலில் வெள்ளெலும்பு ஆட ஓடி ஓடி உழைத்து உங்கள் கிட்டங்கியில் தானியங் களை வருடந்தோறும் குவித்து வருகிற எங்களைப் பார்த்தா இப்படிக் கேட்கிறீர்கள்?'' என்று பதிலிறுத்ததாக ஆசிரியர் உரையாடலை அமைத்திருப்பது அவருடைய சமூகப் பிரக்ஞையைக் காட்டுகிறது.

இதற்கு முந்தைய நந்தன் கதைகளில் வயல் வேலையைச் சிவ கணங்களோ மற்றவரோ செய்து முடித்த பின்னரே நந்தனார் தில்லை செல்வதாக வருகிறது. ஆனால் இக்கதையில் நந்தனார் வயல் வேலையைச் செய்யாமலேயே அப்படியே விட்டு விட்டுத் தில்லை சென்று விடுவதாக வருகிறது. வேதியர் தான் தில்லை செல்வதாக வும் திரும்பிவர இருபது நாட்களாகும் என்றும் அதற்குள் நாற்று நடவு வேலையைச் செய்து முடித்து விடும்படி நந்தனாருக்குக் கட்டளையிட்டுவிட்டு தில்லை சென்று விடுகிறார். இருபத்தைந்து நாளாகியும் திரும்பி வரவில்லை. நந்தனார் இனிக் காத்திருப்பதில் பயனில்லை என நண்பர்கள் தடுத்தும் தில்லை புறப்பட்டுச் சென்று விடுகிறார். தில்லையில் அவரைக் கண்ட வேதியரிடம் ''எந்தனது ஆசைகளே எல்லை மீறிப் போனதினால் தினம் தினம் தூக்கமில்லை, நானும் தில்லை காண வந்து விட்டேன்'' என்றும் நாற்று நடவில்லை என்றும் கூற வேதியர் ''நிலத்தைத் தரிசாகப் போட்டுவிட்டு வந்து விட்டாயோ'' என்று கூறி அவரைத் தடிகொண்டு நையப் புடைக் கிறார். மற்ற வேதியர்களும் கற்களால் அடிக்கின்றனர். ஆண்டை வேதியர், ''இவனுக்கு ஒரு வழி செய்கிறேன்'' என்று கருவிக் கொண்டு அவ்விடத்தினின்று அகல்கிறார். இங்கு தீக்குள் தள்ளும் யோசனைதான் குறிப்பாகச் சொல்லப்படுகிறது.

நாற்று நடப்படவில்லையே என்ற கவலையுடன் ஊர் திரும்பிய வேதியர் தன் வயலெல்லாம் நாற்று நடப்பட்டு இருப்பதைக் கண்டு,

''கடவுளே வந்து நாற்று நட்டு விட்டாரோ?'' என்று வியப்பதாகவும் நந்தனாரின் சேரி மக்களே அவனுக்காக நாற்றை நட்டார்கள் என்று ஒருவன் கூறியதாகவும் அற்புதத்தை விலக்கிக் கதையை எடுத்துச் சென்றிருப்பது ஆசிரியரின் பகுத்தறிவுக் கொள்கைக்கு ஒரு சான்று.

இறுதியாக, நந்தனார் தாமாக தீக்குள் இறங்கவில்லை என்றும் தீயை மூன்று முறை சுற்றி வந்தால் அவருடைய தீட்டுகள் மறையு மென்று கூறி அவரைத் தீயை வலம்வரச் செய்து வலம் வரும்பொழுது தீக்குள் தள்ளப்பட்டார் என்றும் தீக்குளிப்பு நிகழ்ச்சியை மாற்றி அமைத்திருப்பதும் ஆசிரியர் செய்துள்ள புதுமைகளில் ஒன்று.

நந்தனுடைய மக்கள் இது பற்றிய செய்தி கேட்டு அவருடைய ஆண்டையைக் கேட்க அவரும் ''நந்தன் சோதியிற் கலந்துவிட்டான், சாமி ஏற்றுக் கொண்டார்'' என்று சமாதானப்படுத்த சிலர் அதை நம்பி ஆண்டவனை வணங்குவதாகவும், பலர் நம்பாமல் முணுமுணுத் துப் புலம்பியதாகவும் கதையை முடிக்கிறார்.

ஆசிரியர் கதையின் போக்கிற்கு அவசியமில்லாததெனத் தோன்றும் ஒரு நிகழ்ச்சியையும் சேர்த்திருக்கிறார். அதுதான் சிலைத் திருடர்களை நந்தனார் சந்திப்பதாக வரும் நிகழ்ச்சி. ஒருநாள் இரவு நந்தனார் வயலில் காவல் புரிந்து வந்தபொழுது, நான்கு திருடர் களைக் கண்டார். அவர்கள் கடவுட் சிலையைத் திருடிச் செல்கின் றனர் என்பதையறிந்து இது தகாத செயலாயிற்றே, சாமி சும்மா விடாதே என்று அவர்களைக் கண்டித்தார். அதற்கு அவர்கள் தாங்கள் ஆண்டுதோறும் சிலை திருடுவதாகவும் இதனால் தங்களுக்கு எதுவும் நேரவில்லையெனக் கூறினர். இது கேட்டு நந்தனார் கலங் கினார் என்றும் நிகழ்ச்சி அமைக்கப்பட்டுள்ளது.

> திருடி வந்த பொருளைப் பாரு! தேவன்சிலை தங்கச்சிலை
> வருடந்தோறும் திருடுகின்றோம் எமக்குவம்பெதுவும்
> வந்ததில்லை
> அம்மன் சிலை எடுத்தபோது அடுத்திருந்த ஆண்டவனும்
> கம்மென்றிருந்துவிட்டார். தடுக்க கடவுளுமே வந்ததில்லை
> கடவுள் சிலை திருடியவர் கவலையின்றிருப்பதையும்
> கடத்தல்காரர் வாழ்வதையும் கண்டு கலங்கி நின்றார்
> நந்தனாரும்
> (ந. ஆ. க., ப. 24)

நந்தனாரின் கடவுள் நம்பிக்கையைத் தளர்த்துவதாக அமைகின்ற இத்நிகழ்ச்சி தற்காலச் சிலைத் திருட்டுகளையும் அவற்றைப் பற்றிப் பகுத்தறிவாளர்களில் சிலர் கிண்டல் செய்வதையுந்தான் நினைவுகூரச்

செய்கிறது. இதேபோல் இன்னொரு சிறு நிகழ்ச்சியும் வில்லுப்பாட்டில் அமைந்துள்ளது. நந்தனார் தில்லை செல்லும் வழியில் ஏற்றம் இறைத்துக் கொண்டிருந்த இளைஞர்கள் ஆபாசக் கருத்துக்கள் கொண்ட தெம்மாங்குப் பாட்டு பாடிக்கொண்டிருந்ததாகவும் அது கேட்டு நந்தனார் வருந்தி காதைப் பொத்திக் கொண்டதாகவும் கதை கூறுகிறது (ந.ஆ.க., பக். 33-34). இது இன்று கிராமங்களிலும் பரவியிருக்கும் திரைப்பட இசை மீதான கண்டனம் என்றே கொள்ள வேண்டும். மேலும் வேதியர் நந்தனைப் பார்த்து, 'பரம்பரை பரம் பரையாய் சாமியைப் பாதுகாத்து வரும் நாங்கள் சாமியை மறந்து வருகிறோம். நீசப் பயல்களுக்கு என்னடா சாமி வேண்டியிருக்கு?' (ந.ஆ.க., ப. 30) என்று கூறுவதும் தற்காலத்தில் பிராமணர்களில் பலர் நம்பிக்கையற்றவராக இருக்கும் நிலைமை மீதான கிண்டல் என்றே கருத வேண்டும். இவ்வாறு பல தற்காலக் கருத்துக்களை கதை நெடுகிலும் ஆங்காங்கே ஆசிரியர் அமைத்திருப்பது அவருடைய பகுத்தறிவுவாத நம்பிக்கையைப் புலப்படுத்துகிறது. நந்தனார் ஆராய்ச்சிக் கதையும் இந்திரா பார்த்தசாரதியின் நந்தன் கதை நாடகமும் ஏறக்குறைய ஒரே காலத்தின் என்று முன்னர் குறிப்பிடப்பட்டுள்ளன. இரண்டுமே பகுத்தறிவுக் கண்ணோட்டத்தில் படைக்கப்பட்டன. இந்திரா பார்த்தசாரதி நந்தனார் சரித்திரக் கீர்த்தனையில் குறிப்பிட்டுள்ள அற்புத நிகழ்ச்சிகளை நிகழ்ந்தனவாகவே கொண்டு அவை இறைவன் அருளால் ஏற்பட்ட அற்புதங்கள் அல்ல, மாறாக வேதியரின் சூழ்ச்சிகளே என்பதாகப் படைத்துள்ளார். வில்லுப்பாட்டு ஆசிரியர் அற்புதங்களையும் சூழ்ச்சிகளையும் விலக்கி சாதாரணமாக நிகழக்கூடியவையாகவே நிகழ்ச்சிகளை அமைத்துள்ளார். மேலும் இந்திரா பார்த்தசாரதியின் நந்தன் தன் மயக்கத்திற்குள்ளான நிலையில் செயல் படுகிறான். தீக்குள் தானாகவே செல்கிறான். வில்லுப்பாட்டு நந்தனார் விழிப்பு நிலையிலேயே செயற்படுகிறார். தீக்குழிக்குள் தள்ளப்படுகிறார். ஆசிரியரின் பகுத்தறிவுக் கண்ணோட்டம் நாடக ஆசிரியருடையதைவிட மேலானதாக உள்ளது.

நந்தனார் சரித்திரக் கீர்த்தனையிலும் நந்தன் புதினத்திலும் நந்தன் கதை நாடகத்திலும் நந்தனாருக்கும் அவருடைய சாதியினரில் பெரும்பாலோருக்குமிடையே முரண்பாடுகள் நிலவுவதாகப் படைக்கப் பட்டுள்ளன. இவை நந்தனாருக்கு எதிராகத் தீவிரமாகத் செயற் படுமளவிற்கு கடுமையாக இருந்ததாகவும் படைக்கப்பட்டுள்ளது. ஆனால் இந்த வில்லுப்பாட்டில் சேரி மக்கள் பெரும்பாலோரும் நந்தனாரிடம் மிகவும் மரியாதை வைத்திருந்தனர். ஒரு சிலர் அவரைக் கேலி செய்தாலும் அவருக்கு எதிராகச் செயற்படவில்லை. நந்தனாரும்,

இகழ்ச்சி கண்டு கலங்கவில்லை எதிரிகளாய் எண்ண வில்லை
புகழ்ச்சி கண்டு மயங்கவில்லை... பொறுப்புடனே நடந்து
வந்தார்
(ந. ஆ. க., ப. 24)

என்று கூறியிருப்பதைக் காண முடிகிறது.

நாற்று நடவு வேலை செய்யாது நந்தனார் தில்லை சென்றதும், அந்த வேலையை அவருடைய நன்மையைக் கருதி மற்ற சேரி மக்கள் செய்து முடிக்கின்றனர். அவ்வளவு ஆழமான நட்பை நந்தனார் பெற்றிருந்தார். நந்தன் தீயில் தள்ளப்பட்டு இறந்தார் என்ற செய்தி கேட்டதும் சேரி மக்கள் ஆறாத் துயரம் கொள்கின்றனர். எல்லோரும் சேர்ந்து வேதியரிடம் முறையிடுகிறார்கள். வேதியரின் சமாதானத்தை ஏற்றுக்கொள்ள மனம் ஒப்பாது அழுதார்கள். வில்லுப்பாட்டு ஆசிரியர் இங்கே சோகத்தின் உச்சிக்கு நம்மை இட்டுச்செல்கிறார்.

அய்யய்யோ கொன்று விட்டார் அநியாயமாய்க்
கொன்றுவிட்டார்
நயவஞ்சகர் கூடிப்பேசி நந்தனாரைக் கொன்றுவிட்டார்.
தில்லையினைக் காணச்சென்ற நல்லவனைக்
கொன்றுவிட்டார்

.....................................

எங்கள் குலச் சுடரதனை ஏழைகுல விளக்கதனை
மங்காத ஒளிவிளக்கை மாபாவிகள் அணைத்து விட்டார்;
கீழ்ச்சாதிக் காரனென்று கேட்கநாதி யில்லையென்று
கூழ்குடிக்கும் ஏழையென்று கூசாமலே கொன்று விட்டார்
உழைக்காமலே பிழைத்து வரும் உலுத்தர்கள் கூடிநின்று
உழைக்கும் சாதி நந்தனாரை ஓர்கணத்தில்
கொன்றுவிட்டார்
ஏனோ இங்கே பேதங்களோ எங்கள் உயிர் கேவலமோ
மானமுடன் நாங்களுமே மனிதராக வாழ்வதெப்போ?
(ந. ஆ. க., ப. 41)

இவ்வாறு நந்தனாரை அவருடைய மக்களால் மதிக்கப்பட்ட ஒருவராகச் சித்தரித்திருப்பது இந்த வில்லிசைப் பாடலின் சிறப்பாகும்.

இந்த வில்லுப்பாட்டில் தாழ்த்தப்பட்ட சாதியினருக்கும் மேற் சாதியினருக்குமிடையேயான முரண்பாட்டின் இரு கூறுகளான சாதியடிப்படை உயர்வு தாழ்வும் வர்க்க அடிப்படை சுரண்டுவோர் உழைப்போர் பிரிவும் இரண்டுமே வலியுறுத்தப்படுகின்றன.

புலையரென்றும் நீசரென்றும் வேதியரால் தாழ்த்தப்பட்ட உழைத்து வாழும் சாதியிலே அந்த உத்தமனும் பிறந்தாரையா (ந. ஆ. க., ப. 12) என்றும்,

> ஆண்டவன் பேரைச் சொல்லி தண்டமாக உடல்வளர்ப்போர்
> தீண்டாதார் என்று சொல்லி ஆதிதிராவிடரை தாழ்த்தி வைத்தார்
> தழைக்கின்ற தருக்கர்களும் தண்டச்சோற்றுத் தடியர்களும்
> உழைக்கின்ற உழவர்களை ஒதுக்கியே வைத்து விட்டார்
> (ந. ஆ. க., ப. 13)

என்றும்,

> புலையர்களின் உழைப்பினிலே புஞ்சையுடன் நஞ்சையுமாய்
> விலையுயர்ந்த நிலமதனை வேதியரும் வாங்கி விட்டார்
> (ந. ஆ. க., ப. 13)

என்றும்,

நந்தனாரைத் தில்லையில் கண்ட ஆண்டைக்கு தன் நிலத்தைத் தரிசாகப் போட்டு விட்டு வந்து விட்டானே என்ற கோபமே மிகுந்திருந்தது என்றும் பலவாறு சாதி - வர்க்க முரண்பாடுகள் இணைந்திருப்பது சுட்டிக்காட்டப்பட்டுள்ளது. ஆனால் வேதியரல்லாத வேற்றுச்சாதி நில உடைமையாளரைக் காட்டாததால் வர்க்க முரண்பாடு சற்று தணிந்தே வலியுறுத்தப்படுத்தப்படுகிறது எனலாம்.

படைப்பாசிரியரும் ஆய்வுரையாளரும் சைவ சமயத்தினர் வைதிகத்துக்கு ஆளானமையின் விளைவாகவே நந்தன் எரிப்பு நிகழ்ந்திருக்க வேண்டும் என்று கூறியிருக்கிறபோதிலும் வில்லுப் பாட்டில் இதற்கான அகச்சான்றுகள் தென்படும்படியாக நிகழ்ச்சிகளோ பாத்திரங்களோ அமைக்காதது ஒரு குறையென்றே கருத வேண்டும். இது சமயம் நந்தன் என்ற புதினத்தில் வேதியர்களிடையே நிலவிய கருத்து வேறுமைகளைப் புலப்படுத்த பல புதிய கதைமாந்தர்கள் சேர்க்கப்பட்டிருந்தது ஒப்பு நோக்கத்தக்கது.

எனவே இவ் வில்லுப்பாட்டுக் கதையால் தூய சைவ சமய மறுமலர்ச்சிக்கான உணர்வை விட நாத்திகம் பேசிடும் பகுத்தறிவுவாத உணர்வே விஞ்சி நிற்பதைக் காண முடிகிறது.

## அடிக்குறிப்புகள்

1. எம். சி. செயப்பிரகாசம், நந்தனார் ஆராய்ச்சிக் கதை, மம்சாபுரம், அறிவுப் பாசறை, 1984, ப. 42.

2. பெ. தங்கராஜ், முதுகுளத்தூர் முதல், சென்னை : புரட்சிக் கனல் வெளியீடு, 1983, பக், 122 - 123.

திருநெல்வேலி மாவட்டத்தில் 1982 துவக்கத்தில் மீனாட்சி புரம் என்ற ஆதி திராவிடர் குடியிருப்பிலுள்ள அனைவரும் இஸ்லாம் சமயத்தில் சேர்ந்தனர். ஊரின் பெயரை ரஹ்மத் நகர் என மாற்றினர். இந்நிகழ்ச்சியால் அதிர்ச்சியடைந்த இந்து சமயத் தலைவர்கள் மீண்டும் இந்து மதத்திற்கு மத மாற்றம் செய்ய முயன்றனர். இதையடுத்து அம் மாவட்டத்தில் பல இடங்களில் சாதிக் கலவரங்கள் ஏற் பட்டன.

# முடிவுரை

சமூகத்தில் நிலவும் முரண்பாடுகளை உணர்த்தி அவற்றுக்குத் தீர்வு காணும் வகையில் மக்களைச் செயற்படத் தூண்டுவதே இலக்கியம் படைப்பதின் நோக்கமாக இருக்க வேண்டும் என்பது இருபதாம் நூற்றாண்டின் சிறந்த இலக்கியவாதிகளில் பெரும்பாலாரால் ஏற்றுக் கொள்ளப்பட்ட ஒரு கோட்பாடாகும். இந்நோக்கம் சிறப்புற நிறைவேறுவதற்கு மக்களின் அடிமனத்தில் இடம் பெற்றுவிட்ட பழங்கதைகளை நினைவுபடுத்தும் வகையில் அவற்றுக்குப் புது மெருகூட்டி காலத்தேவைக்கேற்ப சில மாற்றங்கள் செய்து இலக்கியப் படைப்பை அமைப்பது ஒரு சிறந்த இலக்கிய உத்தியாகக் கருதப்படுகிறது.

இவ்வகையில் தமிழ்ச் சமுதாயத்தில் நிலவும் சாதிக் கொடுமையைப் பற்றி இலக்கியம் படைக்க முற்படும்பொழுது, நந்தன் கதையை அடிப்படையாகக் கொள்வது ஒரு மரபாக இருந்து வருகிறது. இருபதாம் நூற்றாண்டின் பல்வேறு கால கட்டங்களில் பல்வேறுபட்ட அரசியல் சமூக சிந்தனைகள் மேலோங்கியிருந்துள்ளன. ஒவ்வொரு கால கட்டத்திலும் நந்தன் கதை அக்காலத் தேவைக்கு ஏற்ப மாற்றி அமைக்கப்பட்டு இலக்கியப் படைப்பாக வெளிவந்துள்ளது. இவ்வாறு வந்தவற்றுள் ஆறு படைப்புகள் இந்நூலில் ஆய்வுக்கு எடுத்துக் கொள்ளப்பட்டுள்ளன.

இருபதாம் நூற்றாண்டின் துவக்கத்தில் தேசிய இயக்கம் பெரும் எழுச்சி கண்டது. ஆனால் விரைவில் ஒடுக்கப்பட்டது. இந்து சமயத்தினரிடம் நிலவிய சாதிப் பிரிவினையும். முக்கியமாக மிகவும் தாழ்த்தப்பட்ட சாதியினரைத் தீண்டத்தகாதவர்களாகக் கருதி ஒதுக்கி வைப்பதுமே, தேசிய இயக்கம் தமிழகத்தில் வளரத் தடைகளாக உள்ளன என்பதை உணர்ந்த தலைவர்கள் இத்தீமைகளுக்கு எதிராகப் பிரசாரம் மேற்கொண்டனர். இவர்களில் பலர் பிராமணர்கள். இவர்கள் வைதீகப்பற்று மிக்க பிராமணர்களின் எதிர்ப்பைச் சந்திக்க வேண்டி வந்தது. மற்றொரு புறம் பிராமணரல்லாதார் இயக்கம் தோன்றி தேசிய இயக்கத்துக்கு எதிர்ச் சக்தியாக வளர்ந்து வரலாயிற்று.

மேற்சாதியினரிடையே நில்விய இம்முரண்பாடுகளையும் மேனிலையாக்க முயற்சி தாழ்த்தப்பட்டோரிடையே எதிர்கொள்ளும் எதிர்ப்பையும் ''நந்தன்'' என்கிற புதினத்தைப் படைத்த ஆசிரியர்கள் பழைய நந்தன் கதையில் புதிய கதை மாந்தரைப் புகுத்தியும் பல்வகைக் கருத்துகள் இடம்பெறும் உரையாடல்களை அமைத்தும் படம் பிடித்துக் காட்டியுள்ளனர். சமய அடிப்படையிலான சாதி முரண்பாடுகளும் பொருளாதார அடிப்படையிலான வர்க்க முரண்பாடுகளும் ஒன்றோடொன்று பின்னிக் கிடப்பன என்பதையும் மூப்பனின் உரையாடல் வாயிலாக வெளிப்படுத்தியுள்ளனர். எனினும் கதையின் போக்கிலும் முடிவிலும் எந்த மாற்றமும் செய்யவில்லை. ஆசிரியர் காலத்தில் இயங்கிய தாழ்த்தப்பட்டோர் இயக்கங்களின் பாதிப்பு நந்தன் பாத்திர வடிப்பில் புலனாகவில்லை. மேனிலையாக்க இயக்கங்களின் சில கூறுகளை வரவேற்றுப் புதினத்தில் புகுத்திய ஆசிரியர்கள் மேற்சாதிகளுடன் இப்புவி வாழ்வில் முழுச் சமநிலை கோரும் மேனிலையாக்க இயக்கத்தின் பிரதிநிதியாக நந்தனைப் படைக்கத் தவறினர்.

1930களில் தமிழகத்தில் தந்தை பெரியாரின் தலைமையில் சுயமரியாதை இயக்கமும் அண்ணல் காந்தியின் தலைமையில் தீண்டாமை ஒழிப்பு இயக்கமும் வைதீகக் கருத்துகளுக்கு எதிராக செயற்பட்டு வந்தன. நாத்திகம் போற்றிய சுயமரியாதை இயக்கம் கிறித்துவ சமயத்தைக் கண்டித்தது; கிறித்துவ மதத்தைத் தழுவுவதால் சாதிக் கொடுமையிலிருந்து விடுதலை கிடைக்காது என்று சுட்டிக் காட்டியது; நாத்திக நெறியே விடுதலைக்கு வழியென்று வலியுறுத்தியது. நாத்திகம், காந்தீயம், வைதீகம் ஆகிய மூன்று போக்குகளையும் விமரிசனம் செய்யும் வகையில் புதுமைப்பித்தன் ''புதிய நந்தன்'' சிறுகதையைப் படைத்துள்ளார். தாழ்த்தப்பட்ட சாதியை விடுவிப்பதற்குச் சுயமரியாதை இயக்கமும் காந்தீய இயக்கமும் ஒன்று சேர்ந்து இயங்க வேண்டும் என்ற தம் தாபத்தை, இவற்றைப் பிரதிநிதித்துவப் படுத்திய கதை மாந்தர்கள் ஒன்றாக விபத்தில் இறந்து மூவருடைய இரத்தமும் ஒன்றாகக் கலப்பதாகக் கதையை முடிப்பதன் மூலம் வெளிப்படுத்தியுள்ளார்.

புதுமைப்பித்தனின் கதை பழைய நந்தன் கதையிலிருந்து முற்றிலும் வேறுபட்டது. கதை மாந்தர்கள் புதுமைப்பித்தன் காலத்தவர்; பெயர்களும் பழைய கதையில் வராதவை. கதை நிகழும் களன் நந்தன் வாழ்ந்த ஆதனூர் என்பதாலும் பாவாடையெனும் கதை மாந்தன் மேற்சாதியுடன் சமநிலை அடையும் முயற்சியில் ஈடுபடுவதாகக் காட்டப்படுவதாலும் தாழ்த்தப்பட்டோரின் விடுதலை என்பது கதைக் கருத்தாக அமைந்திருப்பதாலும் நந்தன் கதையை நினைவுறுத்தும் வகையில் ஆசிரியர் கூற்றுகள் ஆங்காங்கு இடம் பெற்றிருப்

பதாலும் புதுமைப்பித்தனின் சிறுகதை அந்தப் பழங்கதையின் தாக்கத்தால் உருவானது என்பது தெளிவு.

1947-ல் இந்தியா விடுதலை பெற்றதும் நாட்டு மக்களிடையே தம் சிக்கல்கள் எல்லாவற்றுக்கும் விடிவு வந்துவிட்டது, ''பறையருக்கும் இங்கு தீயர் புலையருக்கும் விடுதலை...திறமை கொண்ட தீமையற்ற தொழில் புரிந்து யாவரும் தேர்ந்த கல்வி ஞானம் எய்தி வாழ்வம் இந்த நாட்டிலே'' என்ற பாரதியின் வாக்கு மெய்யாகும் காலம் வந்துவிட்டது என்ற நம்பிக்கை மேலோங்கி நின்றது. தாழ்த்தப்பட்டவர்கள் கல்வியறிவு பெற்று உயர் பதவிகள் பெற்று மேற்சாதியினருடன் சம நிலை அடைவார்கள் என்று பலரும் நம்பினர்.

தமிழ்த் திரையுலகில் தலைசிறந்த நகைச்சுவை நடிகராகவும் காந்தி, பெரியார் ஆகிய இருவரிடமும் பற்றுமிக்கவராகவும் விளங்கிய கலைவாணர் என். எஸ். கிருஷ்ணன் அக்காலத்து நம்பிக்கையின் வெளிப்பாடாக ''கிந்தன் சரித்திரம்'' என்ற கதா காலாட்சேப நிகழ்ச்சி நடத்தி வந்தார். நந்தன் பிறந்த ஊரிலேயே பிறந்த கிந்தன் சிவனை நாடிச் சிதம்பரம் போகாமல் கல்வியை நாடிச் சென்னை செல்கிறான் என்றும் அங்கு கல்வி கற்று உயர் பதவி பெற்று மீண்டும் ஊர் திரும்பியதும் அவனை மேற்சாதி ஆசிரியரே கட்டித் தழுவிக் கொண்டார் என்றும் நந்தன் கதையை மாற்றி அமைத்துள்ளார். கல்வி மூலம் சமத்துவம் அடைய முடியும் என்ற கருத்தை வலியுறுத்துகிறார். ஆனால் நந்தனுக்கு ஏற்பட்ட அளவு கிந்தனுக்கு எதிர்ப்புகளும் தடைகளும் வலுவுடையனவாகக் காட்டப்படவில்லை. அன்று ஓங்கியிருந்த மிகை நம்பிக்கையின் பிரதிபலிப்பைக் 'கிந்தன் சரித்திரத்தில்' காண முடிகிறது.

இந்த நம்பிக்கை பிறந்து இருபது ஆண்டுகளுக்குப் பின் கீழ வெண்மணி அரிசன எரிப்பு நிகழ்ச்சி நடந்தது. பிராமணரல்லாத மேற்சாதி நிலவுடைமையாளர் தங்களிடம் விவசாயத் தொழிலாளிகளாக வேலை செய்து வந்த தாழ்த்தப்பட்ட சாதியினரின் குடும்பத்தினரை அவர்கள் தங்கள் பொருளாதார உரிமைகளுக்காகப் போராடினர் என்பதற்காகக் குடிசைகளுக்குத் தீவைத்துக் கொன்றனர். நந்தன் கதை மீண்டும் தமிழ் இலக்கியத்தில் பொருளுடையதாயிற்று. இந்திரா பார்த்தசாரதி ''நந்தன் கதை'' நாடகத்தைப் படைத்தார். வர்க்கப் போராட்டம் என்பதைச் சுட்டிக் காட்ட பிராமணரல்லாத நிலவுடைமையாளர்களையும் கதை மாந்தராகச் சேர்த்தார். ஒடுக்கப்பட்ட மக்களுடைய தலைவனைத் தனிமைப்படுத்தி அழிக்க ஆளும் வர்க்கங்கள் கையாளும் சூழ்ச்சிகளை விளக்கும் வகையில் நந்தன் சரித்திர நிகழ்ச்சிகளை அற்புதங்களாக அல்லாது மேற்சாதியினரின் சூழ்ச்சிகளாகக் காட்டினார். நந்தனை ஒரு மேனிலையாக்கத்

தலைவனாகச் சித்தரிக்க முயன்றார். ஆனால் அழகியல் உணர்வின் அடிப்படையில் நந்தன் இயங்குவதாக நாடகத்தை அமைத்ததனாலும், அக்கால கட்டத்தில் தம்முள் ஒன்றுபட்டு தாழ்த்தப்பட்ட சாதி விவசாயத் தொழிலாளிகள் போராட்டம் நடத்தி வந்ததைக் காட்டாது அவர்களை எளிதில் ஏமாறும் தன்மையினராகக் காட்டியதாலும் நந்தன் கதையைக் காலத்தேவைக்கு ஏற்பப் போதிய அளவு மாற்றி அமைக்க நாடகாசிரியர் தவறிவிட்டார் என்றே கூற வேண்டும்.

தமிழகத்தில் நிலவியது போல், ஈழத்திலும் சாதிக்கொடுமை காலம் காலமாக நிலவி வந்துள்ளது. பெருநில உடைமையாளராகவும் அரசு அதிகாரிகளாகவும் ஆதிக்கம் செலுத்தி வந்த உயர்சாதியின ராகிய வேளாளருக்கும் சமுதாயத்தின் அடித்தளத்தில் இருந்த பஞ்சமர்களுக்குமிடையே வர்க்க அடிப்படையிலும் சாதியடிப்படை யிலும் முரண்பாடுகள் கடுமையாகி வந்தன. 1960களின் பிற்பகுதியில் ஆலயப்பிரவேசப் போராட்டம் தீவிரமடைந்தது. கடுமையான எதிர்ப்பைச் சந்தித்தது. உயர்சாதியினரின் இந்த எதிர்ப்பைத் தணிக்கும் முயற்சியாக நந்தன் கதை பயன்பட்டது. ஈழத்துக் கவிஞர் முருகையன் ''கோபுர வாசல்' எனும் தன் கவிதை நாடகத்தில் நந்தனுடைய மேன்மையை விளக்கும் வகையில் புதிய பாத்திரங்களைச் சேர்த்தும், நந்தன் தீக்குளிக்காது தன் ஆன்மீக ஒளியில் அருட்கனலில் தூய்மை பெற்று இறைவனைச் சேர்ந்தான் என்று முடிவை மாற்றியும் பிற்சேர்க்கையாகச் சமகாலத்து ஆலயப்பிரவேசப் போராட்டக் காட்சியை இணைத்தும் நாடகத்தைச் சமகாலத்து நிகழ்ச்சிகளுடன் இயைபுபடுத்த முயன்றுள்ளார். ஆனால் வெறும் சமயப் பிரச்சினை யாகக் குறுக்கியதனால் காலத் தேவையைச் சரிவர நிறைவு செய்ய இயலாது போயிற்று.

பொருளாதார அடிப்படையில் உருவாகும் வர்க்க முரண்பாடு களைவிடப் பண்பாட்டு அடிப்படையில் உருவாகும் முரண்பாடுகள் மேலோங்கும்பொழுது, மதமாற்றத்தின் மூலம் விடுதலையையும் சமத் துவத்தையும் பெற முயலும் போக்கை எதிர்கொள்ள வேண்டிய நிலைமை தமிழ்நாட்டில் திரும்பத் திரும்ப உருவாவதைக் காணலாம். எண்பதுகளின் துவக்கத்தில் தமிழகத்தின் தென்மாவட்டங்களில் தலை தூக்கிய இம்மதமாற்றப் பேயக்கு வகுப்புக் கலவரங்களுக்குக் காரண மாயிற்று. இந்து சமயத்தைக் காக்க விரும்பிய சைவ சமயப் பற்று மிக்க சிலர் தீண்டாமையை ஒழித்து சாதி ஒற்றுமையை நிலைநாட்ட விரும்பினர். தீண்டாமைக்குச் சைவ சமயத்தில் இடமில்லை என்றும் அது இடைக்காலத்தில் புகுந்த பெருங்கேடு என்றும் கருதிய இவர்கள் ''நந்தன் ஆராய்ச்சி கதை" எனும் வில்லுப்பாட்டு நிகழ்ச்சியை ஊர் தோறும் நடத்தி வந்நனர். நந்நன் சரித்திரத்தில் உள்ள நிகழ்ச்சி

களின் அற்புதத் தன்மையை நீக்கி, அதேசமயம் இந்திரா பார்த்த-சாரதியைப் போல் வலிந்து சூழ்ச்சிகளைப் புகுத்தாது, பகுத்தறிவுக்கு ஏற்புடையவாறு மாற்றி அமைத்துள்ளனர். தன் குலத்தினரால் மதிக்கப்பட்டவனாக நந்தனைச் சித்தரித்துள்ளார். வேதியர்கள் அவனைத் தீயில் தள்ளுவதாக முடித்திருப்பதும் தற்காலக் கருத்துக்கு ஒத்ததாகவுள்ளது. சைவ சமய வளர்ச்சிக்காக இயற்றப்பட்ட இவ் வில்லுப்பாட்டில் நாத்திகம் பேசிடும் பகுத்தறிவுவாத உணர்வே விஞ்சி நிற்கிறது.

இவ்வாறு இருபதாம் நூற்றாண்டுத் தமிழ் இலக்கியத்தில் நந்தன் கதை பல்வேறு கால கட்டங்களில் அவ்வக்காலத்தில் மேலோங்கி நின்ற கண்ணோட்டத்தில் ஓரளவு அவ்வக்கால அரசியல் சமூக முரண் பாடுகளைப் புலப்படுத்தும் வகையில் மாற்றி எழுதப்பட்டிருக்கின்றது, எழுதப்பட்டும் வருகிறது. இந்த நூலில் ஆய்வு செய்யப்படாத வேறு பல படைப்புகளையும், குறிப்பாக எண்பதுகளில் வெளிவந்தவற்றை, இந்நூலில் மேற்கொண்டுள்ள அணுகுமுறையில் ஆய்வு செய்வதால் சமூக இயக்கங்களுக்கும் சிந்தனைப் போக்குகளுக்கும் இசைந்தவாறு, தொன்மப் படிமங்களைத் தமிழ் இலக்கியத்தில் கையாளும் முறை பற்றி ஒரு பயனுடைய முழுமையான அறிதலுக்கு வழிகோல முடியும் என நம்புகிறோம்.

# துணைநூற் பட்டியல்


அம்பேத்கார், பி. ஆர்., சாதியை ஒழிக்க வழி, ஈரோடு : குடியரசு பதிப்பகம், நான்காம் பதிப்பு, 1971.

அருமைநாயகம், 'யாழ்ப்பாணத்தில் ஏற்பட்ட சமூக சீர்திருத்தம், 1900 - 1957 : சில அம்சங்கள், சென்னை, பாலம் மாத டிசம்பர் 86, ஜனவரி 87

ஆசார்யா, பி. ஸ்ரீ., நந்தனாரும் திருப்பாணாழ்வாரும், சென்னை : ஸ்டார் பிரசுரம், மூன்றாம் பதிப்பு, 1986.

ஆனந்தன், கு. சா., திராவிட இயக்கங்களின் பார்வையில் இந்து சமயம், சென்னை : உரத்த சிந்தனை வெளியீடு, 1982.

இந்திரா பார்த்தசாரதி, ஔரங்சீப், சென்னை : தமிழ்ப் புத்தகாலயம், இரண்டாம் பதிப்பு, 1978.

இராமசாமி, ஆழ். வே., இசை வளர்த்த தியாகராஜர், வேதாரண்யம் : கஸ்தூர்பா காந்தி கன்யா குருகுலம் வெளியீடு, 1982.

இராதாராஜன், வி. வெண்மணி, சென்னை : பட்டாளிகள் வெளியீடு, 1978.

கருணாநிதி, மு., 'ஒரே இரத்தம்' தொடர்கதை, 'குங்குமம், 11. 2. 79 முதல் 23 இதழ்கள்.

கேசவன், கோ., — பள்ளு இலக்கியம் : ஒரு சமூகவியல் பார்வை, சிவகங்கை : அன்னம், 1981.

கோபாலகிருஷ்ண பாரதியார், — திருநாளைப் போவார் என்னும் நந்தனார் சரித்திரக் கீர்த்தனை, சென்னை : லாங்மன்ஸ், கிரீன், 1915.

கோபாலசாமி ஐயங்கார், ஆ., ஆராவமுத அய்யங்கார், கா., — நந்தன், சென்னை : ஸ்ரீநிவாச வரதாச்சாரி வகையார் (பிங்கள) 1917.

கைலாசபதி, கை., — அடியும் முடியும், சென்னை : பாரி நிலையம், 1970.

தமிழ் நாவல் இலக்கியம், சென்னை : நியூ செஞ்சுரி புக் ஹவுஸ், 2-ம் பதிப்பு, 1977.

''ஆக்கஇலக்கியமும் சமூகவியலும்'' ஆக்க இலக்கியமும் அறிவியலும் (ப-ர்), சண்முகதாஸ்,

இலக்கியச் சிந்தனைகள், கொழும்பு : விஜயலட்சுமி புத்தக சாலை, 1983.

சண்முகதாஸ், — ஆக்க இலக்கியமும் அறிவியலும், யாழ்ப்பாணம் : யாழ்ப்பாண வளாகத் தமிழ்த்துறை வெளியீடு, 1977.

சிவத்தம்பி, கா., — ஈழத்தில் தமிழ் இலக்கியம், சென்னை : தமிழ்ப் புத்தகாலயம், 1978.

தமிழில் சிறுகதையின் தோற்றமும் வளர்ச்சியும், சென்னை : தமிழ்ப் புத்தகாலயம், 3-ம் பதிப்பு, 1980.

இலக்கியமும் கருத்து நிலையும், சென்னை : தமிழ்ப் புத்தகாலயம், 1982.

''தற்காலத் தமிழிலக்கியத்தில் வறுமையும் சாதீயமும்'', தற்காலத் தமிழ் இலக்கியத்தில் வறுமையும் சாதீயமும், எம். பி. ராஜ குமார் (ப-ர்), 1982.

சுப்பிரமணிய பாரதியார், கட்டுரைகள் (தொகுப்பு), சென்னை : பூம்புகார் பிரசுரம், 1977.

சுப்பிரமணிய முதலியார், வெ. ப., அகலிகை வெண்பா, திருநெல்நெலி சைவ சித்தாந்தக் கழகம் 1938.

செயப்பிரகாசம், நந்தனார் ஆராய்ச்சிக்கதை, மம்சாபுரம் : அறிவுப் பாசறை, 1984.

சேக்கிழார், பெரியபுராணம், திரு. சி. கே. சுப்பிரமணிய முதலியார் (பதிப்பாசிரியர்), கோவை.

ஞானசம்பந்தம், அ. ச., 'திருநாளைப்போவார் தீக்குளித்தது ஏன்?', கல்கி தீபாவளி மலர், 1969.

டானியல், கே., பஞ்சமர், தஞ்சாவூர், பிரகாஷ் வெளியீடு 1982, பிற்சேர்க்கை பக். 420 - 424.

தங்கராஜ், பெ., முதுகுளத்தூர் முதல்... கொடுமைகளின் வரலாறு, சென்னை : புரட்சிக்கனல் வெளியீடு, 1983.

தமிழன்பன், அந்த நந்தனை எரிச்ச நெருப்பின் மிச்சம், சென்னை : பூம்புகார் பிரசுரம், 1982.

நடராசன், தி. சு., ''இந்திரா பார்த்தசாரதியின் படைப்புக்கள்'', ஆராய்ச்சி மலர் 3 இதழ் 1 (ஆண்டு குறிப்பிடப்படவில்லை).

நாராயணன், அறந்தை, தமிழ் சினிமாவின் கதை, சென்னை : நியூ செஞ்சுரி புக் ஹவுஸ், 1981.

நுஃமான், எம். ஏ., திறனாய்வுக் கட்டுரைகள் சிவகங்கை : அன்னம், 1985.

புதுமைப்பித்தன், ஆண்மை, சென்னை : ஸ்டார் பிரசுரம், 3ம் பதிப்பு, 1956.

பிச்சமுத்து, ந., இலக்கிய இயக்கங்கள், சென்னை: சக்தி வெளியீடு, 1980.

திறனாய்வும் தமிழ் இலக்கியக் கொள்கைகளும், சென்னை : சக்தி வெளியீடு, 1983.

பொதியவெற்பன், வே. மு., புதுமைப்பித்தன் கதைகள், பாளையங்கோட்டை : கதிரவன் பதிப்பகம், 1976.

இலங்கையிலிருந்து ஓர் இலக்கியக் குரல்

பொதியவெற்பன், வே.மு., வளவன், மா., (தொகுப்பாசிரியர்), கே. டானியல், அல்லி நகரம் : பாவல் பதிப்பகம், 1983.

மணி, பெ. சு., பாரதியாரும் சமூக சீர்திருத்தமும், சென்னை : திருமகள் நிலையம், 1980.

முத்துச்சண்முகம், தமிழ் இலக்கியக் கோட்பாடுகள், மதுரை : சர்வோதய இலக்கியப் பண்ணை, 1976.

முத்தையா, கே., தமிழ் இலக்கியங்கள் கூறும் வர்க்க சமுதாயம், சென்னை : சிகரம் வெளியீடு, 2ம் பதிப்பு, 1981.

முருகரத்தினம், தி., புதுமைப்பித்தன் சிறுகதைக்கலை, மதுரை : சர்வோதய இலக்கியப் பண்ணை, 1976.

முருகையன், இ., கோபுரவாசல், கொழும்பு : 1969.

ராஜ்குமார், எம். பி. (பதிப்பாசிரியர்), தற்காலத் தமிழ் இலக்கியத்தில் வறுமையும் சாதீயமும், சென்னை: கிறிஸ்துவ இலக்கிய சங்கம், 1982.

| | |
|---|---|
| ராஜம் கிருஷ்ணன், | பாஞ்சாலி சபதம் பாடிய பாரதி, சென்னை : பாரி புத்தகப் பண்ணை, 1983. |
| வானமாமலை, நா., | 'முன்னுரை', தி. சு. நடராசன் கட்டுரை, ஆராய்ச்சி மலர் 3 இதழ் 1. |
| விவேகானந்தர், சுவாமி, | புதிய இந்தியாவைப் படைப் போம், சென்னை : ராமகிருஷ்ண மடம், 1983. |
| | சிகாகோ சொற்பொழிவுகள், சென்னை ராமகிருஷ்ண மடம் 1985. |
| வீரையன், கோ., | விவசாய இயக்கத்தின் வீர வரலாறு, சென்னை : கார்க்கி நூலகம், 1981. |
| வேத சகாய குமார், எம்., | தமிழ்ச் சிறுகதை வரலாறு : முதற் பகுதி, சென்னை : ஆசிரியர், 1979. |
| வேதநாயகம் பிள்ளை, | பிரதாப முதலியார் சரித்திரம், சென்னை : சக்தி வெளியீடு, 1957. |
| ஜீவா, டொமினிக்., | தற்காலத் தமிழ்ச் சிறுகதைகளில் வறுமையும் சாதீயமும், (ப-ர்) எச். பி. ராஜ்குமார், 1982. |


## ஆங்கில நூல்கள், கட்டுரைகள்


| | |
|---|---|
| Baskaran, S. Theodor, | The Message Bearers, Madras : Cre-A, 1981. |
| Beteille, Andre, | Studies in Agrarian Social Structure, Delhi, Oxford University Press, 1974. |
| | Six Essays in Comparative Sociology, Delhi, Oxford University Press, 1974, rept. 1979. |

(ed.), Equality and Inequality, Delhi Oxford University Press 1983.

Bocharev, A., "Parable in Contemporary Seviet Prose" in Aesthetic and the Development of Literature, Moscow : U. S. S. R. Academy of Sciences, 1979.

Bodkin, Maud, Studies of Type Images in Poetry. Religion and Philosophy, London : Oxford University Press, 1934, rept. 1957.

Cox, Oliver, Caste, Class and Race, New York : Monthly Review Press, 1970.

Dumont, Louis, Homo Hierarchi cus, London Paladin, 1972.

Dutt, Rajani Palme, India Today, Calcutta : Manisha, 1979.

Frye, Northrop, Fables of Identity, Princeton : Princeton University Press, 1963.

Ghurye, G. S., Caste and Race in India, Bombay : Popular Prakashan, 1979.

Guha, Ranajit., Elementary Aspects of Peasant Insurgency in Colonial India, Delhi : Oxford University Press, 1983.

(ed.), Subaltern Studies Vol. III, Delhi : Oxford University Press, 1984.

Hardiman, David, "Adivasi Assertion in South Gujarat : The Devi Movement of 1922-23" in R. Guha (ed.)

Subaltern Studies III, Delhi, 1984.

Hiro, Dilip, — Black British, White British, New york : Monthly Review Press, 1973.

Jauss, Hans Robert, — Towards an Aesthetic of Reception, London : Har Vester Press, 1982.

Jha, Hetukar., — "Lower Caste Peasants and Upper Caste Zamindar in Bihar (1923 - 25) in Analysis of Sanskritisation and Contradic tions", Indian Economic and Social Historical Review vol. XIV, No. 4, October 1977.

Jung, C. G., — "Psychology and Literature" in David Lodge (ed.), 20th Century Literature Criticism, London : 1972.

Kettle, Arnold., — An Introduction to the English Novel, London : Hutchinson, 1953, rept, 1978.

Kuber, W. N.. — Dr. Ambedkar, New Delhi : Peoples Publishing House, 1973.

Kuppuswamy, B., — Social Change in India, 2nd edn., Delhi : Vikas Publishing House, 1981.

Lodge David, (ed.), — 20th Century Literary Criticism, London : Longman, 1972, rept. 1984.

Mukherjee, Ramakrishna, — Sociology of Indian Sociology, Bombay : Allied Publishers, 1979.

Paniker, Ayyappa, "Traditional Indian Theatre and Experimental Western Theatre", Journal of Arts and Ideas, No. 4 July - September 1983.

Rudich Norman (ed.), Weapons of Criticism: Marxism in America and the Literary Tradition, California: Ramparts Press, 1976.

Viswanathan, E. Sa., The Political Career of E. V. Ramasami Naicker, Madras: Ravi and Vasantha, 1983.

Willet, John, (ed.), Brecht on Theatre, The Development of an Aesthetic, London, Methuen, 1964, rept. Delhi: Radhakrishna, 1979.

## இதழ்கள்

### தமிழ்

ஆராய்ச்சி மலர் 3, இதழ் 1.

தீபாவளி மலர், 1969.

குங்குமம், 11. 2. 79 முதல் 23 இதழ்கள்.

பாலம்

### ஆங்கிலம்

Journal of Arts and Ideas, No. 4, July - Sept. 1983.

Indian Economic and Social Historical Review, vol. XIV. No. 4, October 1977.

## பின்னிணைப்பு

### கிந்தன் சரித்திரம்

(எழுத்து வடிவில் இது இல்லை. ஒலிப்பதிவு நாடாவிலிருந்து, எழுத்து வடிவத்தில் இங்கு கொடுக்கப்பட்டுள்ளது).

''கிந்தன் சரித்திரமே — கிண்டல் அல்லவே அல்ல''

(ஆதனூரிலே, ஆதி திராவிட வகுப்பிலே நம்ம கிந்தன் பிறந்தான்; சேரியில் பிறந்து வளர்ந்தது; அங்கு ஒரு பள்ளிக்கூடம்; அந்தப் பள்ளிக்கூடத்திலே படித்து வருகின்றான். கிந்தனுக்குப் பட்டணத்திலே போய் படிக்க வேண்டும்; உத்தியோகம் பெற வேண்டும் என்கிற ஆசை; தன்னுடைய சிநேகிதர்களையெல்லாம் அழைத்து அழைத்து அலுத்துப் போய் விட்டான்).

கிந்தன் : (உடனே) அடேயப்பா! பட்டணத்திற்கு வேண்டாம்; பக்கத்திலே இருக்கிற திரும்புன்கூர் வரைக்கும் என்னோட வாங்கோ! அங்கு போய் ''தரிசித்திடுவோம் வாரீர்''.

சிநேகிதர்கள் :

திருப்புன்கூரிலே போய் என்னப்பா தரிசிக்கிறது? போயும் போயும் அங்கொரு பிள்ளையார் கோயில் இருக்கு. அந்தப் பிள்ளையாருக்கும் தும்பிக்கை உடைஞ்சு போச்சு. இந்தத் தும்பிக்கை இல்லாதப் பிள்ளையாரைக் கும்பிடறதுக்கு இங்கேயிருந்து பத்து மைல் தூரம் போகணுமா! இங்கேயே கும்பிட்டுக்கிறலாமே!

(சிரிப்பு)

அப்படின்னு சொன்னார்கள்.

கிந்தன் : நான் பிள்ளையாரைப் பார்க்கறதுக்கு கூப்பிடலை. நம்மையெல்லாம் பட்டணத்துக்குக் கொண்டுபோய் சேர்க்கிறதே இரயிலு, அதைப் பார்க்கிறதுக்கு கூப்பிட்டேம்பா...

"அப்பிடின்னு சொன்னான் கிந்தன்." (உடனே எல்லாப் பையன்களும் ஒத்துக் கொண்டு கிந்தனோடவே நடந்தார்கள். நடந்து திருபுன்கூரிலே இரயில்வே ஸ்டேஷனை அடைந்தார்கள். இன்னும் இரயில் வரவில்லை; சரி உள்ளேயே போய் விடலாமே அப்படின்னு சொல்லி, எல்லாக் குழந்தைகளுமாக அங்கே பக்கத்திலே போனா, அங்கே வாசலிலே 'டிக்கட் கலெக்டர்' நிக்கிறார்).

டிக்கட்
கலெக்டர் : யாரடா நீங்க?

பசங்க : சாமி! நாங்க இரயிலைப் பார்க்க வந்திருக்கோம்.

டிக்கட்
கலெக்டர்: சரி, வெளியிலேயே நின்னு பாருங்களேன்.

பசங்க : இல்ல சாமி, உள்ள போறோம்.

டிக்கட்
கலெக்டர்: ம். ஹூம். முடியாது.
(அப்படி என்று சொன்ன உடனே, கிந்தனுக்கு வருத்தம் வந்து)

கிந்தன் : அடாடா, இரயிலைப் பார்க்க விடமாட்டான் போலிருக்கே!
"வழி மறைத்திருக்கிறான் மலைபோலவே டிக்கட் கலெக்டர் தடுத்து நிற்கிறான் புதுசூட்டும், ஹாட்டும் கோட்டும் போட்டு வழி மறைத்திருக்கிறான், மலை போலவே தடுத்து நிற்கிறான்".

(இப்படியாக நம்ம கிந்தன் கவலைப்பட்டுக் கொண்டிருக்கும் போதே வந்து விடுகிறது இரயில். பார்த்தான் இரயிலை, ஆனந்தம் தாங்க முடியவில்லை, என்ன செய்தான்!)

"கரகரவென சக்கரம் சுழல
கரும்புகையோடு வருகிற இரயிலே
கனதனவான்களும் ஏறிடும் இரயிலே
கன வேகத்தில் போகற இரயிலே
மறையவரோடு பள்ளும் பறையரை ஏற்றி
மத பேதத்தை ஒழித்திட்ட இரயிலே"

ஏ இ. யிலே! எத்தனையோ பெரிய பெரிய தலைவர்கள் எங்கள் தேசத்திலே தீண்டாமையை ஒழிக்க எவ்வளவோ

பாடுபட்டார்கள்; இன்னும் தீண்டாமை அறவே ஒழிந்த பாடில்லை. இப்பேர்பட்ட பெரும் அருமையான காரியத்தை, கஷ்டமான காரியத்தை, மனிதர்களாலே செய்ய முடியாத காரியத்தை, மரக்கட்டையாகிய நீ வந்த அன்றே செய்து விட்டாய்! சகல ஜாதியார் - ஒரே பெஞ்சில் ஒன்றாக உட்கார வைத்த பெருமை உன்னுடைய தல்லவா!)

''தேசம் தேசம் சுற்றி காட்டிடும் இரயிலே!
டிரிவேன்ரம் விட்டுப் புறப்படும் இரயிலே!"

(ஏ இரயிலே! காசி எங்கே? கன்னியாகுமரி எங்கே? சென்னை எங்கே? டெல்லி எங்கே? நினைத்த மாத்திரத்தில் சொற்ப செலவில் ஊர் ஊராக கொண்டு சேர்க்கிறாய். வியாபாரத்தை விருத்தி செய்தாய்; எங்கள்தேசத்திலே, எங்கள் முன்னோர்கள் நீ வருவதற்கு முன்பே காசிக்குப் போக எண்ணி, கட்டை வண்டியிலே, கட்டுச்சோறு கட்டிக் கொண்டு எட்டுப் பேராய் புறப்பட்டு போவார்கள்; திரும்பி வருவது இரண்டு; அதுவும் அநேகமாய் மாடு).

''தண்டவாளத்தின் மேலேயேறி
தாண்டவமாடும் ஆண்டவன் நீயே!".

(ஏ இரயிலே! உன்னை ஆண்டவனுக்கு சமானமாகக் கூட சொல்லலாம். எப்படி!ஆண்டவனுக்கு உள்ளவனிடத்திலும், இல்லாதவனிடத்திலும் ஒரே அன்புதான்; அதைப்போல நீ டிக்கட் உள்ளவனையும், இல்லாதவனையும் ஏத்திட்டுப் போற... இப்படி இர்யிலைப் பார்த்து இவன் ஆனந்தப் பட்டுக்கிட்டு இருந்ததும்).

சிநேகிதர்கள் :

அப்பா! இரயிலைப் பார்த்தாச்சு வா போகலாம் என்று கூட்டிக் கொண்டு போய் விட்டார்கள். (நம்ம நந்தனார் சரித்திரத்திலே ஒரு வேதியர் இருந்தாரே, அதைப் போல கிந்தனார் சரித்திரத்திலே ஒரு வாத்தியார் இருக்கிறார். அந்த வாத்தியார் வீட்டிற்கு வந்து சேர்ந்தான் கிந்தன்).

கிந்தன் : சார்...

வாத்தியார்

: யாரடா நீ?

கிந்தன் : நான்தானுங்க கிந்தன்! உங்ககிட்டே ஒரு விஷயம் சொல்ல வந்திருக்கேன்.

வாத்தியார் :
என்னடா விஷயம்? சொல்லு கேட்கிறேன்.

கிந்தன் : ''சென்னை என்றொரு தலம் இருக்குதாம்; அங்கே
சென்ற பேருக்கு செலவும் வரவும் அதிகமாகுதாம்;
போய்வரக் கொஞ்சம் பொருளைத் தாருமே
உங்கள் பூட்ஸ் காலை போற்றினேன்
இரு கண்ணால் பாருமே — ஐயே
சென்னை என்றொரு தலம் இருக்குதாம்.''

வாத்தியார் :
'பயமில்லாத கழுதே! என் எதிரே நில்லாதே, அதைச் சொல்லாதே மடப்பயலே நீ, பட்டணம் என்று சொல்லப் படுமோடா — நீ பட்டணம் என்று சொல்லப் படுமோடா சுகப்படுமோடா! சுகப்படுமோடோ! சுகப்படு மோடோ.

பட்டணமென்பதை விடு
பழைய சோற்றை சாப்பிடு — இந்தப்
பட்டிக்காட்டில் படித்திடு — நல்லப்
பையன் என்ற பேரெடுத்திடு
பட்டணம் என்று சொல்லப் படுமோடா
பட்டணம் என்று சொல்லப் படுமோடா''

பட்டணமாமில்ல பட்டணம், போயி சேரியிலே வேலை ஏதாவது இருந்தா பாருன்னு சொன்னார்.

(கிந்தன் வருத்தத்தோடு வீட்டுக்கு வந்தான் - தகப்பனார் மகனைப் பார்த்து)

தகப்பனார் :
அட மகனே! நீ பட்டணத்திலே போய் படிக்கணும்னு சொல்றியாமே ''நியாயம் தானா நீ சொல்லு! நல்ல
நாகரிகம் நம்ம ஜாதிக்கு அடுக்குமோ!
நியாயம் தானா நீ சொல்லு
காடுகரை உழுது நம்ம பொழைப்பு — அது
கடவுள் நமக்கு அளித்த அமைப்பு
கையில் ஏடு எழுத்தாணியுடன் படிப்பு
மெத்த ஏற்றமாம் ஜாதிக்காம் அந்த பொறுப்பு
நியாயம் தானா நீ சொல்லு''.

கிந்தன் : அப்பா! அப்படி சொல்ல வேண்டாம். படிச்சவங்களை தீண்டாதவங்கன்னு இந்த உலகம் சொல்றது கிடையாது. ஆகையினாலதான் பெரியவா சொல்லியிருக்கா

''கல்வியைப் போலொரு செல்வம் உளதோ
காண வேண்டும் ஜகத்தீரே''.

தகப்பனார் :

அட மகனே! அவ்வளவு தைரியம் இருந்தா போயிட்டு வாடான்னு சொன்னார்.

(இப்படி தகப்பனார் விடை கொடுத்த உடனே பட்டணத்திற்கு ஓடிப் போகிறான் கிந்தன். பட்டணத்தை அடைந்த கிந்தன், பல இடங்களைச் சுற்றி கடைசியில் சைனா பஜாருக்கு வந்து சேர்ந்தான். அங்கே ஒரு வண்டி. அதிலே கொஞ்சம் விளையாட்டு சாமான். இதையெல்லாம் வைச்சுக் கொண்டு)

''ஓரணா ஒன்றையணா, ஓரணா ஒன்றையணா
ஒன்றையணா ஒன்றையணா ஓரணா
சீப்புக் கண்ணாடி சிம்னி ரேசர்
சிகரெட்டுக் கேஸ் டப்பி ஓரணா
சோப்பு ஸ்னோ பவுடர் காப்பிக்கோப்பைத்தட்டு
சேஃப்டி-பின் டஜன் எட்டு ஒன்றையணா
இதெல்லாம் ஓரணா அதெல்லாம் ஒன்றையணா
ஒன்றையணா ஒன்றையணா ஓரணா''

(அங்கே அவங்கிட்டே போய் கேட்டான் கிந்தன்)

கிந்தன் : ஐயா! ஹைஸ்கூல் எங்கே இருக்கு?
(அவனுக்கு எங்கே தெரியும் ஹைஸ்கூலைப் பத்தி)
ஐயா! ஹைஸ்கூல் எங்கே இருக்கு?
ஐயா! ஹைஸ்கூல் எங்கே இருக்கு?
ஏ ஐயா! ஏஹஸ்கூல் எங்கே இருக்கு?
(அப்படின்னு கத்தினான் கிந்தன். இது ரிக்ஷாக் காரன் காதிலே உழுந்துடுத்து — விடுவானா?)

ரிக்ஷாக் காரன் : என்னா நைனா? ஹைஸ்கூலா? தெரியும் நைனா. (அப்படின்னு வண்டியை இஸ்த்துக்கினே ஓடி வந்துட்டான்).

மற்றொரு
ரிக்ஷாக்
காரன் : ஐயா வயக்கமாக என் வண்டியிலதான் ஏறுவாரு. (அப்படின்னு இன்னொருத்தன்; போடான்னு இன்னொருத்தன்; இப்படி பத்து பேர் வந்துட்டான். பத்து பேரும் வண்டியை இழுத்துக் கொண்டு வந்து நிற்கிறான். நடுவில கிந்தன் நிற்கிறான். கிந்தனுக்கு ஆனந்தம் தாங்க முடியவில்லை).

கிந்தன் : அடாடா! பட்டணத்திலே எவ்வளவு பெரிய தர்மம் நடக்குது. ஹைஸ்கூலுக்கு போகணும்னவுடனே என் வண்டியிலே ஏறு; உன் வண்டியிலே ஏறுன்னு...
(அப்படின்னு சொல்லி அங்க வந்திருந்ததிலே புது வண்டியாப் பாத்து ஏறி உக்காந்துக்கிட்டான்
அவனும் இஸ்துக்கினே போனான். ''இஸ்து!'' என்ன பாஷையோ தெரியலை. 'இழுத்து'-ன்னு சொன்னா அங்க புரியாது. அவாளுக்கின்னே தனி பாஷை இருக்கு).

ஒரு
ரிக்ஷாக்
காரன் : ஏய் என்னடா நேத்து உன்னை காணோம்!

ரிக்ஷாக்
காரன் : அது நைனா! பஸ் தண்ணிய எடுத்து மூஸ் கழுவிக்கினேன். அது ஜல்ப்பு புடிச்சிப் போச்சு நைனா -
...ன்னு சொன்னான்.

(யாருக்குத் தெரியும் அர்த்தம்? பச்சத் தண்ணியை எடுத்து முகத்தை அலம்பிக்கிட்டானாம்; ஜலதோஷம் புடிச்சி-டிச்சாம். ஜலதோஷம்கிறதை அப்படி அமுக்கி 'ஜல்ப்பு'ன்னு வைச்சிட்டான். இப்படியே இஸ்த்துக்கினே எங்க கொண்டு வந்தான்? காலேஜிலே கொண்டு வந்து வுட்டுட்டான்: சரின்னு கிந்தன் கீழே இறங்கி...)

கிந்தன் : அப்பா! நீயல்ல தியாகி! என்னா உபகாரம் பன்றே நீ உலகத்துக்கு? உனக்குப் பெரிய நமஸ்காரம் அப்படின்னான்.

ரிக்ஷாக்
காரன் : சரி நைனா! துட்டு?

கிந்தன் : துட்டா? ஐயையோ! அதை நான் பார்த்ததேயில்லை இன்னு சொன்னான்.

ரிக்ஷாக்காரன் : என்னய்யா? பெரிய மனுச மாதிரி வண்டியிலே ஏறிக்கினு வந்த. சட்டையையாவது கயட்டு!

(கிந்தன் சரி என்று சொல்லி சட்டையைக் கழட்டிக் கொடுத்தான். ரிக்ஷாக்காரன் போயிட்டான். இரண்டு நாட்களாக சுத்த ஜலத்தையும், வாயுவையும் அருந்திக் கொண்டு வாசலிலேயே இருக்கிறான் கிந்தன். மூன்றாம் நாள் அங்கே அந்த பிரின்ஸ்பால் வந்தார். இன்னாரென்று தெரிந்து கொண்ட கிந்தன் என்ன செய்தான்?)

''காலைப் பிடித்துக் கொண்டான் — தன்னைக்
காப்பாற்ற வேணுமென்றான் — மூலம் என்ற
மதயானைக்கு முன் வந்த
மாலுக்குநிகர் பிரின்ஸ்பாலை
தரையில் விழுந்து காலைப் பிடித்துக் கொண்டான்''

(அந்த பிரின்ஸ்பால் ரொம்ப இரக்கம் உள்ளவர். ஆகையினாலே, கிந்தனை தன் செலவிலேயே படிக்க வைத்தார். கிந்தனும்)

''படித்தானே! பலபல கலைகளை! கிந்தன் நல்ல
பள்ளி பிள்ளைகளோடு கள்ளம் கபடம்
இல்லாமல் படித்தானே
பலபல கலைகளை கிந்தன்
கொடுத்த கொஸ்சீன்களுக்கெல்லாம்
பாஸ்மார்க்காக எடுத்து ஸ்காலர்ஷிப்பிலே
மிக நேக்காய் படித்தானே பலப்பல கலைகளை
கிந்தன் வேகமாக உத்து வேகத்தில் மனது விரும்பி
படிப்பதினாலே பெற்றான். பரிசு ஜாக்ரபி, ஹிஸ்டரி,
தமிழும், இங்கிலீஸும் தக்கபடி மேத்தமாடிக்ஸ்,
ஸயன்சும் படித்தானே பலப்பல கலைகளை கிந்தன் -
நல்ல பள்ளிப் பிள்ளைகளோடு கள்ளம் கபடம்
இல்லாமல் படித்தானே.''

(நம்ம கிந்தன் பரீட்சைகளிலெல்லாம் தேறி பிரின்ஸ்பாலினுடைய உதவியினாலே ஸ்கூல் இன்ஸ்பெக்டர் உத்தியோகத்தையும் பெற்றான். தன்

ஊருக்குப் புறப்பட்டான். அங்கே இரயில்வே ஸ்டேஷனிலே வந்து காத்துக் கொண்டிருந்தார் அந்தப் பழைய வாத்தியார். கிந்தன் இரயிலிலிருந்து கீழே இறங்கிய உடனே வாத்தியார் அப்படியே அவனைக் கட்டித் தழுவிக் கொண்டார். கட்டித்தழுவி)

''கிந்தா! நீ இன்ட்டலிஜெண்ட் - உன்னை
கிண்டல் செய்தேன் அன்றோ! நான் ஒரு பித்தன்
கிந்தா! நீ இன்ட்டலிஜென்ட்''

(விலகிப் போடா! பக்கத்திலே வராதே என்று சொன்ன அதே வாத்தியார் படித்து உத்தியோகம் பெற்று வந்த கிந்தனை மார்போடு அணைத்து வரவேற்பு அளிக்கிறார். இதற்கு கல்வி அல்லவா காரணம்)

''கிந்தன் சரித்திரமே!
கிண்டல் அல்லவே அல்ல.''

# அகர நிரல்கள்

## பெயர் அகரநிரல்

## நூல்-இதழ் அகர நிரல்

# பொருள் அகர நிரல்

# பிழை திருத்தம்

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 2 | 23 | கலைஞர் | கலைவாணர் |
| 3 | 3 | Custav | Gustav |
| 16 | 30 | Rubert | Robert |
| 17 | 22 | P. 210 | PP. 91 - 99 |
| 18 | 10 | Gupta | Guha |
| 34 | 10 | மு. சிங்காரவேலு | ம. வெ. சிங்காரவேலு |
| 35 | 35 | என்றும் | எனினும் |
| 43 | 3 | அரிசன | தீண்டாமை |
| 62 | 21 | சூழ்நிலையில் | இழிநிலையில் |

பக்கம் 18. அடிக்குறிப்பு எண் 18க்குப் பிறகு சேர்க்காமல் விட்டுப் போனவை

19. கோபாலகிருஷ்ண பாரதியார், திருநாளைப் போவார் எனும் நந்தனார் சரித்திரக் கீர்த்தனை, சென்னை : லாங்மன்ஸ், 1915.
20. ஆ. வேலுப்பிள்ளை, தமிழ் இலக்கியத்தில் காலமும் கருத்தும், சென்னை : பாரி புத்தகப் பண்ணை, 1978, ப. 100
21. மே. நூ. பக். 124 - 125
22. கைலாசபதி, மு. கூ. நூ. ப. 273
23. கைலாசபதி, மு. கூ. நூ. ப. 276.

நூல் பற்றி...

பழங்கதைகள் மக்களின் அடிமனத்தில் இடம் பெற்றவை. மக்கள் தங்களுடைய தற்காலப் பிரச்சனைகளைப் பற்றி சிந்திக்கும்பொழுது, தம்மை அறியாமலே பழங்கதைகளை நினைவு கூர்கின்றனர். இலக்கியம் படைப்பவரும் சமகாலத்துத் தேவைக்கும் ஏற்றவாறு பழங்கதைகளுக்குப் புதுமெருகூட்டியும் மாற்றம் செய்தும் இலக்கியம் படைப்பது ஒரு மரபாக இருந்து வருகிறது.

தாழ்த்தப்பட்ட சாதியினர் சமூகக் கொடுமைகளுக்கு உள்ளாகின்ற நிலை நீடித்திருக்கும் வரை, நந்தன் கதை மறுபரிசீலனை செய்யப்பட்டு புதிய கருத்துக்களுடன் மறுவார்ப்பு செய்யப்படுகிறது இயல்பே. இருபதாம் நூற்றாண்டில் வெவ்வேறு கால கட்டங்களில் வெவ்வேறு கலை இலக்கியப் படைப்பாளிகள் நந்தன் கதையை எப்படிப் பயன்படுத்தினர் என்பதையும் அவை எந்த அளவிற்குக் காலத் தேவையை நிறைவேற்றின என்பதையும் இந்நூல் திறம்பட எடுத்துரைக்கிறது.

* * * * * * *

உத்திராபதி அவர்களின் இந்த ஆராய்ச்சி நூலின் சிறப்பு தான் கூற வந்த பொருளை ஓரளவு பூரணமாக எடுத்துரைத்து அதன்பின் விவாதித்திருப்பது. இந்த விவாதத்திலும் உணர்ச்சி வசப்படாமல் அவருடைய வாதங்களையும் கண்டுபிடிப்புகளையும் அனுமானங்களையும் தெரிவிக்கும் அவருடைய பாங்கு அவருடைய நூலின் நம்பகத்தன்மையை மிகவும் உயர்த்தி விடுகிறது.

— அசோகமித்திரன்.

* * * * * * *

... இந்த நூலைப் படிக்கும்பொழுது, இது பத்தோடு பதினொன்று என்று எண்ணிச் செல்ல வேண்டிய ஒரு நூலாகப் படவில்லை, ஆய்வாளரின் ஈடுபாடும் முயற்சியும் நமது கவனத்தை ஈர்க்கிறது.

இன்குலாப் — [illegible]

* * * * * * *

20 ஆம் நூற்றாண்டில் நந்தன் கதை எவ்வாறு காலச் சூழலின் மாற்றங்களுக்கேற்ப கையாளப்பட்டுளது என்பதை நூல் திறம்பட விளக்குகிறது. செய்திகளைத் திரட்டி, தொகுத்து, வகைப்படுத்தி, தக்க ஆராய்ச்சி முடிவுகளைக் கூறும் ஆசிரியரின் திறன் பாராட்டத்தக்க வகையினது.

சிலம்பொலி செல்லப்பன்